# சங்க இலக்கியத்தில் உயிர்நேயம்

முனைவர் (பிஎச்.டி.) பட்டப் பேற்றிற்காக
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


**ஆய்வாளர்**

**வே. கீதப்ரியா** , எம்.ஏ., எம்.ஃபில்.,

**நெறியாளர்**
முனைவர் **ஒப்பிலா மதிவாணன்**
உதவிப்பேராசிரியர்

## தமிழ்த்துறை

## தொலைதூரக் கல்வி நிறுவனம்

## சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை-600 005


**ஏப்ரல் - 2012**

**முனைவர் ஒப்பிலா. மதிவாணன்**
உதவிப் பேராசிரியர்
தமிழ்த்துறை
தொலைதூரக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்லைக்கழகம்
சென்னை – 600 005.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

முனைவர்ப் பட்ட ஆய்வாளர் வே. கீதப்ரியா அவர்கள் "சங்க இலக்கியத்தில் உயிர்நேயம்" என்னும் தலைப்பில் முழுநேர ஆய்வாளராக இருந்து உருவாக்கியுள்ள இவ்ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், தொலைதூரக் கல்வி நிறுவனத்தின் தமிழ்ப்பிரிவில் என் மேற்பார்வையில் நிகழ்த்தப் பெற்ற ஆய்வாகும். இந்த ஆய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப்பெறவில்லை என்று சான்றளிக்கப் பெறுகிறது.

சென்னை – 600 005
நாள்: 17.04.2012

(ஒப்பிலா. மதிவாணன்)
17.04.12

OPPILA. MATHIVANAN, Ph.D.,
Assistant Prof. of Tamil
Institute of Distance Education
University of Madr...

**வே. கீதப்ரியா**
முனைவர்ப் பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
தொலைதூரக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை – 600 005.

## ஆய்வாளர் உறுதிமொழி

**“சங்க இலக்கியத்தில் உயிர்நேயம்”** என்னும் தலைப்பில் முனைவர்ப் பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்தப் பட்டப்பேற்றிற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

சென்னை – 600 005.
நாள்: 17.04.2012

(வே.கீதப்ரியா)

# நன்றியுரை

தென்னிந்தியாவின் தாய் பல்கலைக்கழகமாக விளங்கிக் கொண்டிருக்கும் சென்னைப் பல்கலைக்கழகத்தில் முனைவர்ப் பட்ட ஆய்வு மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த பல்கலைக்கழகத்தின் **மாண்பமை துணைவேந்தர்** அவர்களுக்கும் **ஆளவை மன்றம்** மற்றும் **ஆட்சிக்குழு உறுப்பினர்களுக்கும்** நன்றியினையும் வணக்கத்தினையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

'சங்க இலக்கியத்தில் உயிர்நேயம்' என்னும் பொருளில் ஆய்வு செய்வதற்கு ஒப்புதல் அளித்த, சென்னைப் பல்கலைக்கழகத் தொலைநிலைக் கல்வி இயக்குநர் **முனைவர் வே. தங்கராசு** அவர்களுக்கும் முன்னை இயக்குநர் **திரு கு.மோகன்ராம்** அவர்களுக்கும் எனது உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை ஆய்வு மாணவியாக ஏற்றுக்கொண்டதினாலேயே பல்வேறு இடர்களுக்கு இடையினில் பயணித்தும், ஆய்வு நெறிக்கு மட்டுமில்லாது வாழ்வு நெறிக்கும் வழிகாட்டி என்னைச் செப்பனிட்டு வரும் உதவிப் பேராசிரியர் **முனைவர் ஒப்பிலா மதிவாணன்** அவர்களுக்கு எனது மனமாழ்ந்த மற்றும் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்தலைப்பினைத் தெரிவு செய்து கொடுத்துதவிய முனைவர் **வ.ஜெயதேவன்** அவர்களுக்கு எனது பணிவார்ந்த நன்றிகள்.

உருஉயிர் கொடுத்து ஆளாக்கிய கடமையினை மட்டுமின்றி உள்ள அன்பினையும் சமூகப் பண்பினையும் கற்றுக் கொடுத்த முதல் ஆசிரியரும், என்னைப் பெற்றோருமான **திரு சி.என்.ஆர். வேலவன், திருமதி சுசீலா வேலவன்** அவர்களுக்கு எனது நன்றிகள்.

எனக்குப் பின் பிறந்திருந்தாலும், முன் நின்று வழிகாட்டியாக, தோழனாக, தோள் கொடுத்துதவும் என்னருமை தம்பி **இர. கார்த்திக்** அவர்களுக்கு பாசமிக்க நன்றிகள்.

முகத்தின் கண்கள் போல அகத்தின் கண்களாக நின்று என் பயணப் பாதையினைத் தெளிவுறுத்தி நிற்கின்ற என் தமையன்மார் **திரு கோகுலக்கண்ணன்** மற்றும் **திலக் சக்ரவர்த்தி** ஆகியோருக்கு எனது கனிவுமிக்க நன்றிகள்.

வாழ்வில் தளர்வுற்ற வேளையினில் நட்பின் பயனை நுகர உதவிய **திருமதி சிவகாமி ராஜ்குமார், திருமதி அம்பிகேஸ்வரி, செல்வி உஷாராணி** ஆகியோருக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

இவ்வாறு நேர்முகமாக, நேர்முறையாக உதவிய பல நல்லுள்ளங்களுக்கு மத்தியில் எதிர்மறையாக செயல்பட்டு எனது வளர்ச்சிக்கு மறைமுகமாக உதவிய நல்லுள்ளங்களையும் நான் நினைக்கத் தவறவில்லை.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இ.ப. | - | இரண்டாம் பதிப்பு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| உ.வே.சா. | - | உ.வே.சாமிநாதையர் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| த.வா.கோ. | - | தஞ்சை வாணன் கோவை |
| குறள். | - | திருக்குறள் |
| தொல்.பொருள்.கள. | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் களவியல் |
| தொல்.அகம்.நூ. | - | தொல்காப்பியம் அகத்திணையியல் நூற்பா |
| நச்.உ. | - | நச்சினார்க்கினியர் உரை |
| நற். | - | நற்றிணை |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| பரி. | - | பரிபாடல் |
| புறம். | - | புறநானூறு |
| பொ.வே.சோ. | - | பொ.வே.சோமசுந்தரனார் |
| மலை. | - | மலைபடுகடாம் |
| மேலது. | - | மேற்சுட்டிய நூல் |

# பொருளடக்கம்

# முன்னுரை

இலக்கியங்கள் மனித வாழ்க்கையை மொழியின் மூலமாக விளக்கிக் காட்டுவன என்பார் திறனாய்வாளர் அட்சன். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்ககாலத்தில் தமிழ்மக்களின் நாகரிகம், பண்பாடு, உயிர்நேயம், வாழ்வியல் விழுமியங்கள், அனையவை சிறப்புற்று விளங்கின. அவை பாட்டும் தொகையுமாகப் பகுக்கப்பெற்றுள்ள பத்துப்பாட்டு மற்றும் எட்டுத்தொகையுள் இடம் பெற்றுள்ளன. பாட்டு என்பது பத்துப்பாட்டு நூல்களையும் தொகை என்பது எட்டுத்தொகை நூல்களையும் குறிப்பதாகும். இப்பதினெட்டு சங்க இலக்கியப் பனுவல்களும் பதினெண் மேல்கணக்கு நூல்கள் என்று வழங்கப்பெறும். "ஐம்பது முதலா ஐநூறு ஈறா..." என்று தொடங்கும் பன்னிரு பாட்டியல் அடிகள் இதனைத் தெள்ளிதின் விளக்கும்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் சங்க இலக்கியத்திற்கென்று தனிச்சிறப்புண்டு. தொன்மையும் பண்பாட்டுக் கூறுகளும் அதில் பொதிந்து இருப்பது அதன் சிறப்புக்குரிய அடிப்படையாகும். ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றி இற்றைநாள் காணும் பல்வேறு ஆய்வுகளுக்கு இடமளிக்கும் தனித்தன்மை சங்க இலக்கியத்திற்குண்டு. அகத்துறையிலும் புறத்துறையிலும் செய்யப்படும் ஆய்வுகள் பழந்தமிழ்ச் சமூகத்தின் பல்வேறு போக்குகளை எடுத்துக்காட்டுவதாக உள்ளது. இலக்கியம் சமூக வளர்ச்சியின் ஓர் அடையாளமாகவும் உள்ளது.

> இலக்கிய உருவாக்கம் இல்லாத எந்த ஒரு சமூகமும் உருவாக்கம் பெற்று விட்டதாகக் கொள்ள முடியாதென்பது தெள்ளத் தெளிவாகின்றது. சமூக உருவாக்கத்திற்கு இலக்கிய உருவாக்கம் ஓர் அங்கமாகும். வேறொரு முறையில் சொல்வதானால் தனக்கென ஓர் இலக்கியம் இல்லாத சமூகம் உண்மையான கருத்தில் ஒழுங்கமைக்கப்பெற்று விட்டதாகக் கூற முடியாது. இலக்கியம் என்பது எழுதப்பட வேண்டியதில்லை. அது அடிப்படையில் வாய்மொழி நிலைப்பட்டதே எனும் உண்மையை இக்கட்டத்திலே நினைவுறுத்திக் கொள்ளுதல் அவசியமாகும்[1]

என்பர் கா.சிவத்தம்பி.

பண்பாட்டுப் பெருமைகளை உள்ளடக்கிய சங்க இலக்கியங்கள் தமிழ்ச் சமூக அமைப்பை வெளிப்படுத்துகின்றவையாகவும் விளங்குகின்றன. அகவாழ்வு, அரசியல் வாழ்வு, கல்வி, நாகரிகம் போன்ற அனைத்திலும் முன்னோடியாக இருந்த சமுதாயம் தமிழ்ச்சமுதாயம் என்பதை விளக்கும் கு.வெ.பாலசுப்பிரமணியன்,

> தமிழர்களின் வாழ்க்கை முறையினையும் பண்பாட்டு நிலையினையும் தமிழிலுள்ள சொற்கோவை இனிது எடுத்துக்காட்டுகிறது. வைகறை, விடியல், காலை, பகல், நண்பகல், மாலை, அந்தி, இரவு, நள்ளிரவு, நாள், நடுநாள், வைகல் உலா, பருவம் எனக் காலத்தையும் நேரத்தையும் பகுத்துணர்ந்தமை. மழையைக் குறித்து எழிலி, கார், கொண்டல், கொண்மூ, செல், புயல், மஞ்சு, மாரி, முகில், மை, வான் என அதன் பல நிலையைக் குறித்தும் சொற்கள் வழங்குகின்றமை ஆகியன இயற்கையை ஒட்டிய அவர்களின் வாழ்நெறியையும், இயற்கையின்பால் கொண்ட கூர்ந்த நோக்கினையும் காட்டுகின்றன[2]

எனக் குறிப்பிடுகின்றார். சங்க இலக்கியங்களைத் தொகுத்து வகைப்படுத்தி வெளியிட்டவரும் சங்க இலக்கிய ஆய்விலும் கால ஆய்விலும் முன்னோடியாக விளங்கியவருமான பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை, தமிழ் இலக்கியச் சிறப்பினையும் அதன் சமூக உள்ளடக்கத்தினையும் தெளிவாக்கியுள்ளார். மனித வர்க்கத்தை வெளிப்படுத்தும் ஆற்றல் இலக்கியத்திற்கிருப்பது பற்றி அவர்,

> ஓர் இலக்கணம் கருதியது அனைத்தையும் நாம் முற்ற உணர வேண்டுமாயின் இங்கே குறித்த சூழ்நிலைகள் அனைத்தையும் நாம் நன்கு ஆராய்ந்து அறிதல் வேண்டும். எனவே இலக்கியத்தின் சுவையை நுகர்தல் இன்றியமையாததாயுள்ளது போலவே, அதன் இயல்பைப் பகுத்துணர்தலும் இன்றியமையாததாம். இதற்கு முதற்படியாக, இலக்கியத்தின் முக்கிய இயல்புகள் எவை எனத் துணிதல் நலமாகும்[3]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

சங்க இலக்கியத்தின் தனிச்சிறப்பை ஆய்வாளர்களும் துறை அறிஞர்களும் பல்வேறு கருதுகோள்களைக் கொண்டு விளக்கியுள்ளனர். சங்க இலக்கியங்களில் அடங்கிக் கிடக்கும் கருத்துப் பதிவுகள் குறித்து ந.சுப்பிரமணியன். தம் நூலொன்றில் விளக்குகிறார். சங்க இலக்கியங்கள் பழந்தமிழ் மக்களின் உயர்பண்புகளை விளக்குவனவாக அமைவதையும் அவர் சுட்டிக் காட்டுகிறார்.

> சங்கத் தமிழர் அநியாய அதர்ம யுத்தத்தை என்றுமே போற்றியதில்லை என்பது உண்மையேயாம். குறளில் களிற்றொடு நின்று தோற்பது முயல் வேட்டையில் செல்லுவதைவிடச் சிறந்தது என்று கூறப்படும். இதற்கு உரையாசிரியர், இக்கூற்று தோற்றானைத் தொடர மறுத்துப் பகையரசனோடு போராடும் ஒரு வீரனுடைய கூற்று என்பார் வடமொழிக் கருத்துக்களைக்கூறும் கௌடில்யர், காமந்தகர் என்போர் கூற்றுக்களைவிட இவை சிறந்தவை என்பது ஏற்றுக் கோடல் வேண்டும். கௌடில்யர் போரினை 1. தர்மயுத்தம் 2. கூடயுத்தம் என்று பிரிப்பர். முந்தியது அறப்போர். பிந்தியது கொடிய ஏமாற்று முறைப்போர். காமந்தகர் கௌடில்யரைப் பின்பற்றுகிறார். அவர் போரில் வெற்றி காண்பதே குறியாயின் அநியாய அறநெறிக்கும் புறம்பான போர் முறைகளைத் தடுக்க வேண்டாம் என்னும் கொள்கையினர்[4]

எனக் குறிப்பிடுகின்றார். இது பண்டைத் தமிழரின் மனிதநேயப் பண்பைச் சுட்டும்.

இவ்வகையில் உற்றுநோக்கும் பொழுது ஆய்விற்குரிய பல்வேறு கருத்துக் களங்கள் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றிருக்கின்றன என்பதை அறியமுடிகின்றது.

## ஆய்வுப்பரப்பு

தமிழ் இலக்கிய வரலாற்றில் சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், சிற்றிலக்கியம், நவீன இலக்கியங்கள் எனப் பல்வேறு இலக்கிய வகைகள் சுட்டப்பெறுகின்றன. நாளுக்கு நாள் இவ்விலக்கிய வகைகள் வளர்ந்த

வண்ணமிருக்கின்றன. இந்த நெடிய இலக்கியத் தொடர்ச்சி இவ்ஆய்வின் பரப்பாகும்.

**ஆய்வுக்களமும் கருதுகோளும்**

சங்க இலக்கியங்களில் 'உயிரிரக்கம்' என்பது ஆய்வுக்களமாகத் தேர்வு செய்யப்பெற்று, அப்பண்பினைச் சங்க இலக்கியத்தின் வழி ஆராயந்து பழந்தமிழரின் உயிர்நேய மாண்புணர்வினைப் பதிவு செய்தல்.

**ஆய்வெல்லையும் ஆதாரங்களும்**

சங்க இலக்கியங்கள் எனக் கூறப்பெறும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்ற பதினெண் நூல்களும் இவ்ஆய்வின் எல்லையாகக் கொள்ளப் பெற்றுள்ளன. இவையே முதன்மை ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளன. சங்க இலக்கியம் குறித்த ஆய்வு நூல்களும் மனிதநேயம் குறித்து வெளிவந்துள்ள நூல்களும் துணை ஆதாரமாக அமைகின்றன.

**ஆய்வின் தேவையும் நோக்கமும்**

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் வரிசை அகம், புறம் பற்றிய செய்திகளை உள்ளடக்கியதாகும். களவு, கற்பு, புகழ், வீரம் போன்ற தனிக்கூறுகள் இவ்விலக்கியங்களின் வழி ஆய்வு செய்யப்பட்டுள்ளன. தமிழரின் காதல் வாழ்க்கை, போர் வாழ்க்கை எனவும் திணை, துறைகள் எனவும் பல்வேறு பொருள்களில் தமிழுக்கேயுரிய தனித்தன்மைகள் இதுவரை ஆய்வு செய்யப் பெற்றுள்ளன. தமிழ் இலக்கியங்களின் அடிப்படையில் குறிப்பாகச் சங்க இலக்கியங்களைக் கொண்டு உலகளாவிய நிலையில் உயிரிரக்கச் சிந்தனை என்ற வகையில் இவ்ஆய்வு மட்டுமே தற்போது மேற்கொள்ளப் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

**ஆய்வின் கருதுகோள்**

தமிழர்களின் அகம் மற்றும் புறம் சார்ந்த வாழ்வை மட்டுமே விளக்காமல் உலகளாவிய கருத்துகளையும் சங்க இலக்கியங்கள் பதிவு செய்கின்றன என்பது இவ்ஆய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு அணுகுமுறை**

விளக்கமுறைத் திறனாய்வு, ஒப்பியல்முறைத் திறனாய்வு மற்றும் பகுப்புமுறைத் திறனாய்வு அடிப்படையில் இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

**ஆய்வின் அமைப்பு**

இவ்ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களாகப் பகுக்கப்பட்டிருக்கிறது.

1. மனிதர்கள்பால் உயிர்நேயம்
2. தாவரங்கள்பால் உயிர்நேயம்
3. விலங்குகள்பால் உயிர்நேயம்

முதல் இயல் '**மனிதர்கள்பால் உயிர்நேயம்**' என்பதாகும். இவ்வியலில் முதற்கண் உயிரிரக்கம் என்பதன் விளக்கம் தரப்பெற்றுள்ளது. இதனையடுத்து அன்புணர்வு என்பது விளக்கப்பட்டுள்ளது. இரக்க உணர்வு என்ற தலைப்பு அடுத்து அமைந்துள்ளது. மனிதர்கள் பிற மனிதர்களிடம் காட்டும் அன்பும் ஒருவர் துன்பத்திற்கு மற்றவர் உதவும் பண்பும் அத்துயரை வெளிக்காட்டும் முறைகளும் இதன்கண் விளக்கப்படுகின்றன. பசித்துயர் போக்கல் என்ற பகுதியில் பிறர் பசிகண்டு வருந்தும் மனப்பான்மை வெளிப்படுத்தப்பட்டுள்ளது. ஈகையைச் செய்த மக்களும் அவர்தம் வாழ்க்கைச் சூழலும் இதில் விளக்கப்பட்டுள்ளன. இவற்றையடுத்து மன்னர்கள் செய்த கொடைத்திறம் விளக்கப்பட்டிருக்கிறது. கொடை வழங்கும் மன்னர்கள் மேற்கொண்ட ஒழுகலாறுகள்

விளக்கப்பட்டுள்ளன. நட்பின் இலக்கணம், நட்பின் மேன்மை சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள பான்மையும் அடுத்து எடுத்தியம்பப்பட்டுள்ளன. நட்பும் ஒருவர் பிறர்க்குச் செய்த உதவிகளும் நிகழ்வதன் வெளிப்பாடுகள் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வியல் இறுதியில் மனிதாபிமானம் பண்டைத் தமிழர்களிடையே நிலவி வந்ததைச் சங்கப் பாடல்களின்வழி எடுத்தியம்பப்படுகின்றன.

இரண்டாம் இயல் '**தாவரகங்கள்பால் உயிர்நேயம்** ' என்பதாகும். இவ்வியலில் தாவரங்களிடத்துப் பண்டைத் தமிழர்கள் காட்டிய உயிரிரக்கத்தின் பொருண்மை விளக்கப்படுகிறது. அடுத்து மலர்களை மக்கள் போற்றிய முறையும் மலர்கள் மீது அவர்கள் கொண்டிருந்த இரக்க உணர்வுகளும் விளக்கப்படுகின்றன. மலர்களுக்குப் பிற உயிர்களால் ஏற்பட்ட இன்னல்களும் அவற்றைக் கண்ட மக்கள் அடைந்த துயர்களும் விளக்கப்பட்டுள்ளன. மரங்களிடத்து மக்கள் காட்டிய இரக்க உணர்வுகளும் விளக்கப்பட்டுள்ளன. மரங்களுக்கு விலங்குகளால் ஏற்பட்ட அழிவுகளும் அதனை மக்கள் தடுத்து பாதுகாத்த முறைகளும் விளக்கப்பட்டுள்ளன.

வெய்யிற் கொடுமையால் மரங்கள் அடைந்த இன்னல்கள் புலவர்களால் பாடப்பெற்றிருக்கின்றன. அதற்காக மக்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகளும் விளக்கப்பட்டுள்ளன. பயிர் பாதுகாப்புச் சங்க கால மக்களால் செய்யப்பெற்ற முறைகள் விளக்கப்பட்டிருக்கின்றன. பயிர்களையடுத்துச் செடி கொடிகள் பாதுகாப்பிற்கெனப் பண்டைத் தமிழர்கள் செய்தவை விளக்கப்படுகின்றன. உணவு தானியங்கள் அழிவுபடாது காக்கும் முயற்சியில் மக்கள் இறங்கியதும் அதற்காக அவர்கள் செய்த செயல் திட்ட முறைகளும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

மூன்றாம் இயல் ‘விலங்குகள்பால் உயிர்நேயம் ,’ என்பதாகும். விலங்குகளைப் பலவகையாகப் பண்டைத் தமிழர் பிரித்த செய்தி இதன்கண் கூறப்படுகின்றது. யானைகளுக்குப் போரின்கண் ஏற்பட்ட புண்ணும் அதனால் ஏற்பட்ட வலியில் அவைபடும் துயரத்தையும் எண்ணி மக்கள் வருந்தினர். கன்றுகள், வயது முதிர்ந்த காளைகள் போன்றவற்றைப் பண்டைத் தமிழர்கள் பாதுகாத்து வந்துள்ளனர். மாடுகளை குறிப்பாகப் பசுக்களை மிகவும் போற்றிப் பாதுகாத்தனர். இல்லத்தை விட்டு வெளியிடங்களுக்கு ஓட்டிச் சென்று அவற்றை மேயவிட்டனர். விலங்குகளுக்கு நீர்வேட்கை ஏற்படுவதை அறிந்து அவை மேய்ந்த இடத்திலே நீரூற்றுத் தோண்டி நீர்ப்பருகச் செய்தனர்.

விலங்குகளிடம் மக்கள் கொண்டிருந்த அன்பைப் புலவர்கள் கதைகளாகவும் உவமைகளாகவும் சொல்லி விளங்க வைத்தனர். கற்புநெறிக்கும், அன்பிற்கும் விலங்குகள் எடுத்துக்காட்டுகளாகத் தரப்பெற்றுள்ளன. கட்டப்பட்டிருந்த இடங்களில் அவை உண்பதற்கு ஏற்ற உணவுப் பொருள்கள் தரப்பட்டன. போரில் ஈடுபட்டு வரும் யானைகள் மன்னனால் புகழப்பட்டு அவை தனிக்கவனம் செலுத்தப்பட்டன. யானைகளைக் கட்டுவதற்கென்று தனி இடங்கள் அரண்மனைக்கருகிலேயே அமைக்கப்பட்டிருந்தன. புலவர்கள் யானை, குதிரை போன்ற விலங்குகளைப் பாராட்டிப் பாடியுள்ளனர்.

முன்னுரையை அடுத்து முடிவுரை தரப்பட்டுள்ளது. முடிவுரைக்குப் பின்னர் ஆய்விற்குப் பயன்படுத்தப்பெற்ற துணைநூற் பட்டியல் அமைக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு இயல்களின் ஆய்வுகளிலும் அமைக்கப்பெற்ற செய்யுள்களின் எண்கள் அந்தந்த இடங்களில் அடைப்புக் குறிகளுக்குள் தரப்பெற்றுள்ளன. ஆய்வு நூலல்லாத பிற நூல்களிலிருந்து எடுத்தாளப்பட்ட செய்யுட்களுக்குரிய எண்கள் சான்றெண் விளக்கப்பகுதியில் தரப்பெற்றுள்ளன.

## சான்றெண் குறிப்புகள்

1. கா.சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, ப.13.
2. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாய அமைப்பு, ப.7
3. எஸ்.வையாபுரிப்பிள்ளை, இலக்கியச் சிந்தனைகள், பக்.10–11.
4. ந.சுப்பிரமணியன், சங்க கால வாழ்வியல், ப.168.

# இயல் 1

# மனிதர்கள்பால் உயிர்நேயம்

மனித இனம் தோன்றி வளர்ந்து பல்வேறு மாற்றங்களைக் கண்டுள்ளது. அறிவியல், பண்பாடு, நாகரிகம் போன்ற பல்வேறு வளர்நிலைக் கூறுகள் சமூகத்தில் உருவாகியுள்ளன. எல்லா வளர்ச்சியும் ஓர் அடிப்படை அலகைத் தன்னகத்தே கொண்டு வளர்ந்துள்ளதை வரலாற்றில் காணமுடியும். அந்த அடிப்படை அலகு 'மாந்தநேயம்' என வெளிப்படையாகவே சொல்லப்பட்டிருக்கிறது. மாந்தநேயம் என்னும் பண்பாட்டுக் கலைச்சொல் பல்வேறு உட்கூறுகளைக் கொண்டது. ஒவ்வொன்றும் உயிர்த் துடிப்புடைய ஒன்றாகக் காணப்படுகிறது. இதன் வளர்ச்சியால் மனிதநேயம் முழுமை அடைகிறது. அவற்றுள் ஒன்றாக 'உயிர்இரக்கம்' காணப்படுகிறது. எல்லாவிதப் பண்பாட்டு உயர் நெறிமுறையிலும் பிற உயிர்மீது காட்டுகிற இரக்கப்பண்பே முக்கியமாக விளங்குகிறது. மனித சமூகம் இன்றைக்கு உயர் வளர்ச்சியைப் பெற்றிருப்பதற்குக் காரணம் இந்த உயிரிரக்கப் பண்பு (Pityness on livings) எனக் கூறப்படுகிறது.

தமிழ்ச் சமூகத்தின் பழமையையும் பண்பாட்டையும் விளக்கும் அடையாளங்களாக விளங்குபவை சங்க இலக்கியங்களே ஆகும். சங்க இலக்கியங்களை ஆராய்வதன் மூலம் பழந்தமிழ்ச் சமூகத்தின் பண்பை நன்கறிய வாய்ப்புகள் உள்ளன. இந்த அடிப்படையில் பண்டைத் தமிழர் ஒருவருக்கொருவர் அன்பு காட்டி வாழ்ந்தமையும் பிறர் துன்பங்கண்டு இரங்கியமையும் அவ்இரக்கப் பண்பை வெளிப்படுத்த அவர்கள் மேற்கொண்ட இரக்கச் செயல்களையும் சங்க இலக்கியத்தின்வழி விவரிப்பதாக இவ்இயல் அமைகிறது. இவ்வியல் பின்வருமாறு பகுக்கப்படுகிறது.

1. அன்புணர்வு
2. இரக்கவுணர்வு
3. பசித்துயர் போக்கல்
4. ஈகை
5. கொடை
6. நட்பும் உதவியும்

இக்கூறுகளின் அடிப்படையில் சங்க இலக்கியங்களில் காணப்பெறும் தகவல்கள் தொகுக்கப் பெற்று ஆராயப்படுகின்றன.

மனிதர்கள் சமூகமாகச் சேர்ந்து வாழும் இயல்பினை உடையவர்கள். இந்தக் கூட்டுவாழ்க்கை முறையைச் சமூக வாழ்க்கை எனக் கூறுவர். சமுதாயமாக மனிதன் சேர்ந்து வாழ்தல் என்பது தேவையின் அடிப்படையில் எழுந்ததாகும். தனித்தனியாக வாழவியலாத நிலை உருவாகிய சமயத்தில் சமூக உருவாக்கம் தோன்றிற்று எனலாம். சமூக உருவாக்கத்தைத் தொடர்ந்து அரசுருவாக்கம் (Orgin of State) ஏற்பட்டது. தமிழ் ஐந்திணை வாழ்க்கையில் முல்லைத்திணை அரசுருவாக்கத்தின் அடையாளம் என்பர்.[1] ‘அரசு, குடும்பம் தனிச்சொத்து’ என்ற தமது நூலில் அரசமைப்பாக்கம் குறித்து எங்கெல்ஸ் விவரிக்கிறார். அரசுக்கு முன்னர் அமைந்த குடும்பமே தனிச் சொத்துக்கும் காரணம் என்பதை விளக்குகிறார். அனைத்து அதிகாரங்களும் குடும்பத்திலிருந்தே உருவாகிறது என்பது அவர் கருத்து. குடும்பத் தலைவனின் வழிப் பொருளாதார உற்பத்திமுறை அமைவதால் எல்லாக் கட்டுப்பாடுகளும் அதனை அதிகாரம் செய்பவர்பால் சார்ந்து அவரே தலைமை வகிக்கிறார். உற்பத்திக் கருவிகள் யாரைச் சார்ந்திருக்கின்றனவோ அவருக்கே உற்பத்தியின் மீதுள்ள அதிகாரமும் கிடைத்துவிடுகிறது.[2]

எனவே அரசு உருவாவதற்கு அடிப்படையாக இருப்பது சமுதாயத் தொழில்முறை உறவு என்பதைத் தெளியலாம். இவ்வாறு அரசு தோன்றியபின்

நிலவிய நிலவுடைமைச் சமூகத்திலும் அதற்குப் பின்னர் அங்கீகரிக்கப்பட்ட பொதுவுடைமை அகிலத்திலும் (Communist World) மனிதர்களின் நெகிழ்வு உணர்வாகிய இரக்கம் அல்லது கருணை என்பன சமூக மக்கள் யாவர்க்கும் வேண்டும் பண்புகளாயின.

சங்க இலக்கியங்கள் அனைத்தும் நிலவுடைமைச் சமூக ஆக்கப் பிரதிகளாகும். ஏதேனும் ஒருவகையில் அவை தனியுடைமையையும் நிலவுடைமைப் பொருளியல் உற்பத்தி உறவுகளையுமே வெளிப்படுத்தும் இயல்பு உடையன.[3] இவ்விலக்கியங்களின் ஊடே பொதிந்து கிடக்கும் கருத்துகளைத் திறந்து ஆராய்கையில் மனிதாபிமானமும் உயிரிரக்கமும் வேறுவேறு சொற்களால் சுட்டப்பட்டிருக்கின்றன. இவை சுட்டப்படும் சூழலும் நோக்கமும் எண்ணி ஆராயத்தக்கன. இக்கருத்துகளை எடுத்துக்கூறப் பயன்படும் இலக்கிய உத்திகளும் இலக்கிய வகைமைகளும் புனைவுகளும் சேர்ந்த கூட்டு உணர்வாகவே உயிரிரக்கம் அல்லது உயிர் நேயப் பண்பு அமைந்துள்ளது.

### 1.1. அன்புணர்வு

அன்பின் வேறு வடிவமாக உயிரிரக்கப் பண்பு மனிதர்களிடத்தில் காணப்படுகிறது. பண்டைத்தமிழ் இலக்கியங்கள் யாவும் 'அன்பை' அடிப்படையாகக் கொண்டவை. பிசிரற்ற நீதிக் கருத்துகளைப் போலவே அன்பின் ஐந்திணை கூறப்பட்டுள்ளது. பெருந்திணை, கைக்கிளை, போன்ற திணைகள் புறனடை போலச் சுட்டப்பட்டனவேயன்றி அவை அன்பின் ஐந்திணைக்குச் சிறிதும் தொடர்பற்றவை என்பதை அறியலாம். பெருந்திணை இலக்கண விதிக்கு இருப்பிடமும் அது கூறப்பட்டமைக்குக் காரணத்தையும் விளக்க வந்த நச்சினார்க்கினியர்,

> அகத்திணை இலக்கணம் கூறி, ஐந்து வகை நிலங்களும் அவற்றிற்குரிய
> தெய்வங்களையும் கூறி முதற்பொருள், கருப்பொருள் ஆகியனவும்

> கூறிப் பின்னர் இவற்றுடன் தொடர்புடைய கைக்கிளை,
> பெருந்திணையை இறுதியிற் கூறுகின்றார்[4]

என்று விளக்கமும் எழுதியுள்ளார். அகத்திணை முழுதும் அன்பின் ஐந்திணையாய் இருத்தலின், இவ்விலக்கணம் வேண்டா என்பார்க்கு அஃதன்று என உரைத்தற் பொருட்டு கூறியதாக இதனைக் கொள்ளலாம்.

ஆசிரியர் நச்சினார்க்கினியரின் கருத்து அன்பின் ஐந்திணை பெறும் சிறப்பையும் அகத்துறையில் அது பெற்றிருக்கும் முக்கியத்துவத்தையும் உணர்த்தும். இவ்வாறு அன்பையே அடிப்படையாகக் கொண்டு அனைத்தையும் பெற்ற சமூகமாகப் பண்டைத் தமிழ்ச் சமூகம் இருந்தது. அன்புணர்வு என்பது ஒரு மனிதன் பிறிதொரு மனிதனிடம் காட்டும் இரக்கம் ஆகும். இந்த இரக்க உணர்வே நட்பு, காதல், கூட்டுறவு, தோழமை எனப் பல பெயர்களால் காலத்திற்கேற்றவாறு வழங்கப்பட்டது. மனம் விரும்பும் இருவர்க்கிடையிலும், தாய் தந்தை என்ற உறவிலும் பிற உறவுகளிலும் அன்பே மையமாக இருந்து மனித வாழ்வை இயக்குகின்றது.

சங்க இலக்கியத்தில் இந்த இரக்கப்பண்பு தாய், தந்தையர், உடன்பிறந்தார், நண்பர், நற்றாய், செவிலி போன்றோரிடையிலும் நாடாளும் மன்னரிடத்திலும் வேறு சில மக்களிடத்திலும் காணப்படுகிறது.

இளம்பெண்கள் ஒருவருக்கொருவர் காட்டும் அன்புநெறி பழந்தமிழ் இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளமை காணத்தக்கது. தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்ளத் துணிந்தாள். அவ்வாறு சென்றால் தம் ஆயத்தினர் மிகவும் நோவர் என்றும் அவர்கள் மீது கொண்டுள்ள அன்புறவை இழக்க நேரிடுமென்றும் கருதி அச்செலவைத் தவிர்த்தனள்.

நெய்தரி இயக்கம் வெளிமுதல் முழங்கும்
வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கால்
அரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்
இவைகாண் டோறும் நோவார் மாதோ
அளியரோ அளியயர்என் ஆயத்தோர் (நற்., 12:3–8)

என்கிறார் அப்பெண். இந்நற்றிணைச் செய்யுள் தோழியரின் வருத்தத்தை எண்ணித் தலைவி வருந்தியதைக் கூறுகிறது. ஆயத்தர் நோவர், அளியர் என்பன தலைவியின் இரக்கப்பண்பை விளக்குவன.

தலைவன் பிரிவால் தலைவி மனம் வருந்தினாள். அதனால் உறக்கமிழந்தாள். அவளுடைய தோள்வளைகள் கழன்றன. இதனைக் கூற வந்த புலவர் தலைவியின் தோள்வளைகளே 'பழிக்கு அஞ்சின' என்கின்றார். பழிக்கஞ்சல் என்பது பிறர் சொல்லும் குற்றங்களுக்கு அஞ்சுவதாகும். பின்னர்த் தோழியரோடு விளையாடுதலயும் அவள் மறுத்தாள். அன்னையின் கடிசொல்லுக்கும் அஞ்சுகிறாள். இவ்வாறு தலைவி அடையும் மனத்துயரைத் தோழி தெரிவிக்கின்றாள். இது தலைவியின் துன்பங்கண்டு வருத்தமுறும் தோழியின் மனநிலயைக் காட்டுவதாகும். இதுவும் அன்புணர்ச்சியால் ஏற்படும் விளைவாகும். தோழி தலைவிபால் கொண்ட அன்பினை,

தொடிபழி மறைத்தலின் தோளுய்ந் தனவே
வடிகொள் கூழை ஆயமொ டாடலின்
இடிப்பு மெய்யதொன் றுடைத்தே கடிக்கொள
அன்னை காக்கும் தொன்னலம் சிதையக்
காண்டொறும் கலுழ்தல் (நற்., 23:1–5)

என்று தோழி கூறுவதாகச் செய்யுள் பாடப் பெற்றிருக்கிறது. இத்தொடர்கள் யாவும் தலைவியின் வருத்தத்தை எடுத்துக் கூறுவன. தோழியின் அன்புணர்விற்கும் அடையாளமாகின்றன.

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்[5] (குறள் 71)

என்ற குறள் கூறுமாறு தோழியின் சொற்கள் அவள் தலைவிபாற்கொண்ட அன்பையும் பொதுவான இரக்க மனநிலையையும் காட்டுகின்றன.

தாய் மக்களிடம் காட்டும் அன்பு ஒப்புயர்வற்றது. புற இலக்கியங்களிலும் இது கூறப்படும். பகையரசர்களால் அழிக்கப்பட்ட நாட்டு மக்களைத் 'தாயில் தூவாக் குழவி' என்கிறது புறப்பாடல்.

தலைவனை எண்ணி இராஅ முழுதும் தலைவி உறங்காதிருக்கிறாள். இதனை அறிந்த தாய் மனம் வருந்தி அவள் உறங்காதிருப்பதை உணர்த்தி உறங்கச் செய்கிறாள். தலைவி தான் அடைந்த வருத்தத்தையும் அதைக் கண்ட அன்னை உற்ற துயரையும் தோழியிடம் வெளிப்படுத்துகிறாள். தோழியை விளித்தே பாடல் தொடங்குகிறது.

கேளாய் எல்ல தோழி அல்கல்
வேணவா நலிய வெய்ய உயிரா
ஏமான் பிணையின் வருந்தினெ னாகத்
துயர்மருங் கறிந்தனள் போல அன்னை
துஞ்சாயோ என்குறுமகள் (நற்., 61:1–5)

என்கிறாள் தலைவி. இச்செய்யுள் தாயின் அன்புணர்வை வெளிப்படுத்துவது. இச்செய்யுளை நச்சினார்க்கினியர் தலைவி தோழிக்குக் கூறுவதாகக் கொண்டு,

துஞ்சாயோ எனத் தாய் கூறியவழி மனைப்பட்டுக் கலங்கியவாறும் படர்ந்தோர்க்கு என மறை உயிர்த்தவாறும் கண்படாக் கொடுமை செய்தானெனப் பரத்தமை கூறியவாறும் காண்க[6]

எனக் கூறுகின்றார்.

சில இடங்களில் தலைவி அன்னையிடமும் அன்னை தலைவியிடமும் கொண்ட அன்பும் வெளிப்படுகின்றன. தலைவன் தலைவியை வரைந்து கொள்ள வரவிருக்கிறான் என்ற செய்தியைச் செவிலித்தாய் தோழியிடம் கூறுகிறாள். அதற்காக அவளை 'அமிழ்தம் கிடைக்கப்பெற்று அதனை உண்டு வாழ்க' எனத் தலைவி வாழ்த்துகிறாள்.

அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆகப்
பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை (குறு., 43:1–2)

என்பது தலைவி கூற்று. அறவோர் பெறத் தகுந்த அமிழ்தத்தைச் செவிலி (அஃன்னை) பெறுமாறு தலைவி வாழ்த்தினாள்[7] என்பது இதன் உட்கிடக்கை. தலைவி தலைவன்பால் மிகுந்த அன்புடையவள். தான் கொண்ட அன்பு மிகப் பெரிது எனக் கூறவந்த தலைவி அவரினும் தமக்குரியார் பிறர் யாருமிலர் எனப் பகர்வாள்.

நன்னலந் தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரைய லவர்நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ தோழி
புலவியஃ தெவனோ அன்பிலங் கடையே (குறு., 43)

என்பது தலைவி கூற்றாக அமைந்தது. இஃது கற்புக் காலத்து உணர்வாக வெளிப்படுகின்றது. தலைவியைப் பிரிந்து பரத்தையர் மாட்டுச் சென்ற தலைவன் தோழியின் வழிக் கூட்டுவிக்க முயல்கிறான். இதனை அறியும் தலைவி தமக்குத் தாய் தந்தை போலத்தோன்றும் தலைவனே இவ்வாறு பரத்தைபாற் சென்றது

தகாதென்கிறாள். பிறிதொரு பாடலில் வரும் ‘அன்னையும் அத்தனும் அல்லரோ’ என்பது தலைவியின் அன்புள்ளத்தைக் காட்டும். தாம் விரும்பிய அத்தலைவனை ஏற்றுக் கொள்ளுதற்குத் தாயும் தந்தையும் விரும்புகின்றனர் என்பதை,

> யானும் காலென் யாயுநனி வெய்யள்
> எந்தையும் கொடீஇயர் வேண்டும் (குறு., 51:4–5)

எனத் தம் கூற்றால் மொழிகிறாள் தலைவி. அன்னை அன்பு மிகுதியால் தலைவியை இல்லில் வைத்துப் பாதுகாத்தாள் என்பதை, ‘ஆய் காத்தோம் பல்லே’ (குறு., 294:8) என்கிறாள் தலைவி. தலைவனுடன் உடன்போக்கை மேற்கொண்ட தலைவியை எண்ணி வருந்தும் செவிலி தன் அன்புள்ளத்தை,

> பிரிவி லாயம் உரியதொன் றயர
> இவ்வழிப் படுதலும் ஒல்லாள் அவ்வழிப்
> பரல்பாழ் படுப்பச் சென்றனள் மாதோ (குறு., 144:3–5)

எனக் கூறுகின்றாள். பரல்படு கானக வழியில் மகள் சென்றனள் என வருந்திக் கூறுவது இது.

சில நேரங்களில் தாயின் கட்டுப்பாடு மிகுதியாக அதனைத் தாங்கவியலாத தலைவி அன்புடனிருந்த தாய் இற்செறிப்பதை எண்ணி வருந்திக் கூறுவதும் உண்டு. ஓரிடத்தில் தலைவி தாயை “அறனில் தாய்” (குறு. 244:6) என்கிறாள். அறனில் தாயென்றது என்பது நீதியற்றவள் என்ற கருத்தாம். ‘அறனில் தாய்’ என்பது இரக்கமற்ற தாய் என்னும் பொருளை உணர்த்திற்று.

இரவில் உறங்கும்போது தாய் தன் மகளுக்கு அருகில் படுத்துறங்குகிறாள். அப்போது தாய் (செவிலியின்) கை தலைவியின் சடையைத் தொட்டுக் கொண்டு இருக்கத் தூங்கினாள் எனப் பாடப் பெற்றுள்ளது.

நிரையிதழ் பொருந்தாக் கண்ணோ டிரவில்
பஞ்சி வெண்திரிச் செஞ்சுடர் நல்லில்
பின்னுவீழ் சிறுபுறந் தழீஇ
அன்னை முயங்கத் துயிலின் னாதே (குறு., 353:4–6)

என்கிறாள் தலைவி. இது தாயின்அன்பை வெளிப்படுத்துவதாகும்.

தன் காதலை அறிந்த தந்தையைத் தலைவி அவனை அன்புடன் வாழ்க என வாழ்த்துகிறாள்.

திருந்துகோல் எல்வளை வேண்டியான் அழவும்
அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல
என்னை வாழிய பலவே (நற்., 136:1–5)

என்ற பாடலில் நோயறிந்து உதவும் மருத்துவன் போலத் தந்தை தன் காதல் அறிந்தனன் என்றும் ‘என்னை வாழ்க’ என்றும் வாழ்த்திக் கூறினாள்.

அன்புணர்வைக் காட்டுவது இன்சொற் பேசுதலாலும் நிகழ்கிறது. மகளைத் (தலைவியை) தினைப் புனத்திற்கனுப்பும் பெற்றோர் அன்பு கெழுமிய சொற்களைக் கூறியனுப்புகின்றனர். இரக்க உள்ளம் கொண்ட யாவர்க்கும் இன்சொல் கூறல் அடிப்படை என்பதை நற்றிணைப் பாடல் விளக்குகிறது. இதனைப் பெற்றோர் கூறினர் எனத் தலைவி குறிப்பிடுகின்றாள்.

ஏயன்மன் யாயும் நுந்தை வாழியர்
அம்மா மேனி ஆய்தொடிக் குறுமகள்
செல்லா யோநின் ம்ள்ளெயி றுண்கென
மெல்லிய இனிய கூறலின் (நற்., 134:6–9)

என்பது தலைவி கூற்று. பெற்றோரின் இனிய உள்ளத்தை இது வெளிப்படுத்தும். பெற்றோராயினும் பிறராயினும் ஒருவதற்கு நற்செயலால் மட்டும் பெருமை வருவதில்லை. செயற்குரிய இனிய சொற்களும் அமைய வேண்டுவதை வள்ளுவர்,

பணிவுடையன் இன்சொல னாதல் ஒருவற்கு
அணியன்றோ ஆன்ற ஒழுக்கு[8] (குறள் 95)

எனக் கூறுகிறார். இவ்வாறே இன்சொற்கள் பெற்றோரிடமும் அமைந்தன.

தலைவியைப் பிரிந்த செவிலித்தாய் அவளைத் தேடிச்செல்ல எதிரே வரும் இருவரை நோக்கித் தன் மகள் பற்றி விசாரிக்கிறாள். அவளுடைய சொற்கள் அன்புள்ளத்தைக் காட்டுகின்றன. தலைவி பிரிவால் தன் கண்கள் அழுதன எனக் குறிக்கிறாள்.

முன்தாள் உம்பர்க் கழிந்த என்மகள்
அன்னாய் கண்படுபு ஆன்றனி ரன்றே (நற்., 198:3–4)

என்கிறாள் செவிலி.

தலைவன் பரத்தையிற் பிரிந்து நெடுநாட்கள் இல்லம் திரும்பாதிருந்தான். ஒருநாள் தம் இல்லத்துத் தெரு வழியாக அவன் வரநேரிட்டது. அவ்வாறு வருங்கால் அவன் தன் புதல்வனைக் கண்டான். அதைப் பெருமையோடு பாங்கனிடம் கூறும் தலைவன் அப்புதல்வனைத் தம் நெஞ்சோடு அணைத்துக் கொண்டதாகவும் கூறுகிறான்.

நகுகம் வாராய் பாண பகுவாய்
அரிபெய் கிண்கிணி யார்ப்பத் தெருவில்
தேர்நடை பயிற்றுத் தேமொழிப் புதல்வன்
பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு
காமர் நெஞ்சந் துரப்ப யாந்தன்
முயங்கல் விருப்பமொடு குறுகினே மாக (நற்., 250:1–6)

என்பது தலைவன் தம் புதல்வனிடம்கொண்ட அன்புணர்வை வெளிப்படுத்தும் பகுதியாகும்.

தம் மகளை எண்ணி இரவிலும் துயிலின்றி இருந்த பெற்றோரை,

இரவினானும் இன்துயில் அறியா

தரவுறு துயரம் எய்துப (ஐங்., 173:1–2)

என ஐங்குறுநூறு கூறுகின்றது. பாம்பு தீண்டினாற் போல என இதன்கண் கூறப்பட்டுள்ள உவமை பெற்றோரின் மிகுந்த அன்புள்ளத்தைக் காட்டுகிறது. தம் புதல்வரைப் பொன்போல் போற்றினர் பெற்றோர் என்பது கருத்து.

அடுத்து வளர்த்து ஆளாக்கிய தன்னையும் மறந்து தலைவன் ஒருவனுடன் சென்ற தன் மகளை எண்ணித் தாய்,

என்னு முன்னினள் கொல்லோ தன்னை

நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக் காளையொடு

அழுங்கண் மூதூர் அலரெழச்

செழும்பல் குன்ற மிறந்தஎன் மகளே (ஐங்., 372)

என வருந்துகிறாள். குழந்தையின் மழலைச் சொல்லும் இனிது என்பதைப் பின்வரும் திருக்குறள் வழி அறியலாம்.

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு [9] (குறள் 65)

மழலைச் செல்வத்தின் அருமையையும் சமூகத்தில் குழந்தைக்குள்ள உறவு மதிப்பையும்,

படைப்புப் பலபடைத்துப் பல்லோ ரோடுண்ணும்

உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்

குறுகுறு நடந்து சிறுகை நீட்டி

இட்டுந் தொட்டும் கவ்வியும் துழந்தும்

நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்

மயக்குறு மக்களை இல்லோர்க்குப்

பயக்குறை இல்லைத் தாம்வாழு நாளே[10]

என்ற புறநானூற்றுப் பாடலும் தெரிவிக்கின்றது. பழந்தமிழ் மக்கள் மக்கட் பேற்றில் கொண்டிருந்த மதிப்பும் அன்புணர்வும் இதன்வழி வெளிப்படுகின்றன. பரத்தை தெருவழி வந்தபோது தலைவனின் புதல்வன் தந்தையின் சாயலுடன் நின்றான். அதைக்கண்ட அவள் அவனை ஆரத்தழுவினாள்.

யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவில் தமியோற் கண்டே
கூர்எயிற்று அரிவை குறுகினள் யாவரும்
காணுநர் இன்மையின் செத்தனள் பேணிப்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வருக மாள என்னுயிர் எனப்பெரி துவந்து
கொண்டனள் (அக., 16:6–11)

எனத் தலைவி தலைவனிடம் கூறுவதாக அமைந்த பாடலில் பரத்தையின் தாய்மை அன்பு உணர்த்தப்படுகின்றது. அன்பு மிக்க தாய் மகளின் களவறிந்து அவளைக் காவல் செய்கிறாள். (அக., 20:11–13) களவொழுக்கத்தால் மெய் மாறுபாடுற்ற தலைவிக்கு ஏதம் நிகழ்ந்ததெனக் கருதித் தாய் வேலன் வெறியாட்டு நடத்துகிறாள் (அகம்., 22:6–7) இதுவும் தாயன்பைச் சார்ந்ததாகும்.

பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு, நனிபசந்தள்
(அகம்., 48:1–3)

என மகளின் உணவுண்ணாமை, பசலை ஆகியவற்றைக் கண்டு ஒரு தாய் மிகவருந்திப் பேசுகிறாள். தலைவியின் சிறு வருத்தமும் தாங்குதல் இலள் தாய் என்பது கருத்து.

உடன்போக்கிற் சென்ற தலைவியை எண்ணித் தாய் தன்னை எப்போதும் தழுவிக் கொண்டிருந்த மகள் அகன்றதைக் கூறி வருந்துகிறாள் (அக., 49:6–9).

செவிலித்தாயின் அன்பு மிகுந்த பொறுப்பு மிக்கதாகவும் கூறப்படுகிறது. தலைவியை இற்செறிந்தும் பாதுகாக்கிறாள். இதனைத் தலைவி,

அருங்கடிப் படுக்குவள் அறனில் ஆயே (அகம்., 60:15)

எனக் கூறுகிறாள். இற்செறிப்புத் தாயின் அன்பு மிகுதியால் வருவதாகும். பழந்தமிழ்ச் சமூகத்தில் மக்கள் (புதல்வர்) மீது பெற்றோர் கொண்டிருந்த அன்பு சமூக உயர்மதிப்பாகவே கொள்ளப்பட்டது. 'சிறுவர்ப் பயந்த செம்மலோர்' (அக.,66:6) எனப் பெற்றோர் போற்றப்படுகின்றனர். பொருள் தேடச் செல்லத் தொடங்கிய தலைவன் தன் மகனைப் (புதல்வன்) கண்டதும் அவன் மீது கொண்ட அன்பால் தம் பயணத்தை நிறுத்தினான். (அக., 66:10–18) உடன்போக்கிற் பிரிந்த மகளை எண்ணிய தாய் அவள் விளையாடிய பாவைகளையும் எடுத்துத் தழுவுகிறாள். 'அவள் நிலை எவ்வாறாயிற்றோ' எனக் கலங்கி அழுகிறாள் (அக.,165:6–13) செவிலித்தாய் ஒருத்தி உடன்போக்கிற் சென்று மகள் தங்கிச் சென்ற ஊர் மக்களுக்கு 'விருந்தளித்து மகிழ்வேன்' (அக., 203:16–18) எனக் கூறுகிறாள்.

தலைமக்களாக வரும் பெண்கள்பால் செவிலியும், நற்றாயும் தோழியும் காட்டிய அன்புணர்வு போற்றத்தக்கதாக உள்ளது. 'காதலின் வளர்ந்த மாதர்' (அகம்., 310:6–10) என ஒருதாய் தன் மகளைக் குறிப்பிடுகிறாள். "சிலம்புகழி நோன்பும்" செய்யப்பெறாத நிலையில் தலைவி இல்லிற் பிரிந்து தலைவனுடன் சென்றமை எண்ணித் தாய் வருந்துகிறாள் (அக., 315) 'சிலம்புகழி நோன்பு' என்பது திருமண வயது வந்த நிலையில் செய்யப்படுவதாகும்.[11] தாயன்பைப் போற்றும் புறநானூறு 'தாயில் தூவாக் குழவி' (புறம்.4.18) எனப் பாடுகிறது. பகைவர்நாடு இன்னலுற்றதை ஒரு மன்னனுக்கு எடுத்துக் கூறுங்கால் இது கூறப்பட்டுள்ளது. 'ஈன்றோள் நீத்த குழவி' (புற., 230:7) என்று தாயன்பின் சிறப்புக் கூறப்பட்டதும் அறியத்தக்கது. குடும்பம் என்பது குழந்தைகளை உடையதே. குழந்தையில்லாதது பெருமை அன்று என அக்காலச் சமூகம் கருதிற்று. அதுவும் ஒரே குழந்தை என்றால் எத்துணையாகப் போற்றி வளர்ப்பார் என்பது எண்ணத்தக்கது. 'ஒரு மகன தில்லோள்' (புற., 279:11) எனத் தாய் பிள்ளை உறவு காட்டப்பெறுகிறது.

பிள்ளையைப் பெற்று வளர்த்து ஆளாக்கி அன்பு செலுத்திச் சமூகத்திற்களித்த தாய் குறித்துப் புறப்பாடல்,

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே (புறம்., 312:1)

எனத் தாய்க் கூற்றாகவே பாடியுள்ளது.

தாய் இல் தூவாக் குழவி போல (புறம்.379.15)

என்பதும் அது மேற்குறித்த செய்யுட் பகுதிகளில் தலைவன், தலைவி, தோழி, தாய், செவிலி, தந்தை உள்ளிட்டோரும் பிறகும் அன்புணர்வில் ஆட்பட்டுத் தத்தம் கடமைகளைச் செய்தமை உணர்த்தப்படுகின்றது. பிற மனிதர்களிடம் இரக்கம் காட்ட வேண்டியது சமூகக் கடமை என்பதை உணர்ந்த பழந்தமிழ்ப் புலவர்கள் தம் சமூகக் கோட்பாட்டினை மேற்கண்டவாறு புனைந்துள்ளனர்.

**1.2. இரக்க உணர்வு**

சமுதாயத்தில் இணைந்து வாழும் மனிதர்கள் ஒருவர்க்கொருவர் அன்பு செலுத்தியும் ஒருவர்க்கேற்பட்ட இன்னலில் பங்குகொண்டும் பிறர் துயரைக் கண்டு மனம் வருந்தியும் அத்துயரம் அகலத் தொண்டாற்றியும் வாழ்ந்து வாழ்ந்தனர். இரக்கம், கழிபேரிரக்கம் என்ற சொற்கள் இரக்க உணர்வு குறித்த பண்பாட்டுப் பழமையை உணர்த்துவனவாகும். குறிப்பாகப் பிறர் துன்பத்தை நீக்கி, அவர்க்கு உதவி வாழ்தல் பழங்காலச் சமுக நீதியாகப் போற்றப்பட்டது. பிறர் செய்யுங் குற்றங்களைப் பொறுத்துக் கொள்வதும் பண்டை மரபாக இருந்தது.

பண்டைத் தமிழ்ச் சமூக இலக்கிய உற்பத்திகளில் இரக்கம் குறித்த பதிவுகள் காணப்படுகின்றன. பகைநாட்டிலிருந்து கவர்ந்த ஆநிரைகளைத் துன்பமின்றிக் கொண்டு வருதலை நோயின்றுய்தல்[12] எனத் தமிழ் இலக்கண நூல்கள் குறிப்பிடும். ஆநிரைகளை இவ்வாறு பாதுகாத்துக் கொண்டு செல்லுதலை 'ஆதந் தோம்பல்'[13] என்ற அடிக்கு விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர். மேலும் பண்டைய சமூகத்தில் போர் நிகழ்ச்சிகளிலும் கூடப்

பிற உயிர்களுக்கு இன்னாமை கூடாதென வரையறுக்கப்பட்டிருக்கிறது.[14] போரின்கண் மக்கள் இறத்தலை விரும்பாது, புலவர்கள் போர் செய்யும் இரு மன்னர்க்கிடையே தூது சென்று ஒற்றுமையை நிலைநாட்டியுள்ளனர்.[15]

மனிதர்க்குள்ளே நடைபெறும் இரக்க உணர்ச்சி பிற உயிர்களிடத்தும் காட்டும் பண்பாக மாறியது. ஞானிகள், சித்தர்கள், அருளாளர்கள் ஆகியோர் எல்லா உயிர்களுக்கும் வரும் துன்பத்தைத் தம் துன்பமாக எண்ணினர். அவற்றைத் தம் படைப்புக்களிலும் பதிவு செய்தனர். பொதுமக்களைக் கூட்டி எடுத்துரைத்தும் வந்தனர்.

பழந்தமிழ் இலக்கியங்களாகிய சங்க இலக்கியங்களில் இரக்கவுணர்வு மனிதர்க்கு மனிதர் காட்டும் முறையில் அமைந்திருக்கிறது. மக்களின் எண்ணம் செயல் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டுள்ளது. இவ்விரக்க உணர்வு பல்வேறு சூழல்களில் நிகழ்கின்றன. அவற்றைப் பின்வருமாறு பிரிக்கலாம்.

1. தலைவன் மீது இரங்குதல்
2. தலைவி குறித்தவை
3. பசி குறித்து எழுந்தவை
4. சாதல் பற்றி எழுந்தவை
5. பெருந்துயரால் வந்தவை
6. நோயினால் ஏற்படுபவை
7. கடும் உழைப்பால் எழுந்தவை
8. மனத்துயரால் வரும் இரக்கம்
9. வறுமையால் எழும் இரக்கம்

மேற்குறித்த பொருண்மைகளில் பிறர்க்கு ஏற்படும் பல்வேறு நிகழ்வுகளில் சக மனிதர்கள் இரக்கப்படுவதைப் புலவர்கள் சித்தரித்துள்ளனர்.

<u>தலைவன் மீது இரங்குதல்</u>

தலைவன் பிரிவின்போது காட்டுவழிகளிலும், பாலைச் சுரத்து வழிகளிலும் செல்கிறான். மேலும் இரவுக் குறிக்கண் இரவு நேரத்தில் தலைவியைக் காண வருகின்றான். இவ்வாறு வரும்போதும் பிரிந்து செல்லும்போது தலைவனுக்கு இடையூறு ஏற்படும் எனத் தலைவி கலங்குகிறாள். அப்போது அவன் நிலையை எண்ணியும் அவளுக்கு இடையூறு வருமெனக் கலங்கியும் தலைவி இரங்குகிறாள். சில இடங்களில் தோழியும் தலைவனுக்கு ஏதேனும் ஏதம் வரும் என இரங்குகிறாள். இவ்வாறு தலைவனுக்காக இரங்கும் இவர்களின் உள்ளம் இரக்கக் குறிப்புடன் காணப்பெறும்.

பனிக்கால இரவில் தலைவியைக் காணுதற்குத் தலைவன் வருவதை எண்ணித் தோழியும், தலைவியும் வருந்துகின்றனர். பனிக்கடுமையைத் தாம் தலைவனுக்கு எடுத்துரைத்திருக்கலாம் என்று அவர்கள் தமக்குள் கூறிக் கொள்கின்றனர்.

அம்ம வாழி தோழி முன்னின்று
பனிக்கடுங் குரையஞ் செல்லா தீமெனச்
சொல்லின மாயிற் செல்வர் கொல்லோ (குறு., 350: 1–4)

என்கிறாள் தோழி. இது தலைவனின் வரவு குறித்து அவன் மேற்பட்ட இரக்கத்தை உணர்த்துவதாம்.

தலைவன் இரவு நேரத்தில் வரும்போது ஏற்படும் ஏதம் பற்றி,

நெடுங்கை வன்மான் கடும்பகை யுழந்த
குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை
பைங்கட் செந்நாய் படுபதம் பார்க்கும்
ஆரிருள் நடுநாள் வருதி
சாரல் நாட வாரலோ எனவே (குறு., 144:4–8)

என்கிறாள் தலைவி. இது விலங்கு முதலியவற்றால் தலைவனுக்கு உண்டாம் இடர் பற்றிக் கூறுயது. அதற்காக இரங்கியதுமாம். இவ்வாறு வரும் கூற்றினை

இளம்பூரணர் தொல்காப்பியர் கூறும் தலைவி கூற்றுக்களுள், “பொழுதும் ஆறும் புரைவதன்னமயின் அழிவு தலை வந்த சிந்தைக்கண் தலைவி கூறியது”[16] என்னும் துறையினுள் அடக்குவர். இதுபோலவே, கொடிய முதலைகள் கிடக்கும் நீர் நிலைகளைக் கடந்து தலைவன் இரவில் வருதற்கு அஞ்சுவதும் (குறு., 324) வள்ளிக் கொடிகள் நிறைந்த காட்டின் வழியே இரவில் வரும் தலைவனுக்காக இரங்குவதும் தலைவியின் பண்புகளாக உள்ளன (குறு., 216).

தலைவனின் உயிர்க்கு ஊறு நேரிடுமெனத் தலைவியும், தோழியும் அஞ்சி இரக்கப்படும் தன்மைகளையும் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது.

பாலை நிலத்துச் செல்லும் தலைவன் ஆண்டு வழியில் செல்லும் ஆறலை கள்வராலும் தீங்கு நேரும் எனத் தலைவி கலங்குகிறாள். அதனை அவள்,

> விடுகணை வில்லொடு பற்றிக் கோடிவர்பு
> வருநர்ப் பார்க்கும் வண்கண் ஆடவர் (குறு., 274:3–4)

என்று தலைவன் சென்று திரும்பும் பாலை நிலத்து வழியின் தன்மையைக் குறிக்கிறாள். இவ்வாறு செல்லும் தலைவன் அந்நிலத்து வெய்யிற் கொடுமையிலும் துன்பப்படுவான் எனவும் சுட்டப்படுகிறது. “நீரில் வைப்பில் சுரனிறந்தோர்” (குறு., 211:7) எனத் தலைவனைத் தோழி குறிப்பிடுகின்றாள். நீரில்லாத பாலைவழி என்பது தலைவி, தோழி ஆகியோரின் வருத்த உணர்வைக் குறிக்கிறது. தலைவன் செல்லும் இச்சுரவழியைக் கருதி வருந்தியதைத் தோழி குறிப்பால் அறிந்தாள் எனக் குறிப்பர் உரையாசிரியர்.[17]

> கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்
> அற்றிருந் தல்கி வழங்குநர்ச் செகுத்த
> படுமுடை பருந்துபார்த் திருக்கு
> நெடுமூ திடைய நீரில் ஆறே (குறு., 283:5–8)

என்று பாலை நிலத்தின் கொடுந்தன்மையைக் கூறி அவ்வழியில்தான் தலைவன் சென்றுள்ளான் எனத் தலைவி வருந்துகிறாள். இச்சூழலையும் தலைவற்கு வரும்

ஏதம் குறித்து விளக்கும் உரையாசிரியர் “தப்பாது கொல்வோர் என்பாள் கூற்றத்தை உவமை எடுத்தோதினாள். மறவர் ஈண்டுப் பாலை நிலமக்களாகிய ஆறலைகள்வர்”[18] என்கிறார். பாலை வழிச் செல்கிறான் தலைவன் என அறிந்ததுமே அவன் நிலையை எண்ணித் தலைவி வருந்துவதையும் காணமுடிகிறது (குறு., 224). குறிப்பிட்ட பிரிவிற்கன்றிப் பொதுவாகத் தலைவி தலைவன் பிரிவிக்கு வருந்துபவளாகவும் இருக்கிறாள். “தலைவியைக் காணாத போது என்பட்டீரோ ?” (குறு., 178) எனத் தோழி தலைவனுக்காக வருந்துகிறாள்.

<u>தலைவி பற்றிய இரக்கம்</u>

தலைவியின் நிலைகண்டு இரங்குவோருள் செவிலித்தாய் குறிப்பிடத்தக்கவள். இவளைத் தொடர்ந்து தலைவிக்காக நற்றாய் இரங்குவதும், தலைவன் இரங்குவதும், கண்டோர் இரங்கிக் கூறுவதும் காணப்படுகின்றன. தாயின் இரக்கம் பெரும்பகுதியும் உடன்போக்கில் தலைவியின் மெய்வருத்தம் நோக்கியே அமைந்துள்ளது. இல்லத்தில் பொற்கலத்தில் வைத்தளித்த பாலையும் வேண்டாமென மறுத்துச் செல்வச் செழிப்பின் வளர்ந்த தலைவி கடுஞ்சுரவழியை எவ்விதம் தலைவனுடன் கடந்தனள் என்கிறாள் செவிலி. “செம்பொற் புனைகலத் தம்பொரிக் கலந்த, பாலும் பலாவன உண்ணாள்” (குறு., 356:6–7) என்று தலைவியின் நிலை உணர்த்தப்பட்டது.

> நிழலான் றவிந்த நீரில் ஆரிடைக்
> கழலோன் காப்பக் கடுகுபு போகி
> அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த
> வெவ்வங் கலுழி தவ்வெனக் குடிச்சிய
> யாங்கு வல்லுநள்கொல் (குறு., 356:1–5)

என்று தலைவி உடன்போக்கு வழி கொடிதென்றும் அதனை அவள் மிகுந்த துயரத்துடன் கடந்து சென்றனள் என்றும் கூறுகிறாள். தலைவி உடன்போக்கை

மேற்கொண்டபின் தாய் அவள் விளையாடிய பொருள்களைக் கண்டு கலங்குகிறாள் (ஐங்., 375).

> இதழழிந் தூறுங் கண்பனி மதரெழில்
>
> பூணக வனமுலை நனைத்தலும்
>
> காணார் கொல்லோ மாணிழை நமரே (குறு., 348:3–6)

தோழி தலைவியின் துயர நிலையை எடுத்துரைத்துத் தலைவியின் நிலைக்கு இரங்கிப் பேசுகிறாள். இது பாலைவழிச் செல்ல வொண்ணாத அவள் மென்மையும் மேனியும் குறித்து நின்றது.[19]

### 1.3. பசி குறித்து இரங்குதல்

பசித்துயர் வெறுக்கத்தக்கதாகப் பண்டைச் சமூகத்தில் இருந்தது. பசியால் வாடும் ஒருவரைப் பார்த்து மனம் வருந்திய நிகழ்ச்சிகள் பல இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன. அரசர்கள் புலவர்கள் எனப் பல திறத்தோரும் பசிக்கு உணவிடுதலைப் பெரிய அறமாகக் கொண்டிருந்தனர். பசியால் வாடும் சுற்றத்தாரைப் பார்த்துத் தனி மனிதனும் இருத்தல் கூடாதென அற்றை நாளில் பொது அறம் உரைக்கப்பட்டிருந்தது. பசி போக்கல் உயிரறம் எனக் கருதப்பட்டது. நீண்ட சங்க இலக்கியத் தொகைப் பாடல்களில் இந்நெறிமுறை பின்பற்றப்பட்டு வந்ததையும் இதை ஓர் அறநெறியாகவும் மனிதநேயக் கொள்கையாகவும் மக்கள் பின்பற்றி வந்தனர் என்பதையும் காணமுடிகிறது. 'பசி' சமூகத்தை வருத்தும் கொடுமையானதாகக் கருதப்பட்டது. 'பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ;' (புறம்.400:17) என்றும் 'நீரின்று அமையா யாக்கைக்கு எல்லாம், உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே'[20] என்றும் புறநானூற்றில் பேசப்படுவது குறிப்பிடத்தக்கது.

**1.3.1. சுற்றத்தாரின் பசிபோக்கல்**

தம் சுற்றத்தாரும் அல்லது புலவர்களும் அவர்தம் சுற்றத்தாரும் பசியுடன் வருதலைக் கண்ட மன்னரோ மற்றவரோ அவர்க்கு உணவளித்து அவரைப் பசியிலிருந்து மீட்டனர் எனப் பெரும்பாணாற்றுப்படை பேசுகின்றது.

பழம்பசி கூர்ந்த எம்மிரும் பேர்ஒக்கலொடு
வழங்க. . . . .  (பெரும்., 25–26)

என்ற பகுதியில் சோழன் இளந்திரையனின் பசி போக்கும் திறம் கூறப்பட்டுள்ளது. எயிற்றியருடன் வரும் புலவர் சுற்றத்திற்கு உணவளித்து மகிழ்ந்தான் தொண்டைமான் இளந்திரையன்.

எயிற்றியர் வரும் புலவர் சுற்றத்துக்கு
உணவளிப்பர்  (பெரும்., 105)

என்பது அது. கலைத்தொழில் மிகுந்த பெண்கள் எயிற்றியர் ஆவர்.[21]

பசித்துயர் மக்களை வாட்டியதற்கு வறுமை முக்கியக் காரணி எனலாம். உழைக்கும் மக்கள் வறுமையினால் குழந்தைக்குப் பாலூட்டவும் இயலாதிருந்தனர் என்பதைப் பழம் பாடல்களின் வழி அறியமுடிகின்றது. தாய்க்கு உணவின்மையால் குழந்தைக்குப் பாலூட்டவும் அவளால் இயலவில்லை என்பதைப் புறப்பாடல் உணர்த்துகின்றது.

உள்ளம் துரப்ப வந்தனென் எள்ளுற்று
இல்லுணாத் துறத்தலின் இல்மறந் துறையும்
புல்லுளைக் குடுமில் புலதல்வன் பன்மாண்
பாலில் வறுமுலை சுவைத்தனன் பெறாஅன்
கூழும் சோறும் கடைஇ ஊழின்
உள்ளில் அருங்கலம் திறந்து அழக்கண்டு
மறப்புலி உரைத்தும் மதிஃயங் காட்டியும்
நொந்தனள்  (புறம்., 160:16–23)

என்று தாயின் மார்பில் பாலின்மையால் அழும் குழந்தையைக் காட்டுகிறது. பசித்துயரால் வரும் இரக்க உணர்வை இது எடுத்துக் கூறுவதாகும்.

சுற்றத்தாரின் பசியைப் போக்கும் பண்புடையரை "கடும்பின் கடும்பசி களையுநர்" (புறம்.68:2) எனப் புறநானூறு பேசுகின்றது. 'கடும்பு' என்பது சுற்றத்தாரைக் குறிக்கும். செய்யுள் முழுமையும் வறுமையின் சித்திரமாய்த் தோன்றல் காணலாம். அச்செய்யுள் பின்வருமாறு அமைகிறது.

உடும்புரித் தன்ன என்பெழு மருங்கின்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது
சில்செவித்து ஆகிய கேள்வி நோந்நொந்து
ஈங்கெவன் செய்தியோ பாண பூண் சுமந்து
அம்பகட் டெழிலிய செம்பொறி ஆகத்து
மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையின்
ஆடவர்ப் பணிக்கும் பீடுகெழு நெடுந்தகை
புனிறுதீர் குழவிக்கு இல்லிற்று முலைபோலச்
சுரந்த காவிரி மரங்கொல் மலிநீர்
மன்பதை புரக்கும் நன்னாட்டுப் பொருநன் (புறம்., 68:1–10)

என வரும் செய்யுட்பகுதி சோழன் நலங்கிள்ளி தன்னைப் பசியுடன் நாடிவந்த புலவர் சுற்றத்தார்க்கு உணவளித்து அவர்தம் பசி போக்கியதைச் சிறப்பிக்கும்.

வந்த விருந்தினர்களுக்கு நாள்தோறும் விருந்து நடத்துதலையும் பண்டைத் தமிழர் வாழ்க்கையில் மேற்கொண்டிருந்தனர். விருந்து உபசரித்தல் என்பது தமிழரின் பண்பாட்டுக் கூறுகளுள் ஒன்றாக இருந்தது. அனைவரும் இதனைத் தவறாது செய்தல் வேண்டுமென்னும் கடமையுணர்வுடன் இருந்தனர். நடைமுறையில் நண்பராயினும், உறவினராயினும் இல்லம்தேடி வருவோர் களைத்து வருதலே புவியியல் அடிப்படையில் இருந்தது. அதனால் வந்தார்க்கு

நீர்தருதலும் அவர்க்கு உணவிடுதலும் உயரிய பண்பாக இருந்தன. இல்லத்து மகளிரும் நாடோறும் விருந்தினர் வரல்வேண்டும் என்றும் விரும்பினர்.

களிறுபொரக் கலங்கு கழல்முள்வேலி
அரிதுண் கூவில் அங்குடிச் சீறூர்
ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை
நடுகல் கைதொழுது பரவும் ஒழியாது
விருந்தெதிர் பெருகதில் யானே என்னையும்
....................
நாடுதரு விழுப்பகை எய்துக எனவே (புறம்., 306)

என வரும்பாடல் இதனை எடுத்துக்கூறும். இச்செய்யுளில் 'இடைவிடாது விருந்தினர் வரப்பெறுவேனாக யான், என் கணவன் பகைவரை ஒழித்து விரைந்து வருக' எனப் பெண்ணொருத்தி வேண்டுவதாகப் புனையப் பெற்றுள்ளது அறியத்தக்கது.

பசியுடன் வந்த மக்களை அன்புடன் வரவேற்று அவர்தம் பசியையும் சுவையையும் அறிந்து உணவூட்டிய செயல்கள் பண்டை இலக்கியத்தில் காணப்படுகின்றன. அவர்களுக்கு ஊன், சோறு, கரும்புச்சாறு எனப் பல்வேறு சுவையுடைய உணவுகளைத் தந்துப் பசிபோக்கினர். இதனை, அகநானூறு,

இருங்கதிர் அலமரும் கழனிக் கரும்பின்
விளைகழை பிழிந்த அம்தீஞ் சேற்றோடு
பால்பெய் செந்நெற் பாவல் பகுக்கும்
புனல்பொரு புதவின், உறந்தை (அகம்., 237)

எனக் கூறுகின்றது. நெற்சோறு அற்றைநாளில் மிகச் சிறந்த உணவாகப் பயன்பட்டது. அதிலும் அதனுடன் பால் கலந்து சமைத்தல் உயர்வகை உணவாக எண்ணப்பட்டது. மனமுவந்து விருந்தளிக்கும் இடத்திலும் பெரியோர்கள் உள்ள இடத்திலும் இது அளிக்கப்பெற்றது.[22]

வந்த விருந்தினரை வரவேற்று இல்லத்தில் அமர்த்தி விருந்தளிக்கும் நகர் மிகுந்த நாடு என்றும் அதற்குரியவன் தலைவன் என்றும் கூறப்படுகிறது. 'நகர்' பழங்காலத்தில் மக்கள் வாழ்ந்த முக்கியப் பகுதியாகும்.

செழுநகர் நல்விருந்து அயர்மார் (அகம்., 205)

இதில், விருந்து செய்வதற்கென்றே அமைக்கப்பட்ட நகர் என்பது போலக் கூறப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. 'செழுநகர்' என்பது நகரின் வளமையைச் சுட்டுவதாகும். இலக்கியங்கள் இவ்வாறே பகரும்.[23]

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்னும் மன்னனைக் காணத் தினந்தோறும் புலவர்களும் விருந்தினர்களும் வந்தனர். அவர்கள் யாவர்க்கும் இருந்த உணவினைக் குறைவுபடாது பகுத்தளித்தான் என அவனது பசிக்கொடை கூறப்படுகிறது.

பகுத்தூண் தொகுத்த ஆண்மைப்
பிறர்க்கென வாழ்தி நீ அகன் மாறே (பதிற்., 4:38, 15–16)

என்பது பதிற்றுப்பத்து. உணவைப் பகுத்தளித்தலே பிறர்க்கென வாழ்தல் எனப்பட்டது.

வேந்தனின் தானைத் தலைவன் பசித்திருந்தும் அதற்கும் உணவு தேடாது போருக்குச் சென்றான் என அரிசில்கிழார் பாடுகிறார். "புன்வயிற றுத்தலும் செய்யான்" (புறம்., 304:7) என்று அவன் செயலைப் புறநானூறு கூறுகிறது.

மன்னர்கள் விருந்தளித்து மகிழ்தற்கு முதலிடம் தந்தனர். சிறப்புக்கும், உயர்வுக்கும் உரிய வேந்தர்கள் உணவளித்தற்குப் பிறரிடம் ஆணையிடாது தாமே முன் வந்து உணவளிக்கும் இடத்தில் நின்று முகமலர்ந்து பசிக்கு உணவளித்த காட்சிகள் பல பண்டைத் தமிழ் இலக்கியங்களில் புனையப்பட்டுள்ளன.

நல்லியக்கோடன் என்னும் குறுநில மன்னன் விருந்தினர்க்கு உணவளித்து மகிழ்ந்ததை,

விளங்கு பொற்கலத்தில் விரும்புவன பேணி

ஆனா விருப்பின் தானின்று ஊட்டி (சிறுபாண்., 244–45)

எனச் சிறுபாணாற்றுப்படை பகர்கின்றது. 'விருப்பின் தானின்று ஊட்டி' என்பது குறிப்பிடத்தக்கது.

மன்னனே விருந்தளிக்கும் இடத்தின்கண் வந்து பாணர்க்கு மன்னன் விரும்பி உணவளித்ததைப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது (பெரும்.,465–480).

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மக்களையும் விறலியரையும் கண்டு அவர்களுக்குக் கள்ளையும் உணவையும் உண்ணக் கொடுக்கிறான். மேலும் மேலும் வருவோர்க்கு உணவைச் சமைத்து வழங்கும்படி கூறுகிறான்.

உண்மின் கள்ளே! அடுமின் சோறே

எறிக திற்றி ஏற்றுமின் புழுக்கே

வருநர்க்கு வரையாது பொலங்கலம் தெளிர்ப்ப

இருள்வணர் ஒலிவரும் புரியவிழ் ஐம்பால்

ஏந்து கோட்டு அல்குல் முகிழ்நகை மடவரல்

கூந்தல் விறலியர் வழங்குக அடுப்பே

பெற்றது உதவுமின் தப்பின்று பின்னும் (பதிற்., 2:181–187)

என்பது அச்செய்யுள் பகுதி. இதில் மன்னனே ஏவலாளன் போல மக்களை விருந்துக்கழைப்பது எண்ணத்தக்கது. இதுபோலப் பல்யானைச் செல்கெழுகுட்டுவன், பாணர், கூத்தர் போன்றோர்க்கு உணவளித்ததை இந்நூல்,

வயிரிய மாக்கள் கடும்பசி, நீங்கப்

பொன்செய் புனையிழை ஒலிப்பப் பெரிது உவந்து

நெஞ்சுமலி உவகையர் உண்டு மலிந்து ஆட (பதிற்., 3:28, 6–8)

என விளக்குகிறது.

விருந்துக்கு வருவோர் உண்ணும் உணவின் அளவினை அறிந்து உணவளித்தலைப் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் செய்தான் என்பதைப் பதிற்றுப்பத்து விளக்குகிறது. அந்நூலில்,

வளம் வீங்கு பெருக்கம் இனிதுகண் டிகுமே
உண்மரும் தின்மரும் வரைகோள் அறியாது
குரைத்தொடி மழுகிய உலக்கை வயின்றோறு
அடைச் சேம்பு எழுந்து ஆடுறு மடாவின்
எஃகுறச் சிவந்த ஊனத் தியாவரும்
கண்டுமதி மருளும் வாடாச் சொன்றி
வயங்கு கதிர் விரிந்த வானகம் (பதிற்., 3:24: 17–23)

என்பது பதிற்றுப்பத்து. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பசித்து வந்தோர்க்கு உணவிட்டு மகிழ்ந்தான் என்பதை,

வந்தவன் இறுத்த இரும்பேர் ஒக்கல்
தொல்பசி யுழந்த பழங்கண் வீழ
எஃகு போழ்த் தறுந்த வால்நிணக் கொழுங்குறை
மையூன் பெய்த வெண்ணல் வெண்சோறு
நனையமை கள்ளின் தேறலொடு மாந்தி (பதிற்., 2.12: 14–18)

எனப் பாராட்டுகிறது பதிற்றுப்பத்து.

செல்வக்கடுங்கோ வாழியாதன் பாசறையில் தங்கியிருந்தான். அவனைக் காணச் சென்ற கபிலர்,

உறுமுரண் சிதைத்தநின் நோன்தாள் வாழ்த்திக்
காண்கு வந்திசின் கழல்தொடி அண்ணல் (பதிற்., 7.64:14–15)

எனப் பாடுகிறார். பாசறையிலும் அவன் உணவளிப்பான் எனக் கருதி வந்ததாக அவர் கூறுகின்றார். இரவலர்கள் வேறு இடத்திற்குச் சென்று உணவு கேட்காத அளவிற்குக் கள் வழங்கியதை,

வறிது துட்டரியல் இரவலர்த் தடுப்பத்

தாள்தர உண்ட நனைநறவு மகிழ்ந்து

நீர்இமிழ் சிலம்பின் நேரி யோனே (பதிற்., 4.40:18–20)

எனக் கூறுகிறார் புலவர்.

வேள் எவ்வி என்னும் மன்னன் பலரோடும் அமர்ந்து உணவுண்ணுதலை விரும்பினான் என்பதை,

உலகுபுகத் திறந்த வாயில்

பலரோடு உண்டல் மரீஇ யோனே (புறம்., 234)

எனப் புறநானூறு பேசுகிறது.

குட்டுவன் சேரல் என்ற மன்னன் மக்களைப் பசியின்றிக் காக்கப் பெரிதும் விரும்பியதை,

பசிஎன அறியாப் பணைபயில் இருக்கை (அக., 91: 15)

எனக் குறிப்பிடுகிறது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் கொழுஞ் சோறளித்ததை,

குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு

இரத்தி நீடிய அகன் தலை மன்றத்துக்

கரப்பில் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி

அமலைக் கொழுஞ்சோறு ஆர்ந்த பாணர்க்கு

அகலாச் செல்வம் முழுவதும் செய்தோன் (புறம்., 34)

எனக் கூறுகிறார் புலவர். அவனளித்த உணவின் சிறப்பு இதன்கண் கூறப்பட்டுள்ளது. அதியமான் நெடுமானஞ்சி உணவளித்த முறையினை,

உண்டாயின் பதம் கொடுத்து

இல்லாயின் உடனுண்ணும்

இல்லோர் ஒக்கல் தலைவன் (புறம்., 95)

எனப் புறநானூறு பேசுகின்றது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் செல்லும்படி பாணனை ஆற்றுப்படுத்தும் புலவர்,

புரவலர் இன்மையின் பதியே அரையது
வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்
ஓம்பி உடுத்த உயவற் பாண
பூட்கை இல்லோன் யாக்கை போலப் (புறம்., 69)

எனப் பாடுகிறார். இது பசிக்கு உணவு தரும் கிள்ளிவளவனின் கொடைச் சிறப்பை விளக்குகிறது.

உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதுஎனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவது அஞ்சிப் (புறம்., 182)

என்பதும் உண்ணல் அறத்தை வலியுறுத்துவதாகும்.

பண்ணன் என்னும் மன்னனை,

இன்னே சென்மதி நீயே சென்று அவன்
பகைப்புலம் படரா அளவை நின்
பசிப்பகைப் பரிசில் காட்டினை கொள்ளற்கே (புறம்., 181)

எனப் பாடுகிறது.

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனை,

துயலும் கோதைத் துளங்கியல் விரலியர்
கொளைவல் வாழ்க்கை நுங்கிளை இனிது உணீஇயர்
(பதிற்., 5:49: 2–3)

என்று பாடுகிறார் புலவர்.

அமிழ்து அட்டு ஆனாக் கமழ்குய் அடிசில்
வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை (புறம்., 10)

என்று, நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியைப் பாடியுள்ளமை அவன் செய்த விருந்து முறைமைக்குச் சான்றாகும். சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர்,

> சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்
> பரிசலர்க்கு அருங்கலம் நல்கவும் குரிசில்
> வலிய ஆகும் நின் தாள்தோய் தடக்கை
> புலவு நாற்றத்தை பைந்தடி (புறம்., 14)

எனப் பாடுகிறார். இம்மன்னன் உணவளித்தலில் சிறப்புடையவனாக இருந்தான் என்பதை உணர்த்துகிறது.

> அறம் நிலைஇய அகனட்டில்
> சோறுவாக்கிய கொழுங்கஞ்சி (பட்டின., 17)

என்பது பட்டினப்பாலை. இரவலர்க்கு வழங்குவதற்கெனவே சோறு சமைக்கப்பட்டதாகக் கொள்ளலாம்.

### 1.4. ஈகை

ஈகை என்பது பிறர்க்குக் கொடுத்து உதவும் பண்பாகும். தமிழ்ச் சமூகத்தில் பொது மக்களிடம் இது இயல்பான பண்பாக இருந்தது. இல்லறத்தார் அனைவரும் ஈகைக் குணம் பெற்றிருந்தனர் என்பதை இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன. பாண்டியன் கருங்கை ஒள் வாள் பெரும்பெயர் வழுதியை இரும் பிடர்த்தலையார் பாடுகிறார். அவரது கூற்று பழங்கால மன்னர்கள் ஈகைக்குணம் உடையவர்களாக இருந்தனர் என்பதை அறிவுறுத்துகிறது. அப்புலவர் அம்மன்னனை,

> உவவுமதி உருவின் ஓங்கல் வெண்குடை
> நிலவுக்கடல் வரைப்பின் மண்ணகம் நிழற்ற
> ஏம முரசம் இழுமென முழங்க

நேமி யுய்த்த நேஎ நெஞ்சின்

தவிரா ஈகைக் கவுரியர் மருக

.........................................................

நின்நசை வேட்கையின் இரவலர் வருவர் (புறம்., 3: 1–5)

எனப் பாடுகிறார். "வறியர்க்கொன் றீவதே ஈகை"[24] என்கிறது திருக்குறள்.

இதில் 'தவிரா ஈகை' எனக் குறிக்கப்படுவது மன்னர் வழி வந்தவர். ஈகைக் குணம் கொண்டவராயிருத்தலே மரபாயிருந்ததென்பதை அறிவுறுத்துகின்றது. 'ஈகை' என்ற சொல்லுக்கு அகராதிப் பொருள் குறிப்பிடத்தக்கது. ஒருவர்க்கு வேண்டும் பொருளை வேண்டும்போது தருதல் ஈகை எனப் பொருள் கொள்ளப்படுகிறது. பொருள் தந்து வறுமைக்கு உதவுதல் ஈகை என்றே கொள்ளப்பெறும். தமிழ் லெக்சிகன் 'ஈகை' என்பதற்குப் பொருள் வழங்கல் எனக் குறிக்கிறது.[25] குடும்பத்தில் வாழும் இல்லறத்தாரையும் நாட்டில் வாழும் பொதுமக்களையும் 'குடி' என்னும் சொல்லால் குறித்தனர். விருந்துபசரித்து வருவதைத் தொடர்ந்து பண்பாட்டு அடையாளமாக மக்கள் செய்து வந்ததை எண்ணிப் பாராட்டும் பண்டைத் தமிழ்ச் சான்றோர் அவரை விருந்தினர் களிக்கும் குடி என்றழைத்தனர். இதனை நற்றிணை,

தூங்கல் ஓசை ஓங்குமடற் பெண்ணை

மாவரை புதைத்த மணல்மலி முன்றில்

வரையாத் தாரம் வருவிந் தயரும்

தன்குடி வாழ்நர் அங்குடிச் சீரூர்

இனிதுமன் றம்ம தானே (நற்., 135:1–5)

எனக் கூறுகின்றது. ஊரிலுள்ள மக்களுக்கே இரக்கக் குணம் இருந்ததென்பதை இது பேசுகிறது. அளவு படாத உணவுப் பொருள்களை இல்லிடத்தே வரும் விருந்தினர்களுக்குப் பகுத்தளித்து வாழும் இயல்புடைய குடிகள் மிகுந்த ஊர் என்பது இதன் கருத்து. இதனால் இப்பெருமக்களின் ஈகைக் குணம் தெரிய வருகிறது.

தலைவி பெற்றிருக்கும் அரிய குணங்களுள் சிலவற்றைப் புகழ்ந்து புலவர்கள் பாடியுள்ளனர். தலைவி, புகழ் இல்லறப்பண்பு கொடை என்ற மூன்றையும் பெற்றிருக்கிறாள் என நற்றிணை கூறுகின்றது.

இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்

அசையுநர் இருந்தோர்க்கு அரும்புணர்வு ஈன்ம்என

வினை வயிற் பிரிந்த வேறுபடு கொள்கை (நற். 214.1–3)

என்பதில் இல்லறத்திற்கு இன்பவாழ்வும் அதற்குக் கொடைப்பண்பும் தேவை எனக் கூறப்பட்டது. மறுமைக்கு இன்பந்தருவது கொடை. இதில் தலைவியின் கொடை என்பது அவளின் ஈகைக் குணத்தை உணர்த்துகின்றது.

இல்லந்தேடி நாள்தோறும் வரும் விருந்தினர்களுக்கு வேண்டியன கொடுத்து உபசரித்தனர் பண்டைத் தமிழர் என்பதை,

தொன்றுமுதிர் வேளிர் குன்றூர் அன்னஎன்

நல்மனை நனிவிருந் தயரும்

கைதூ வின்மையின் எய்தா மாறே (நற்., 280:8–10)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

மனிதர்கள் ஈதல் பண்புடையவர்களாக அமைதலே அவர்க்குரிய இலக்கணம் எனக் குறுந்தொகைப் பாடல் விவரிக்கிறது.

ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் இல்லெனச்

செய்வினை கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு

அம்மா அரிவையும் வருமோ

எம்மை உய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே (குறு., 63)

என்பது ஈதலின் சிறப்பை உணர்த்தி வருகின்றது.

பிறர் தம் இல்லந்தேடி வந்தக்கால் அவரை மன மகிழ்ந்து வரவேற்று உதவுதல் வேண்டும் என்பதை,

வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பின்

செறிந்த சேரிச் செம்மல் மூதூர் (அகம்., 15:4–6)

என்று அகநானூறு குறிக்கின்றது. பாழி மலைத் தலைவனான நன்னன் நாட்டிலுள்ள மக்களின் கொடைப்பண்பு இதன்கண் குறிப்பிடப்பட்டுள்ளது. துளு நாட்டில் மக்கள் பண்பு மிக்கவர். வரும் விருந்தினரை அன்புடன் உபசரிப்பர். அத்தகைய துளு நாட்டைப் போலவே தலைவனும் தலைவியும் சென்ற ஊர்களில் மக்கள் ஆதரித்தனர் என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. இச்செய்யுளில் செம்மல் மூதூர் எனக் குறிக்கப் பெற்றிருத்தல் அறியத்தக்கது. நற்பண்பும் கொடைத் தன்மையும் ஈகைக் குணமும் உடையாரைச் 'செம்மல்' என அழைத்தல் மரபு. அத்தகைய மக்கள் வாழும் ஊர் செம்மல் மூதூர் எனச் சுட்டப்பட்டது.

கடலிற் சென்று மீன்பிடிக்கும் மக்கள் தாம் பிடித்து வந்த மீன்களைப் பகுத்துக் கொண்டனர் என்ற செய்தி அகநானூற்றில் காணப்படுகின்றது.

குறுங்கண் அவ்வலைப் பயம்பா ராட்டி

கொழுங்கண் அயிலை பகுக்கும் துறைவன் (அக., 70: 3–4)

என்பது அதனைக் குறிக்கும் தொடராகும். விருந்தினரைப் போற்றும் பண்பும் ஈகைக் குணமும் பண்டைத்தமிழ்ப் பெண்களிடம் எப்போதும் இருந்ததை, "விருந்தயர் விருப்பினள்" (நற்.,374) எனக் குறிப்பிடும் இலக்கியம் பண்பாட்டுணர்வை வெளிப்படுத்துவதாகும். "ஓம்பா ஈகை மாவேள் எவ்வி" (புறம்., 24:18) என எவ்வி என்ற மன்னனைப் புலவர் ஒருவர் பாடுகின்றார். இது இம்மன்னனின் ஈகைத் தன்மையைப் புகழ்ந்தது. தம்மிடம் இருக்கும் பொருளைப் பாதுகாத்தல் வேண்டும் என்ற எண்ணமின்றி இம்மன்னன் இருந்ததாக இப்பாடலின் தொடர் குறிக்கின்றது. இதனால் இவன் ஈகைத் திறம் அறியப்படும்.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் ஈகைத் தன்மையைப் புறநானூறு, பின்வருமாறு பாடுகிறது.

அறிவும் ஈரமும் பெருங்கண் ணோட்டமும்

சோறு படுக்கும் தீயோடு

செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது

பிறிது தெறல் அறியார்நின் நிழல்வாழ்வோரே (புறம்., 20: 6–9)

என்பதில் ஈரம், பெருங்கண்ணோட்டம் உடையவனென்றும் சோறுபடுக்கும் தீ உண்டாக்குபவன் எனவும் கூறிப் பசியறிந்து உணவு தரும் ஈகையாளன் எனச் சுட்டப்படுகிறான் அம்மன்னன்.

சேரலாதன் மாண்பையும் வன்மையையும் இதனால் உரைக்கப்பட்டதாக நச்சர் குறிப்பர்.[26] ஈகையறம் செய்வது சிறப்பென்றாலும் அதிலும் உணவு தந்து காப்பாற்றுவோர் சிறந்த அறஞ்செய்தவர் என்று போற்றப்பட்டனர். அவர்கள் உணவு வழங்கிப் பசிபோக்கியதே சாலச் சிறந்தது எனக் கூறப்படுகிறது. உணவு தந்தோர் உயிர் தந்தோர் எனப் புகழப்பட்டனர். இதனை,

நீரின்றி அமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே
உண்டி முதற்றே உணவின் மாண்டம்
உண வெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே (புறம்., 18: 19–24)

எனப் புறநானூறு கூறுகிறது.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், ஈகைத்திறம் மிக்கவன் என்றும் பிறர்க்கு ஈயாதார் எவரும் சிறப்புடைய வாழ்வைப் பெறாதவர் என்றும் அவனே கூறுவதைக் காணமுடிகிறது. தாம் நல்லாட்சி செய்வதாகவும் தம்மை யாரும் வெல்ல இயலாதென்றும் அவ்வாறு யாரேனும் வெல்வர் ஆயின் தம்மிடம் வந்து பொருள் கேட்கும் இரவலர்க்கு உரிய தருணத்தில் ஈய இயலாத தன்மையைத் தான் பெறுவதாக வஞ்சினம் கூறுகிறான். அவன்,

இரப்போர்க்கீயா இன்மையா னுறவே (புறம்., 72:18)

எனப் பேசுகிறான்.

தம்மிடம் பொருள்தேடி வந்த பரிசிலரை மனந்திரியாது உவந்தளித்தல் பெருஞ்சிறப்பாகும். அத்துடன் பொருள் பெற்றுச் செல்லும் பரிசிலரைத் தேரேற்றி ஏழடியின் பின்வந்து அவர்களை வாழ்த்தி வழியனுப்பும் அளவிற்கு மன்னர்கள் ஈகைப் பண்புடையவர்களாக இருந்தனர். இதனைப் பொருநராற்றுப்படை,

பால்புரை புரவி நால்குடன் பூட்டி
காலின் ஏழ்அடிப் பின்சென்று (பொருந., 166)

மன்னன் வழியனுப்பினான் எனக் குறிப்பிடுகின்றது.

## 1.5. கொடை

கொடைத் திறம் பழங்கால மன்னர்களிடமும் செல்வக் குடியில் தோன்றிய பெருமக்களிடமும் மிகுந்து காணப்பட்டது. மேலும் கொடைப் பண்பு மன்னர்களுக்கே உரித்தெனவும் கூறப்பட்டது. பண்டைத் தமிழ் மன்னர்கள் வீரத்திலும் கொடைத்திறத்திலும் மேம்பட்டவர்களாக இருந்தனர். ஓரி என்ற மன்னனை,

மாரிபோல வழங்கும் ஓரி (நற்., 265:7)

என்று சிறப்பிப்பர். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை,

நல்லமர்க் கடந்தநின் செல்லுறழ் தடக்கை
இரப்போர்க் கவிதலல்லதை இரைஇய
மலர்பறியா எனக் கேட்டிகும் இனியே (பதிற்., 5:52: 10–12)

என்று புலவர் பாடுகின்றார். இரப்போர்க்கு ஈதலின் பொருட்டாக மட்டுமே கவியும் இவன் கை. இரத்தற்குக் கவியாது என்பது இதன் பொருள். இதனால் அவன் கொடைத்திறம் உணர்த்தப்பட்டது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை,

வருநர் வரையார் வார வேண்டி
விருந்துகண் மாறாது உணீஇய பாசவர்
ஊனத் தழித்த வானிணக் கொழுங்குறை (பதிற்., 2: 20–21)

எனப் பாடுகின்றார் புலவர். தம்பாற் பரிசில் பெறுதற்பொருட்டு வந்தோர்க்கு இன்ன அளவிற்று என்றில்லாமல் வழங்கி, அவர் தம்மைவிட்டுப் பிறிதோரிடத்து உண்ணச்செல்லாது உணவு வழங்கினான் என்பது கருத்து.

இலம் என்னும் எவ்வம் உரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே உள[27] (குறள் 223)

என்றும் குறட்பாவிற்கும் இவ்வாறே பொருள் உரைப்பர்.

பாணர்க்கும், புலவர்க்கும் கலைவல்லார்க்கும் பொருள் கொடுத்தான் என்பது இவனது அறிவு மேம்பாட்டுத் திறனை வெளிப்படுத்தும் பரிசிலர்க்குச் செல்வமாக விளங்குவதாகக் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் பாராட்டப்படுகிறான்.

செயலாமை கண்ணிச் சேரலர் வேந்தே
பரிசிலர் வெறுக்கை பாணர் நாளவை
வாணுதல் கணவ மள்ளர் ஏறே (பதிற்., 38: 9–10)

என்பது பதிற்றுப்பத்து. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்ற மன்னன் மண்ணுலகில் வாழும் உயிர்களுக்கெல்லாம் கொடுத்து உதவியதால் திருமாலை ஒத்து விளங்கினான். அவனைப் பதிற்றுப்பத்து,

ஈத்துக்கை தண்டாக் கைகடுந் துப்பின்
புரைவயிற் புரைவயிற் பெரிய நல்கி
ஏமம் ஆகிய சீர்கெழு விழவின்
நெடியோன் அன்ன நல்லிசை
ஒடியா மைந்த! நின் பண்புபல நயந்தே (பதிற்., 2:15:36–40)

எனப் புகழ்ந்துரைக்கிறது. இம்மன்னனது கொடைச் சிறப்பு இதனால் விளங்கும். இம்மன்னனிடம் பரிசில் பெற வந்த புலவர்கள் உடுத்தியிருந்த கந்தலாடையை மாற்றிப் புத்தாடை வழங்கினான் என இவனது கொடைத்திறம் சொல்லப்பட்டுள்ளது.

நீர்ப்படு பருந்தின் இருஞ்சிறகு அன்ன
நிலந்தின் சிதாஅர் களைந்த பின்றை
நூலாக் கலிங்கம் வாளரைக் கொளீஇ (பதி., 2.12:19–21)

என்பது இவனைப் பற்றிய செய்தியாகும். இவனிடம் பொருள் பெற்ற புலவர் 'நின் பலர்புகழ் செல்வம் இனிது கண்டிகுமே' (பதிற்., 2:11: 19–20) என்று சேர மன்னனது செல்வத்தைப் புகழ்ந்து பேசுவர். பிறர் ஈகைக்குப் பயன்படும் செல்வம் உயர்வாகவும் பிறர் ஈகைக்குப் பயன்படாத செல்வம் இழிவாகவும் சங்கப்புலவர் கருதினர். இதனை,

தம்பொருளைத் தொலைத்தார்க் கீயாமை இழிவு (கலி., 2:11)
இல்லை என்றார்க் கீயாமை இழிவு (கலி., 2:16)
போக்கிட மில்லார்க் கீயாமை இழிவு (கலி., 2:19)

என்னும் பாலைக்கலித் தொடர்கள் உணர்த்தும்.

தித்தன் என்ற குறுநில மன்னனின் கொடைச்சிறப்பு உயர்வாகச் சொல்லப்பட்டுள்ளது.

மழைவளம் தரும் மாவண் தித்தன் (அக., 6:3)

என்று அவன் புகழப்படுகிறான். மழைபோலப் பொருள் தரும் கொடைத்திறம் மிக்கவன் அவன் என்பது கருத்து. வயலில் உழுது விளைவித்த நெல்லை உழவர்கள் அள்ளி அள்ளி வழங்கினர் என்பதை,

பெருங்களம் தொடுத்த உழவர் போல
இரந்தோர் அருங்கலம் மல்க வீசி (அக., 30:7–9)

என அகப்பாடல் கூறுகிறது. மன்னர்கள் தங்கள் அரண்மனையில் அவர்தம் இருக்கையில் அமர்ந்திருந்த காலத்திலெல்லாம் பொருள் வழங்கியவாறே இருப்பர். அப்படி வழங்காது இருக்கையில் அவர்கள் அமர்வதில்லை.

வருநர் வரையாப் பெருநாள் இருக்கை (அக., 227:14–15)

என்று சங்க இலக்கியத்தில் மன்னனது நாள்மகிழ் இருக்கை சிறப்பித்துப் பேசப்படுகிறது. நள்ளி என்ற மன்னன் இரப்போர்க்கு அணிகலன்களையும் யானைகளையும் தந்தான் என்பதை,

மருந்தும் உடையையோ மற்றே இரப்போர்க்கு

இழையணி நெடுந்தேர் களிறொடு என்றும்

மழைசுரந் தன்ன ஈகை (அக., 238: 11–14)

என அகநானூறு புகழ்ந்துரைக்கிறது.

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி,

தண்டா ஈகைத் தகைமான் குடுமி (புறம்., 6:26)

எனப் புகழப்பட்டுள்ளான். தண்டா ஈகை என்பது எப்போதும் குறையாது பொருளை வாரி வாரி வழங்கும் ஆற்றல் உடையவன் என்பது பொருள்.

பரிசிலர் குறைவில்லாது வந்த வண்ணம் இருப்பதே அரசியல் வாழ்க்கை. அரசர்களும் மனந்தளராது பொருள் தந்து புலவர்களையும் பரிசிலர்களையும் போற்றி வந்தனர். அவ்வாறு பொருள் வழங்கும்போது அவர்களது தரம் அறிந்து பொருள்களை வழங்கினர். கொடைத்திறத்திலும் அவர்கள்தம் நுண்மாண் நுழைபுலம் வெளிப்பட்டது. இத்தகைய அரசியல் சூழலைப் புலவர்,

பாசவற் படப்பை ஆரயில் பலதந்து

அவ்வெயில் கொண்ட செய்வுறு நன்கலம்

பரிசின் மாக்கட்கு வரிசையின் நல்கி

பணியியர் அத்தை நின் குடையே (புறம்., 6: 14–17)

எனப் பாராட்டிப் பாடுகிறார்.

ஒடுங்கா உள்ளத் தோம்பா ஈகை (புறம்.8:4)

என ஒரு மன்னன் புகழப்படுகிறான். மனம் தளர்வின்றிப் பரிசிலர்க்குப் பொருள் வழங்கினான் என்பது கருத்து. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, "செந்நீர்ப் பசும்பொன் வயிரியர் கீந்தான்" (புறம்.9:9) எனக் கூறப்படுகிறான். பசும்பொன்னை மட்டுமே வழங்கியமை அவனது செல்வச் செழிப்பைக் காட்டும்.

பரிசிலர்களில் பாணர், பாணினி, பாடினி எனப் பலருண்டு. இவர்களின் ஆடல் பாடல் போன்ற கலைத்திறனை மெச்சி மன்னர்கள் பரிசில் வழங்கினர். ஒரு மன்னன் பாடினிக்குப் பொற்றாமரை வழங்கினான் எனப் புறநானூறு கூறுகிறது (புறம்., 11: 17). "பரிசிலர்க்கு அருங்கலம் நல்கவும்" (புறம்., 14: 10) என்பதால்

அழகுடன் செய்யப்பெற்ற அணிகலன்களையே மன்னர்கள் பரிசிலர்க்கு வழங்கிய வரலாறு அறியப்படுகிறது. தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், "வரையா ஈகைக் குடைவர் கோவே" (புறம்., 17:40) எனக் கொடைத்திறன் புகழப்படுகிறான். "பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்" (புறம்., 2:16) எனச் சோழ மன்னன் ஒருவன் புகழப்படுகிறான். உணவளித்தல் இவனது கொடைத்திறனாகப் பேசப்படுகிறது.

பண்டைத் தமிழ் மன்னர்களை நாடிப் பரிசில் பெறப் புலவரும் பிறரும் வந்தனர். அவர்கள் மன்னர்களின் முகக் குறிப்பை நன்கறிந்தவர்கள். அக்குறிப்பறிந்து இவன் பொருள் தருவான் என விரும்பி வந்தனர். இதனை,

நின்நசை வேட்கையின் இரவலர் வருவர்அது
முன்னம் முகத்தின் உணர்ந்து அவர்
இன்மை தீர்த்தல் வன்மை யானே (புறம்., 3: 24–26)

எனப் புறநானூறு குறிப்பிடுகிறது. மன்னர்கள் புலவர்களால் போற்றப்படும்போதும்,

அதனால் அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெரும நின்செல்வம்
ஆற்றாமை நின்போற் றாமையே (புறம்., 28:15–18)

என்று வாழ்த்தப்பட்டனர். அவன் மண்ணில் அறம் ஓங்குக என வாழ்த்துதல் பொதுவாக உணர்த்தப்பட்டது. சமூகம் முழுதும் 'அறம்' பொதுப் பண்பாகப் பார்க்கப்பட்டது. மன்னர்களின் கொடைத்தன்மையின் பொதுப் பண்புகளை,

செவ்வியோர்க் களித்தல் (புறம்., 29: 9)
இல்லை யென்போர்க் கின்னா கிலியர் (புறம்., 29:12)

எனப் புறப்பாடல் இரு இடங்களில் குறிப்பிடுகின்றது. பொருள் உடையோர் கொடுத்தலும் இல்லாதோர் இரத்தலும் அமைதல் வேண்டும் என்பதை, "உடையோரீதல் இல்லோ ரிரத்தல்" (புறம்., 38:14) எனக் குறிப்பிடுகிறது புறப்பாட்டு. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், "ஆனா ஈகை அடுபோ ரன்னல்" (புறம்., 42:1) எனப் பேசப்படுகிறான். பொருள் பெற்றோர் தாம் பெற்றிருக்கும் பொருளுக்காக மனம் மகிழ்ந்து சுற்றத்தார்க்கும் வழங்க வேண்டும்

என்பதை, "பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி" (புறம்., 47:4–7) எனக் குறிப்பிடுகிறது. பாரியின் கொடைத்திறனை அவ்வையார்,

பாரி பாரி என்று பலவேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் உளனோ
மாரியும் உண்டீங்கு உலகு புரப்பதுவே (புறம்., 107)

என்று புகழ்கிறார். மாரியைப் போலவே பயன் கருதாது வழங்கக் கூடியவன் என்பது இச்செய்யுளின் பொருள்.

தாம் செய்யும் உதவிக்கு விண்ணுலகப் புகழையும் விரும்பாதவன் 'ஆய்' என்ற மன்னன். அவனை,

இம்மைச் செய்தது மறுமைக்கு ஆமெனும்
அறவிலை வணிகன் ஆஅய் அலன்
பிறரும் சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே (புறம்., 134)

என்று பாடுகின்றார் ஏணிச்சேரி முடமோசியார் என்ற புலவர். இன்றைக்குச் செய்த ஒரு நற்செயல் பின்னொரு காலத்தே நமக்கு உதவியாக அமையும் என்று பின்னால் வரும் பயன் கருதி அறம் செய்பவன் ஆய் அல்லன் எனப் புகழ்கிறார் புலவர்.

பரணர் வையாவிக் கோப்பெரும்பேகன் என்ற மன்னனின் கொடைத்திறனை மிகவும் எடுத்துரைக்கிறார். அவர்,

எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றே அன்றே
பிறர் வறுமை நோக்கின்று அவன்கை வண்மையே (புறம்., 141)

எனப் பாடுகிறார். இப்பாடலிலும் பின்வரும் நன்மை கருதி உதவி செய்யாதவன் பேகன் எனப் பரணர் பாடுகின்றார். பொதுவாகத் தமிழ் இலக்கியங்கள் கைம்மாறு வேண்டாக் கடப்பாட்டுணர்வை வலியுறுத்திப் பாடுகின்றன.

குமணனைப் பாடும் பெருந்தலைச் சாத்தனார் என்ற புலவர்,

> மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
> தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே
> துன்னருஞ் சிறப்பின் உயர்ந்த செல்வர்
> இன்மையின் இரப்போர்க்கு ஈஇ யாமையின்
> தொன்மை மாக்களின் தொடர்பு அறியலரே
> ....... ....... ....... ....... .......
> பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல்என்
> நாடுஇழந் ததனினும் நணிஇன் னாதென
> வாள்தந் தனனே தலைஎனக் கீய (புறம்., 165: 1–5, 10–13)

என்று பாடுகிறார். ஈகையின் சிறப்பை இப்பாடல் குறிக்கின்றது. மன்னர்களின் கொடைப் பண்பையும் நற்குணத்தையும் நன்கறிந்தவர்கள் புலவர்கள். அவர்களின் சால்பினை அறிந்து தம் வறுமை வாழ்க்கையைத் தயக்கமின்றி எடுத்துக் கூறுகின்றனர். குமணன் காட்டில் இருந்த காலை, அவனைத் தேடி வந்த புலவர்க்குக் கொடுக்க ஏதுமில்லாத நிலையில் தன் தலையைக் கொய்து செல்ல வாளைத் தருகிறான் என்கிறது இப்பாடல். மேலும் அப்புலவர் குமணனை நோக்கி,

> பாலின்மையின் தோலொடு திரங்கி
> இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
>
> தீ்ரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கண்என்
> மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
> நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண (புறம்., 164: 3–8)

எனப் பாடுகின்றார். பாலின்மையால் தாயின் முகம் குழந்தை நோக்க, தாய் குழந்தையைக் கண்டு வருந்த, அவளின் வருத்தம் கண்டு, தான் மன்னனைக் காண வந்ததாகப் புலவர் பாடியிருப்பது மன்னனின் சிறந்த கொடைக் குணத்தை விளக்குவதாக உள்ளது. மன்னருள் சிலர் ஈயாது வாழ்வாரும் உளர். அவர் அரிதானவரே. அவ்வாறு யாரும் உளராயின் அவரெல்லாம் நாணம் அடையும்படி ஒரு மன்னன் பொருள் தந்தான் எனப் பாடப்பட்டுள்ளது.

வடிநவில் அம்பின் வில்லோர் பெரும

கைவள் ஈகைக் கடுமான் கொற்ற

வையக வரப்பில் தமிழகம் கேட்பப்

பொய்யச் செந்நா நெளிய ஏத்திப்

பாடுப என்ப பரிசிலர் நாளும்

ஈயா மன்னர் நாண

வீயாது பரந்தநின் வசையில்வான் புகழே (புறம்., 168: 16–22)

என்று பிட்டங்கொற்றனைப் பாடுகிறார் புலவர்.

சிறுகுடிக்கிழான் பண்ணன்,

பாணர் காண்க இவன் கடும்பினது இடும்பை

யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன

ஊணொலி அரவந் தானும் கேட்கும்

பொய்யா எழிலி பொய்விடம் நோக்கி

முட்டை கொண்டு வற்புலம் சேரும்

சிறுநுண் எறும்பின் சில்லொழுக்கு ஏய்க்கச்

சோறுடைக் கையர் வீறுவீறு இயங்கும்

இருங்கிளைச் சிறாஅர்க் கண்டும் கண்டும்

மற்றும் மற்றும் வினவுதும் தெற்றெனப்

பசிப்பிணி மருத்துவன் இல்லம்

அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே (புறம்., 173: 7–12)

எனப் போற்றப்படுகிறான். இங்குப் பசிப்பிணி மருத்துவன் என அவன் குறிக்கப்பட்டிருப்பது எண்ணத்தக்கது.

ஆய் அண்டிரன் என்ற மன்னன் இறந்தான். அவனையும் அவன் மகளிரையும் கூற்றுவன் கொண்டு போனான். அவன் உடம்பும் புறங்காட்டில் எரிக்கப்பட்டுவிட்டது. இனி இவ்வுலகில் தமக்கு உதவுவார் யாருமிலர் எனக் கருதிப் புலவர்களும் வேறு நாடு நோக்கிப் புறப்பட்டனர் என்று புலவர் பாடுகிறார். அம்மன்னன் இன்மையால் புலவர் வெளியில் சென்றதை,

................................ புலவர்

வாடிய பசியர் ஆகிப் பிறர்

நாடுபடு செலவினர் ஆயினர் இனியே (புறம்., 240:14–15)

எனக் குறிப்பிடுகிறார் புலவர்.

ஈன்று புறந்தருதல் எண்தலைக் கடனே

சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே

நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே

ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்

களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே (புறம்., 312 )

என்று பொன்முடியார் என்ற புலவர் பாடுகின்றார். இதில் நாட்டிலுள்ளோர் அனைவர்க்கும் உரிய கடமைகள் எடுத்துக் கூறப்பட்டன.

'நன்னடை நல்கல்' என்பது வேந்தர்களின் கொடைப் பண்பை உணர்த்துவதாகும். விருந்தினரை ஒம்புதற்குக் குறுநில மன்னன் ஒருவன் தன்வாளை அடகிட்டான் (புறம்., 316:5–6) எனக் கூறப்படுவனவெல்லாம் மன்னர்தம் கொடைச் சிறப்புகளாகும்.

பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார்,

ஈதல் உள்ளமொடு இசைவேட் குவையே (மதுரை., 205)

எனப் பாடுகிறார். அவன் கொடைத் திறனில் சிறந்த புகழ்பெற வேண்டும் என்பது அவரது கருத்து. 'அரவுரி யன்ன அறுவை நல்கி' (பொருந., 83) என்று கரிகால் பெருவளத்தான் செய்த கொடை கூறப்படுகிறது. இரவலர்க்குக் குதிரை, தேர், நாடு போன்றவற்றையும் மன்னர்கள் கொடையாகக் கொடுத்துள்ளனர் (சிறுபாண்.,95–98).

கொடையும் கோளும் வழங்குநர்த் தடுத்த

அடையா வாயில் மிளைசூழ் படைப்பை (பெரும்., 400–401)

என்று பரிசிலர்க்குப் பொருள் வழங்குதற்காகவே அமைந்த அடையா வாயிலுடைய அரண்மனை என்று மன்னன் ஒருவனின் கொடைத்திறம் பேசப்படுகிறது.

திறல்சால் வென்றியொடு தெவ்வுப் புலமகற்றி
விறல்வேல் மன்னர் மன்னெயில் முருக்கி
நயவர் பாணர் புன்கண் தீர்த்தபின்
வயவர் வந்த வான்கேழ் நிதியமொடு (சிறுபாண்., 246–49)

என்று நல்லியக்கோடன் என்ற மன்னனின் கொடைத்திறம் பேசப்படுகின்றது. தான் கொண்டுவந்த அணிகலன் முதலியவற்றை இரந்து நின்று பிற தேயத்தார்க்குக் கொடுத்தான் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதிற்., 10–11). கரிகால் பெருவளத்தான் யானைகளையும் பிறபொருள்களையும் பரிசாகத் தந்தான் (பொருந., 125–130).

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பார்ப்பனர்க்குப் பொருளும் ஊரும் தந்ததை,

பார்ப்பார்க்குக்
கபிலையொடு குடநாட்டு ஒரூர் தந்து (பதிற்., 6:4–5)

எனப் பாடியுள்ளனர்.

**நட்பும் உதவியும்**

நட்பும் உதவி செய்யும் பண்பும் தமிழர்க்குப் பழமை வாய்ந்தவை. தமிழ்மொழி மற்றும் பண்பாட்டுக் கூறுகளுக்கு அடையாளமாக விளங்கும் சங்க இலக்கியங்களில் இவ்விரண்டும் நுண்ணிதாய்ப் புனையப்பட்டிருப்பன. தமிழ் ஆய்வுத் தளத்தில் இருப்போரின் கண்ணில் தோன்றும் முதற்காட்சிப் படிமமாகத் தோன்றுவன சில. அவற்றுள் இவை மிகுதியும் காணப்படுகின்றன. குறிப்பாகத் தலைவன், தலைவியர் இடையே உள்ள நட்புத்திறன் சிறப்பாகப் புனையப்படுகிறது. பிறர்க்கு உதவும் அருங்குணங்கள் இவர் தமக்கிடையே உள்ளதையும் காணமுடிகிறது. செவிலி, நற்றாய் போன்றோர் தலைவியிடத்துக் கொண்ட அன்பு மிகுதியையும் சங்கப் பாடல்களில் காணலாம். மேலும் பாங்கன், தோழி இவர்கள் தலைவன் தலைவரிடையே கொண்ட நட்பும் குறிப்பிடத்தக்கது. புலவர்கள் மன்னர்களிடையே மிகுந்த அன்பு கொண்டிருந்தனர். மன்னர்கள்

புலவர்களைப் பெரிதும் மதித்தனர். இவ்வாறு மன்னரும் புலவரும் அன்பு கொண்டிருந்த மரபு பழமையாகவே உள்ளது.

<u>தலைவன் அன்பும் உதவும் மனப்பான்மையும்</u>

இல்லறத்தில் வாழும் தலைமக்கள் மனைவியரிடத்து மிகுந்த அன்பு கொண்டிருந்தனர். மனைவியைக் கிழத்தி என்றும் இல்லோள் எனவும் பண்டை இலக்கியங்கள் சுட்டுகின்றன.[28] "செயிர் தீர் கொள்கையெங் காதலி" (புறம்., 210:) என்றவிடத்துக் "காதலி" என்ற சொல் மனைவியைக் குறிப்பதாக அமைந்துள்ளது. 'செயிர்தீர் கொள்கை' என்பது இல்லத்து வாழும் பெண்களின் குறிப்பாக மனைவியரின் கற்புத்திறன் உணர்த்துவதாக அமைந்துள்ளது. பிற்காலத்தில் பாரதி போன்ற புலவர்களும் 'தையலை உயர்வு செய்'[29] எனப் பாடினர். 'செயிர் கற்பின் சேயிழை கணவ'[30] என்று புறப்பாட்டிலும் பெண்கள் உயர்வாகக் கூறப்பட்டுள்ளனர்.

மனைவியை இவ்வாறு பெருமையுடன் கூறும் மரபு தொடர்வதால், வள்ளுவர் 'வாழ்க்கைத் துணைநலம்'[31] என்கிறார். சங்க இலக்கியத்தில் தலைவன் தலைவரிடையே வளரும் 'காதல்' நட்பு என்றே சொல்லப்படுகின்றது. நட்பில் இருவரும் சமமானவர் என்ற அடிப்படை உள்ளது. இந்த நோக்கில் பல்வேறு செய்யுட்கள் காணப்படுகின்றன.

> கான மஞ்ஞை யறையீன் முட்டை
> வெயிலாடு முசுவின் குருளை உருட்டும்
> குன்ற நாடன் கேண்மை என்றும்
> நன்றுமன் வாழி தோழி உண்கண்
> நீரொடு ஆங்குத் தணப்ப
> உள்ளா தாற்றல் வல்லு வோர்க்கே (குறு., 38)

என்னும் செய்யுளில் வரும் 'குன்றநாடன் கேண்மை' என்பது தலைவனுடன் தலைவிக்குள்ள நட்புறவைக் குறித்தது. தலைவனுடைய நட்பு அவன் பிரியாதிருக்கும் காலை மிக நல்லதாய் உளது என்கிறாள் தலைவி. தலைவன் பிரியின் நட்பு வருத்தத்தை உண்டாக்கும் எனும் பொருட்படப் பேசுகிறாள்.

தலைவனுக்கும் தலைவிக்கும் நட்பு இருத்தலைப் போலவே தலைவிக்கும், தோழிக்கும் இணை பிரியா நட்பு இருப்பதையும் சங்கப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. அவர்தம் நட்பைத் தலைவனே கண்டுணர்ந்து கூறுவதாய்ச் செய்யுளொன்று பேசுகிறது. ஆய மகளிரொடு நீர்நிலையில் தலைவி நீராடுகிறாள். அவள் ஆண்டு எதைச் செய்கின்றனளோ அதையே அப்பெண்களில் ஒருத்தியும் செய்கிறாள். இவ்வாறு ஒன்றுபட்டு இயங்கும் தோழியே தலைவிக்கு உற்ற தோழி என அவர்களின் செயலறிந்து கூறினான் தலைவன். குறுந்தொகைச் செய்யுளொன்று இதனை,

> தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
> கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும்
> புணைகை விட்டுப் புனலோ டொழுகின்
> ஆண்டும் வருகுவள் போலும் மாண்ட
> மாரிப் பித்திகத்து நீர்வார் தொழுமுகைச்
> செவ்வரி நுறமும் கொழுங்கடை மழைக்கட்
> குளிதலைத் தலைஇய தளிரன் னோளே (குறு., 222)

எனப் புனைகின்றது. இஃது தலைவன் கூற்றாய் அமைந்தது. புணை–தெப்பம். நீராடுங்கால் தெப்பத்தின் எப்பகுதியைத் தலைவி பிடித்தனளோ அப்பகுதியையே தோழியும் பிடிக்கிறாள். இவ்வாறு விளையாடுகின்றனர். தெப்பத்தைவிட்டுத் தண்ணீரில் மிதந்தால் இத்தோழியும் மிதப்பள் போலும் என நகையாடும் தலைவன் கூற்றில் தலைவிக்கும் தோழிக்கும் இடையிலான அன்புறவு

வெளிப்படுகிறது. அன்பு மிக நுண்ணிது. சிறுசிறு செயல்களில் கூட அது தோன்றும். இதனால்,

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்[32] (குறள் 71)

என்றார் வள்ளுவர்.

பொருள்தேடிப் பிரிந்திருந்த தலைவன் ஆங்கிருந்தகாலை, தலைவியையே எண்ணியிருந்ததாகக் கூறுகிறான். அவன் அவ்வாறு கூறியது, தலைவியைச் சுட்டாமல் அவளது நட்பையே சுட்டியதாக அமைந்திருக்கிறது.

இறப்பருங் குன்றம் இறந்த யாமே
குறுநடைப் பலவுள் ளலமே நெறிமுதற்
கடற்றிற் கலித்த முடக்கினை வெட்சி
தலையவிழ் பல்போது கமழும்
மையிருங் கூந்தல் மடந்தை நட்பே (குறு., 209:3–7)

எனவரும் குறுந்தொகைச் செய்யுளின் இறுதியடி தலைவன் தலைவியிடம் கொண்டிருந்த அன்பை உணர்த்துவதாம்.

பெறுவது இயையா தாயினும் உறுவதொன்
றுண்டுமன் வாழிய நெஞ்சே திண்டேர்க்
கைவள் ளோரி கானந் தீண்டி
எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்
மையீ ரோதி மாஅ யோள்வயின்
இன்றை யன்ன நட்பின் இந்நோய்
இறுமுறை எனவொன் றின்றி
மறுமை உலகத்து மன்னுதல் பெறுமே (குறு., 199)

எனவரும் பாடலில் தலைவன் தலைவிமீது கொண்ட பேரன்பு விளக்கப்படுகின்றது. இது தலைவன் தம் நெஞ்சிற்குக் கூறும் கூற்றாக அமைந்துள்ளது. தலைவியிடம் தாம் கொண்ட நட்பு அழிவற்றது என்கிறான் அவன். இம்மையுலகத்தும் மறுமையுலகத்தும் தொடரக் கூடியது என்றும் எனவே

தலைவியை அகன்றிருத்தல் ஆகாதெனவும் அவன் கூற்று அமைந்திருக்கிறது. 'இன்றையன்ன நட்பு' என்பது இன்றிருப்பது போன்று என்றும் நின்று நிலவும் காதல் என உரையாசிரியர் விளக்கம் தருகிறார்.[33]

தலைவன் தலைவியை வரைந்து கொள்வதற்கு முன்னர் அவன் வரும் காலத்தைத் தலைவி எதிர்பார்த்திருந்தாள். அந்நிலையில் அயல் மனைப் பெண்ணொருத்தி அவன் விரைவில் வருவான் என்றும் அதற்கெனக் கவலுதல் வேண்டாம் எனவும் தெரிவிக்கின்றாள். பின்னர்த் திருமணம் ஆனபின் அவன் கூறியதனை எண்ணி அயல்மனைப் பெண் அமுதம் உண்டு நீண்டநாள் வாழ்தல் வேண்டும் என்று புகழ்கின்றாள். இப்புகழ்ச்சிக் கூற்றுத் தலைவிக்கும், தலைவனுக்கும் உள்ள நட்பைக் கூறுகின்றது.

அமுதம் உண்கநம் அயலில் ஆட்டி
. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
மலைகெழு நாடனை வருமென் றோளே (குறு., 209:1, 7)

என வரும் செய்யுள் தொடர்களில் இக்கருத்து உணர்த்தப்பட்டது. இது இல்லக்கிழத்தியாகிய தலைவி தன்னைக் காணவந்த தோழியிடம் கூறியது.

<u>தலைவியின் அன்பு</u>

மக்கள் ஒருவருக்கொருவர் அன்புள்ளம் கொண்டு பழகியதையும் உயிரன்பு காட்டியதையும் தலைவனின் நட்பை வைத்துக்கூறும் பழந்தமிழ்ப் பாடல்கள் தலைவியின் நட்பைப் புனைவதன் வழியாகவும் வெளிப்படுத்துகின்றன. தலைவனைப் பிரிந்து வாடும் தலைவியைக் கண்டு மனமிரங்கும் தோழி தலைவியின் வருத்தத்திற்குத் தாமே காரணம் எனக் கூறி வருந்துகிறாள். நட்புக் கொண்ட தலைவனும் குற்றமில்லாதவன். அவனை நம்பிய தலைவியும் குறையற்றவள். இடையிலிருந்த தாமே குறையுடையவளாகக் கருதிக் கூறும் தோழியின் கூற்று, குறிப்பிடத்தக்கதாய் அமைகிறது.

அருள்புரி நெஞ்சமொடு எஃதுணையாக
வந்தோன் கொடியனும் அல்லன் தந்த
நீதிவறு உடையும் அல்லை நின்வயின்
ஆனா அரும்படர் செய்த
யானே தோழி தவறுடை யேனே (அக., 72:18–22)

என்கிறாள் தோழி.

தலைவன் தன்னை விரும்பியவர் மீதும் மாறாத அன்பு கொண்டவன் என்றும் அப்பண்பினால் தானும் அவன்மீது குறையாத அன்புடையவளாக மாறியதாகவும் தலைவி குறிப்பிடுகின்றாள். இத்தலைவியைப் பாராட்டுவதற்குக் காரணமாக அவள் தலைவன்மீது கொண்டுள்ள நட்பே அமைந்திருக்கிறது எனக் கூறுவதாகச் செய்யுள் அமைந்திருக்கிறது (குறு., 326:1–2).

துணைத்த கோதைப் பணைப்பெருந் தோளினர்
கடலாடு மகளிர் கான லிழைத்த
சிறுமனைப் புணர்ந்த நட்பே தோழி
ஒருநாள் துறைவன் துறப்பின்
பன்னாள் வரூஉம் இன்னா மைத்தே (குறு., 326)

என்கிறாள் தலைவி.

தலைவி, பெண்கள் சிற்றில் இழைத்து மகிழ்ந்து விளையாடும் விளையாட்டினைச் 'சிறுமனைப் புணர்ந்த' எனக் கூறினாள். தலைவி தம் ஆயத்தாருடன் கடற்கானலில் சிறுமனை அமைத்து விளையாடுங்கால் தலைவன் வர, ஆண்டு மலர்ந்த காதல் மறக்கவியலாததாயிற்று என்றாள். ஒருநாள் உருவாகிய நட்பும் பல நாளும் மறத்தல் இல்லை என்பது கருத்து. சிற்றில் விளையாடும் வழக்கம் பண்டை நாள் உள்ளதைப் பிற இலக்கியப் பதிவுகளிலும் காணமுடிகிறது.

அன்னை அறியினும் அறிக அலர்வாய்

அம்மென் சேரி கேட்பினும் கேட்க
பிறிதொன்று இன்மை யறியக் கூறிக்
கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக்
கடுஞ்சூல் தருகுவன் நினக்கே கானல்
தொடலை ஆயமொடு கடலுடன் ஆடியும்
சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும்
வருந்திய வருத்தம் தீர யாம்சிறிது
இருந்தன மாக எய்த வந்து
தடமென் பணைத்தோள் மடநல் லீரே (அக., 110:1–10)

என அகப்பாட்டுச் செய்யுளடிகள் மகளிர் சிற்றில் விளையாடியது, சிறு சோறு சமைத்து விளையாடியது ஆகியவற்றைச் சுட்டுகின்றன. கடற்கரையில் தலைவன் வந்ததையும் ஆங்குத் தலைவியுடன் தான் இருந்ததையும் அப்போது தலைவனைக் கண்ட தலைவி அவன்மேற் காதல் கொண்டாள் என்றும் தோழி செவிலித்தாயிடம் கூறுகின்றாள். இதனால் தலைவியிடம் ஏற்பட்ட மாற்றத்தினைக் கண்டு பிறவாறு அவனைப்பற்றித் தான் கொண்ட வருத்தத்திலிருந்து ஒருவாறு மனநிறைவிற்குச் சென்றான் எனக் கருதலாம்.

பொருள்தேடச் சென்ற தலைவன் விரைவில் திரும்பாத நிலையில் ஊரிலும் அலர் எழத் தலைவி மனம் வருந்துகிறாள். அவளது மாற்றம் உணர்ந்த தோழி, தலைவியின் நட்பு உயர்ந்ததென்றும் அதனைத் தலைவன் உணர்ந்துள்ளான் என்றும் ஊரில் எழுந்த அலர்க்கு வருந்தவேண்டாம் எனவும் அவளைத் தேற்றுகிறாள்.

சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதையப் புணரி
குணில்வாய் முரசின் இயங்குந் துறைவன்
நல்கிய நாள்தவச் சிலவே அலரே
வில்கெழு தானை விச்சியர் பெருமகன்

வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்

புலிநோக் குறழ்நிலை கண்ட

கலிகெழு குறும்பூர் ஆர்ப்பினும் பெரிதே (குறு., 328)

என்ற குறுந்தொகைப் பாடல் இதனை விளக்கும். தலைவன் பழகிய நாட்கள் சிறிதளவே எனினும் அதன்பால் தலைவி வளர்த்துக் கொண்ட நட்புப் பெரிது எனக் கூறினாள். தலைவியின் நட்பின் சிறப்பை இச்செய்யுள் புலப்படுத்தியவாறு உணரலாம். இச்செய்யுளில் வரும் 'விச்சியர் பெருமகன்' என்பான் பாரியின் மகளிரை மணந்துகொள்ளக் கபிலரால் வேண்டப்பட்டவன் என்று வரலாறு கூறுகிறது. இக்கருத்தைப் புறநானூறு,

நிணந்தின்று செருக்கிய நெருப்புத்தலை நெடுவேல்

களங்கொண்டு கனலும் கடுங்கண் யானை

விளங்குமணிக் கொடும்பூண் விச்சிக்கோவே

இவரே பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை

நாத்தழும்பு இருப்பப் பாடா தாயினும்

கறங்குமணி நெடுந்தேர் கொள்க எனக் கொடுத்த

பரந்து ஓங்கு சிறப்பின் பாரி மகளிர்

யானே பரிசிலன் மன்னும் அந்தணன், நீயே

வரிசையில் வணங்கும் வாள்மேம் படுநன்

நினக்குயான் கொடுப்பக் கொண்மதி (புறம்., 200)

என்னும் செய்யுளில் குறிப்பிடுகின்றது.

தலைவன் அன்பிலாதவன் என்று தோழி கூறக்கேட்டு அது பொறாத தலைவி தலைவனிடம் தாம் கொண்ட நட்பு மிகச் சிறந்ததென்றும் குறை கூறற்கு அப்பாற்பட்டவன் தலைவன் என்றும் தலைவி தோழியை மறுத்துரைக்கிறாள்.

பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை

நீத்துநீர் இருங்கழி இரை தேர்ந்துண்டு

பூக்கமழ் பொதும்பில் சேக்கும் துறைவனொடு

யாத்தேம் யாத்தன்று நட்பே

அவிழ்த்தற்கரிதது முடிந்தமைந் தன்றே (குறு., 313)

என்பது தலைவி கூற்று. தலைவன் நட்பு என்றென்றும் அழியாத சிறந்த நட்பு எனப் புகழ்ந்துரைக்கிறாள் தலைவி.

சிறுகுடிப் பாக்கத்து மறுகுபுலால் மறுக்கும்

மணங்கமழ் கானல் இனையதயர்ங் கேண்மை (நற்., 203)

என்று தோழி தலைவியிடம் கூறுவது ஒருநாள் பழகினும் தலைவி தலைவன்பால் கொண்ட நட்பு அழியாது வளர்வதைச் சுட்டுகின்றது.

பொதுவாக இல்லங்களில் செவிலித்தாய் மகளிடம் (தலைவி) கண்டிப்பாகவே இருப்பது மரபு. அத்தகையவள் தலைவன் தலைவியை வரைந்து கொள்ளவரும் செய்தியைக் கூறுகின்றாள். இச்செய்தி கேட்ட தோழியும் தலைவியும் உள்ளம் மகிழ்கின்றனர். செவிலியைத் தோழி பாராட்டுகின்றாள். 'அவள் சொர்க்க உலகம் கிடைக்கப் பெறட்டும்' என்கிறாள் அவள்.

அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆகப்

பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை

தம்மில் தமதுண்டன்ன சினைதொறும்

தீம்பழம் தூங்கும் பலவின்

ஓங்குமலை நாடனை வரும்என் றோளே (குறு., 83)

என்பது தோழி கூற்று. இது தலைவியன் பெருங்காதலை வெளிப்படுத்தும். இச்செய்யுளில் வரும் சொற்கள் திருக்குறளில் வரும் சொற்பொருளுடன் ஒப்பு நோக்கத்தக்கன.

தம்மில் இருந்து தமது பார்த்து உண்டாற்றல்

அம்மா அரிவை முயக்கு[34] (குறள் .1107)

என்பது அது.

தலைவன் வரும் வழியைக் கண்டு அஞ்சும் தலைவியின் நட்புள்ளம்,

> பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்து
> அரும்பே முன்னும் மிகச்சிவந் தனவே
> யானே மருள்வேன் தோழி பானாள்
> இன்னுந் தமியர் கேட்பிற் பெயர்த்தும்
> என்னா குவர்கொல் பிரிந்திசி னோரே
> அருவி மாலை தத்தக்
> கருவி மாமழை சிலைதருங் குரலே (குறு., 94)

என்ற செய்யுள் வழித் தெளிவாக்கப்பட்டுள்ளது. கார்ப்பருவம் அல்லாப் பொழுதில் இடியுடன் கூடிய மழை பெய்தது. இதனைக் காணும் தலைவன் அதிகப் பருவமழை என உணர்ந்து, கார்ப் பருவத்தில் வருவதாகக் கூறிய உறுதிமொழிப்படி வந்து மழையிலும் இடியிலும் சிக்கிக் கொள்வான் என அவள் வருந்துதலின் வழித் தலைவியின் பேரன்பு உணர்த்தப்பட்டது.

தலைவியின் காதலைப் போற்றும் முறையில் அவளது கற்பு மேம்பாடும் எடுத்துரைக்கப்படுகின்றது. தலைவனைப் பேரன்புடன் கொண்டாடுபவள் தலைவி என்ற நோக்கில் தோழியின் மூலம் தலைவன் மீதுள்ள அன்புணர்வு எடுத்துக் கூறப்படுகிறது.

> இன்று யாண்டையனோ தோழி குன்றத்துப்
> பழங்குழி அகழ்ந்த கானவன் கிழங்கினொடு
> கண்ணகன் தூமணி பெறூஉம் நாடன்
> அறிவுகாழ்க் கொள்ளும் அளவைச் செறிதொடி
> எம்மில் வருடுவை நீயெனப்
> பொம்பில் ஓதி நீவி யோனே (குறு., 379)

இச்செய்யுளில் தலைவன் ‘நினது அறிவு காழ்க்கொள்ளும் பொழுது நங்காய்! நீ எம் இல்லிற்கு வரக்கடவை’ என்று கூறியதாகவும் அவ்வாறு கூறி அவளது கூந்தலைத் தடவிக் கூறியதாகவும் கூறப்பட்டுள்ளது. அவன் அவ்வாறு

கூறியதைத் தலைவி பெரிதும் விரும்பினாளென்றும் அயலார் வரைவு வேண்டிவந்த காலத்தே தலைவி கற்புக்கடம் பூண்டமை கூறப்பட்டது.

நன்னலந் தெலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரையலர் அவர்நமக்கு
அன்னையும் அல்லரோ தோழி
புலவியஃ தெவனோ அன்பிலங் கடையே (குறு., 93)

என்ற குறுந்தொகைச் செய்யுளில் அன்னையாகவும், தந்தையாகவும் இன்னுயிராகவும் தலைவிக்குத் தலைவனே உள்ளான் எனக் கூறப்பட்டுள்ளது. இது தலைவியின் கூற்றாகவே அமைந்துள்ளமை எண்ணத்தக்கது.

தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்தேடச் செல்லுங்கால் அவள் தலைவனிடம் கொண்டிருக்கும் பேரன்பைத் தோழி எடுத்துக் கூறுகின்றாள். தலைவன் இன்னா செய்யினும் இனிய செய்யினும் தாயுடன் இணைந்திருக்கும் குழவிபோலத் தலைவனுடனிருக்கவே விரும்புகிறாள் என்பதை,

நனைமுதிர் ஞாழல் சினைமருள் திரள்வீ
நெய்தல் மாமலர்ப் பெய்தல் போல
ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்பத்
தாயுடன் றலைக்கும் காலையும் வாய்விட்
டின்னா செயினும் இனிதுதலை யளிப்பினும்
நின்வரைப் பினளென் தோழி
தன்னுறு விழுமம் களைஞரோ இலளே (குறு., 397)

என்று தோழி கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது.

தலைவனை எண்ணித் தலைவி கவலையுடன் இருக்கிறாள். அவள் உடல் இளைத்துப் போகிறது. தலைவனும் வரைவு நீட்டித்து வருகிறாள். ஓர் இராஅப் போதில் அவள் வருங்கால் அவன் உணரும்படி தோழி பேசியது தலைவியிடத்து அவனுக்குள்ள நட்பைக் காட்டுகிறது. இளைத்துப்போன கைகளுக்குப்

பொருத்தமான வளையல்களைச் சிறிய அளவில் வாங்கிக் கொள்ளலாம் என்ற கருத்தைக் கூறுகிறாள் தோழி. இதனைக் கேட்ட தலைவன் மனம் இரங்கி மணம் செய்து கொள்ள முனைகிறான்.

மாரி ஆம்பலன்ன கொக்கின்
பார்வல் அஞ்சிய பருவரல் ஈர்ஞெண்டு
கண்டல் வேரளைச் செலீஇயர் அண்டர்
கயிறரி யெருத்திற் கதமும் துறைவன்
வாரா தமையினும் அமைக
சிறியவும் உளவீண்டு வினைஞர்கை வளையே (குறு., 117)

என்பது தோழி கூற்றாக வருவது. 'சிறிய உள வீண்டு வினைஞர்கை வளையே' என்பது தலைவியின் மீது தோழிக்கிருந்த அன்பினைக் காட்டுகிறது. "வாழி தோழி" (குறு., 212) எனவரும் தொடர்கள் தலைவியின் கூற்றாகவும் தோழியின் கூற்றாகவும் வருவன. அவர்கள் இருவரின் கூற்றாக வரும் இடங்களிலெல்லாம் அவர் இருவர் தமக்கிடையேயுள்ள நட்பு விளங்குமாறு அமைகின்றது. பிரிந்துபோன தலைவனைக் கடிந்து கூறாத தலைவியைத் தோழி புகழ்கிறாள்.

நெடிய திரண்ட தோள்வளை ஞெகிழ்த்த
கொடியளாகிய குன்றுகெழு நாடன்
வருவதோர் காலை யின்முகந் திரியாது
கடவுட் கற்பி னவனெதிர் பேணி
மடவை மன்ற நீயெனக் கடவுபு
துனியல் வாழிதோழி சான்றோர்
புகழும் முன்னர் நாணுப
பழியாங்கு கொள்பவோ நாணுங்காலை (குறு., 252)

பிரிவு என்ற ஒன்று இல்லையாயின் தலைவனுடைய நட்பு மிக உயர்ந்தது என்ற எண்ணத்துடன் பெண்கள் இருந்தனர்.

..........................

பிரிவின் றாயின் நன்றுமற் றில்ல

.............................................

விலங்குமலை நாடனொடு கலந்த நட்பே (குறு., 134)

என்பதும் தலைவி தலைவனுடன் கொண்டிருந்த அன்பைக் காட்டுவதாகும்.

தலைவனின் பிரிவால் தோள்கள் வாடினாலும் நலம் அழிந்தாலும் கண்கள் உறக்கமிழந்தாலும் தான் எப்போதும் அவனையே எண்ணியிருப்பதாகத் தோழியிடம் கூறுகிறாள்.

மலரேர் உண்கண் மாணலந் தொலைய
வளையேர் மென்றோள் ஞெகிழ்ந்ததன் தலையும்
மாற்றாகின்ற தோழியாற் றலையே
அறிதற் கமையா நாடனொடு
செய்து கொண்டதோர் சிறுநன் னட்பே (குறு., 377)

என்னும் பாடலில் இக்கருத்துக் கூறப்பட்டிருக்கிறது. தலைவனின் நட்புக் கடலினும் பெரிதெனக் கூறப்படுவதையும் இங்குக் காணமுடிகிறது. "கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே" (ஐங்., 184) என்பது செய்யுள். தலைவி காட்டும் அன்பு மிகப் பெரிது என்று எண்ணுகிறான் தலைவன். இங்குத் தலைவியின் அன்பின் தனிமை கூறப்பட்டது. "தகை பெரிதுடைய காதலி கண்ணே" (ஐங்., 188) என்பது ஐங்குறுநூறு. இதுவும் தலைவியின் நட்பைச் சிறப்பிக்கும்.

<u>தோழியின் அன்புணர்வு</u>

தலைவன் தலைவியரிடையே அன்புணர்வைப் புனையும் சங்க இலக்கியம் தோழி தலைவியிடம் காட்டிய நட்பையும் புனைகின்றது. இது தோழியின் இரக்க உணர்வையும் பண்பு மிகுந்த தன்மையையும் காட்டுகின்றது. இயல்பாகவே தவியிடம் அன்புணர்வு கொண்டவளாகவே தோழி படைக்கப்பட்டிருக்கிறாள்

என்று தோழியின் பண்பு கூறப்பட்டிருக்கிறது. தலைவியின் நற்குணத்தைத் தோழி பாராட்டுவதாகச் செய்யுள் அமைந்திருத்தல் சங்க இலக்கியத்தில் காணலாம்.

தலைவியிடத்துள்ள நட்பின் மிகுதியால் தோழி தலைவனுக்கும் அறிவுரை கூறுகின்றவளாகத் தோன்றுகிறாள். தலைவன் பிரியுங்கால் இத்தகைய நிகழ்வு நடப்பதுண்டு. கடிந்து கூறுவதாகவும் தோழி கூற்று அமைகிறது.

கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
திணைபிடி உண்ணும் பெருங்கல் நாட
கெட்டிடத்துவந்த உதவி கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றிமறந் தமையா யாயின் மென்சீர்க்
கலிமயிற் கலாவத் தன்ன இவள்
ஒலிமென் கூந்தல் உரியவா நினக்கே (குறு., 225)

இதில் உற்றுழி உதவிய நண்பனை உதவி பெற்றவன் அரசுக்கட்டில் பெற்ற பின்னர் மறந்துவிட்ட நயனில்லாத மன்னன் போலாது நன்றியுடையவனாய்த் தலைவன் வருதல் வேண்டும் எனக் கூறுகிறாள் தோழி. தலைவியிடத்துள்ள அன்பினால் இவ்வாறு கூறினாள்.

<u>தாயர் அன்புள்ளம்</u>

செவிலித்தாய், நற்றாய் இருவரின் அன்புள்ளத்தையும் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது. பெரும்பகுதியும் தலைவி உடன்போக்கு மேற்கொண்ட காலையும், தலைவன் மீது காதல் ஏற்பட அதனால் தலைவியிடம் ஏற்படும் நடத்தை மாற்றங்களைக் கண்டவழியும் தாயாராகிய செவிலித்தாயும் நற்றாயும் வருந்துவர். அவர்களுடைய கூற்றுகளால் இதனை அறியமுடிகிறது. தலைவியிடம் அவர்கள் கொண்டுள்ள அன்பினையும் அவை காட்டுகின்றன.

கூந்தலில் சூட்டியிருந்த மாலை சிக்குண்டாலும் கைவளையல்கள் சிறிது நெகிழ்ந்தாலும் மேகலை சிறிது விலகினாலும் தன் அழகுயாவும் கெட்டதுபோல் வருந்தும் தலைவி என்று தம் மகள் மென்மை கூறி அத்தகைய மென்மைத் தன்மையுடையவள் கடுங்கானத்தில் வெய்யிற் கொடுமையெல்லாம் தாங்கி எப்படிச் சென்றனளோ எனச் செவிலி வருந்துவதாக,

நயந்த காதலர் புணர் ந்தனளாயினும்
சிவந்தொளி மழுங்கி அமர்த்தன கொல்லோ
கோதை மயங்கினும் குறுந்தொடி நெகிழினும்
காற்பெயர் அல்குல் காசுமுறை திரியினும்
மாண்நலம் கையறக் கலுழும் என்
மாயக்குறுமகள் மலரேர் கண்ணே (குறு., 66:6–10)

என்ற பாடலில் கூறப்பட்டுள்ளது. கோதை என்பது மாலை. குறுந்தொடி – வளையல். மகள்மீது கொண்டஅன்பினால் செவிலித்தாய் இவ்வாறு புலம்பினள் என்க.

மென்மையும் சுவைத்தன்மையும் கொண்ட பால் உணவையும் வேண்டாத இம்மகள் கொடிய சுரத்திடையே தலைவனுடன் சென்றது எப்படியென வருந்தும் பிறிதொருதாய் கூற்றாக,

பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்
விளையாடு ஆயமொடு அயர்வோள் இனியே
எளிதென் உணர்ந்தனள் கொல்லோ முறிசினை
ஓமை குத்திய உயர்கோட் டொருத்தல்
வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவாஅன்
மழைமுழங் கடுங்குரல் ஓர்க்கும்
கழைதிரங் காரிடை அவனொடு செலவே (குறு., 396)

என்ற பாடல் அமைந்துள்ளது. பால் உண்ணுதலிலும் பந்தாடுதலிலும் விருப்பமின்றி நெருநல்காறும் ஆயத்தோடு இடையறாது ஆட்டயர்ந்த சிறுமியாகியவள் கொடிய பாலை நிலத்தே போதற்கு எவ்வாறு துணிந்தாள் ?[32] என்பது பொருளென்க[35] என இப்பாடல் விளக்கப்பெற்றது.

தலைவனின் தோள்களே துணையாகித் துயில்வித்தாலும் பறை ஒலி கேட்டால் நடுங்கி மெலியும் தன்மை கொண்டவளாகிய மகள் கொடிய காட்டு வழியே சென்றது குறித்துக் கலங்குகிறாள். செவிலியின் கூற்றாக, வரும் இச்செய்யுளடிகள் சில அவளது மன உளைச்சலையும் தலைவியிடத்திருந்த பேரன்பையும் காட்டுகின்றன.

மன்றுநிறை பைதல் கூறப் பலவுடன்
கரவை தந்த கடுங்கான் மறவர்
கல்லென் சீறூர் எல்லியின் அசைஇ
முதுவாய்ப் பெண்டின் செதுகாற் குரம்பை
மடமயில் அன்னான் நடைமெலி பேதை
தோள்துணை யாகத் துயிற்றத் துஞ்சாள்
வேட்டக்கள்வர் விசியுறு கடுங்கண்
சேக்கோள் அறையும் தண்ணுமை
கேட்டுநகொல் எனக் கழுலும்என் நெஞ்சே (அகம்., 63:11–19)

என்ற அகப்பாட்டுத் தொடர்கள் அச்செவிலியின் புலம்பலை வெளிப்படுத்துகின்றது. இது தலைவிக்கும் செவிலிக்கும் உள்ள உயர்ந்த அன்பினைக் காட்டுகின்றது.

<u>புலவர்களின் நட்பு</u>

புலவர்கள் அறிவும் சால்பும் உடையவர்கள். அவர்கள் நாட்டை ஆளும் மன்னர்களிடத்தும் மக்களிடத்தும் அன்பு செலுத்தி வந்தனர். தம் பாடல்களில் அவர்களுடைய நட்புள்ளத்தைக் காட்டி வந்தனர். இவர்கள் காட்டிய அன்பையும்

உலகத்தாரிடம் காட்டிய மனிதாபிமானத்தையும் பற்றிப் பல்வேறு கருத்துகள் எழுந்துள்ளன. சேரன் பெருஞ்சோற்றுதியன் சேரலாதனை,

போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சிய தகலமும்

வலியும் தெறலும் அளியும் உடையோய் (புறம்., 2:7–8)

என்று பாடுகிறார் ஒரு புலவர். போற்றார்ப் பொறுத்தல், அளி என்பன அவனுடைய பண்பு நலன்களைக் காட்டுகின்றன. மேலும் புலவர்கள் மன்னர்களிடத்துக் கொண்டிருந்த மதிப்பும் அன்பும் இதன் மூலம் வெளிப்படுகின்றன.

கோப்பெருஞ்சோழன் என்ற மன்னனைப் பிசிராந்தையார் மிகுந்த உவப்புடன் பாடுகிறார். இன்பம் எய்தியக் கால் வாரானாயினும் துன்பம் ஒன்று உற்றக்கால் அவன் தவறாது உதவுவான் என்று புகழ்கிறார். அம்மன்னைப் புலவர் போற்றிய முறை தனிச்சிறப்பை உணர்த்துவதாகக் காணப்படுகிறது.

செல்வக் காலை நிற்பினும்

அல்லற் காலை நில்லலன் மன்னே (புறம்., 215:11–12)

என்பது புறம்.

பொத்தியார் என்ற புலவர் கோப்பெருஞ்சோழனை வியந்து பாராட்டுகிறார். அவன் உயிர் துறந்த காலத்து அவனைக் காணவேண்டும் என்று செல்கிறார். அவனை எண்ணிப் பாடுகிறார்.

அன்னோளை இழந்தஇவ் உலகம்

என்னாவதுகொல் லளியது தானே (புறம்., 217:12–17)

எனப் பாடுகிறார் புலவர். இவ்வாறு பாடுவது உலகம் அழிவதும் உயிர்கள் பிழைப்பதும் இயற்கைதான் எனினும் அந்த இறப்பு இம்மன்னை நோக்கியதால் உலகம் வாடிற்று என்கிறார் புலவர். தலைவியின் துயரம் காணாது குன்றம் சார்ந்த பகுதியே அழிகிறது எனக் கூறப்பட்டிருப்பது எண்ணத்தக்கது.

தம்மோன் கொடுமை நம்வயின் ஏற்றி

நயம்பெரி துடைமையின் தாங்கல் செல்லாது

கண்ணீர் அருவியாக

அழுமே தோழி அவர் பழமுதிர் குன்றே (நற்., 88:6–7)

என்பது நற்றிணை. இயற்கைப் பொருள்களே வருந்தின எனப் பாடுவது எண்ணத்தக்கது.

<u>மன்னர்களின் மனிதநேயப் பண்புகள்</u>

மன்னர்கள் தம்மை நாடிவந்த இரவலர்களிடத்தும் புலவர்களிடத்தும் பேரன்பு காட்டினர். தம்முடைய ஆணையின்கீழ் அரசு நடக்கிறது என்ற பெருமிதத்துடன் இல்லையென வந்தார்க்கு உதவுவதும் தமது கட்டுப்பாடு என்றறிந்திருந்தனர். கற்றறிந்த புலவர் பெருமக்களைப் பெரிதும் மதித்தனர். அவர்கள் விரும்பும் வண்ணமும் தாம் பொருள் தந்தபின் பிறரிடம் சென்று இரவாத அளவிற்குப் பெருஞ்செல்வத்தை மனமுவந்து அளித்தனர். பொதுமக்களுக்கும் வரையாது கொடுத்தனர்.

உறுபசியும் ஓவாப் பிணியும் செருபகையும்

சேரா தியல்வது நாடு[36]

என்று வள்ளுவர் கூறும் கருத்துப் பண்டைத் தமிழ் மன்னர்கள் போற்றி வந்த மக்கள் போற்றும் அறமாகும். கருணையின் அடையாளமாகப் பல்வேறு மன்னர்கள் இருந்துள்ளனர். மனிதநேயம் போற்றும் பண்புகளைப் பின்பற்றி வந்துள்ளனர். மலையமான் நெடுமுடிக்காரி என்ற மன்னன் தம்மிடம் பொருள் கேட்டுவந்த இரவலர்க்குத் தேரீந்து மகிழ்ந்தான் என்பதைச் சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது.

பல்லான் நெடுநிரை வில்லின் ஒய்யும்

தேர்வண் மலையன் (நற்., 100:8–9)

என்ற தொடர் இதனை உணர்த்தும். இம்மன்னனை வேற்று நாட்டுக் கூத்தர்களும் பாடிப் பரிசில் பெற்றுள்ளனர். தம் நாட்டைச் சேர்ந்தவர் சேராதார் என்ற பாகுபாடின்றி அனைவரையும் போற்றிய பண்பு இவனிடத்து இருந்தது. இதனை,

......................................பேரிசைப்
புலம்புரி வயிரியர் நலம்புரி (நற். 100:9–10)

என்ற நற்றிணைத் தொடர் விளக்குகிறது. அதியமான் நெடுமானஞ்சி இரவலர்க்குத் தேரை ஈந்து மகிழ்ந்தான் எனக் கூறப்படுகிறது.

கடும்பகட் டியானை நெடுமான் அஞ்சி
ஈர நெஞ்சமோ டிருஞ்சேண் விளங்கத்
தேர்வீ சிருக்கை போல
மாரிஇரீ மாமன்றால் மழையே (நற்., 381:6–10)

என்பது நற்றிணை (நற்., 381:6–10). "நச்சிச் சென்றோர்க்கு ஏமமாகிய" (பெரும்.,421) எனக் கூறப்படுகின்றான் இம்மன்னன். கரிகால் பெருவளத்தான் வந்தோர்க்கு விருந்து செய்ததையும் பல்வேறு உணவு வகைகளை அளித்ததையும்,

காழில் சுட்ட கோழ்ஊன் கொழும்குறை
ஊழின் ஊழின் வாய்வெய்து நற்றி
வேறுபல் உருவின் விரகுதந்து இரீஇ
மண்ணமை முழவை பண்ணமை சீறியாழ்
ஒண்ணுதல் விறலியர் பாணி தூங்க
மகிழ்பதம் பல்நாள் கழிப்பி ஒருநாள்
அவிழ்பதம் கொள்கை என்று இரப்ப முகிழ்த்தகை
முரவ போகிய முரியா அரிசி
விரல்என நிமிர்ந்த நிரல்அமை புழுக்கல்
பரல்வறைக் கருனை காடியின் மிதப்ப (பொருந., 105–115)

எனப் பொருநராற்றுப்படை பேசுகிறது.

நன்னன் சேய் என்பான் விருந்தினர்க்கு மனமுவந்து அளித்த விருந்து அவனது மனிதப் பண்பைக் காட்டுகிறது. அதனை,

உவந்த உள்ளமோ டமர்ந்தினிது நோக்கி

இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்

எள்ளறு சிறப்பின் வெள்ளரைக் கொளீஇ

முடுவல் தந்த பைந்நிணத் தடியொடு

நெடுவே ணெல்லின் அரிசிமுட்டாது

தலைநாள் அன்ன புகலொடு வழிசிறந்து

பலநாள் நிற்பினும் பெறுகுவிர் நில்லாது செல்வேம்

என்னும் செய்யுளடிகளில் காணமுடிகிறது (மலை., 561–566) தம்மை எண்ணி வந்தோரின் மன உலைவு நீங்க உபசரித்து அவா் தமக்கு வேண்டியவற்றைச் செய்தான் என்பது,

உள்ளி வருநர் உலைவுநனி தீரத்

தள்ளா தீயும் தகைசால் வன்மைக்

கொள்ளார் ஓட்டிய நள்ளி (புறம்., 158:4–6)

என்னும் அடிகளில் இடம்பெற்றுள்ளது. "பாணர்களைப் புரக்கும் நன்னன்" (அக.,97:12) என நன்னன் கூறப்பட்டுள்ளான். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்ற மன்னன் தாய் குழந்தையைப் பாதுகாத்தல் போல மக்களைப் பாதுகாத்தான் என நச்செள்ளையார் பாடுகிறாா். "குழவி கொள்வாரின் குடிபுறம் தந்து" (பதிற்.,6,பதி.,9) என்பது அவரது கூற்று. நல்லியக் கோடன் கூத்தர்களைப் பாதுகாத்தல் செய்த பண்பு, "பல்லியக் கோடியர் புரவலன்" (சிறுபாண்., 125) எனக் கூறப்பட்டுள்ளது.

## தொகுப்புரை

- மனிதநேயக் கூறுகளுள் ஒன்று உயிரிரக்கம் என்பதாகும். இச்சொல் உயிர்நேயம் என்னும் பொருளில் ஆய்வாளரால் எடுத்தாளப்படுகிறது.
- பண்டைத் தமிழர் அகவாழ்க்கையிலும் புறவாழ்க்கையிலும் உயிர்நேயத்தோடு வாழ்ந்த ஒழுகலாறுகள் சங்க இலக்கியத்தின் வழி எடுத்துக்காட்டப் பட்டுள்ளன.
- அன்புணர்வு, இரக்கவுணர்வு, பசித்துயர் களைதல், ஈகை, அறம், முதலான கூறுகளின் அடிப்படையில் உயிர்நேயச் சிந்தனைகள் ஆராயப்பெற்றுள்ளன.

## சான்றெண் குறிப்புகள்

1. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.
2. எங்கெல்ஸ், குடும்பம், அரசு, தனிச்சொத்து, ப.
3. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்ககாலச் சமூக அமைப்பு, ப.34
4. நச்சினார்க்கினியர், தொல்.பொருள்.அகத். விளக்கம், நூ.996
5. குறள். 71
6. நச்.உ.விளக்.தொல்.பொருள். பக்.112
7. பொ.வே.சோ., விளக்.குறு., 43
8. குறள். 95
9. குறள். 65
10. புறம்., 188
11. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.132
12. தொல்.புறத்.துறை, நூ.1004
13. நச்.உ.விளக்.தொல்.புற., நூ. 57
14. புறம். 9
15. புறம்., 95
16. தொல்.பொருள்.கள., நூ.21
17. பொ.வே.சு., விளக்கம், குறு., 274
18. மேலது., 283
19. மேலது.,., 348
20. புறம்.18
21. பொ.வே.சோ., விளக்.பெரும்., 105
22. மேலது., அகம்., 237
23. அகம்., 205
24. குறள். 221
25. தமிழ் லெக்சிகன். மு.தொ. ப.374

26. நச்.விளக்.தொல்.பொருள்.புறத்., நூ.36

27. குறள்.223

28. களவியல். 2

29. பாரதி, ஆத்திசூடி.50

30. புறம்., 126

31. திருக்குறள், அதிகாரம். 6

32. குறள்., 82.

33. பொ.வே.சோ. (உ.ஆ), விளக்கம், குறு.,ப.199

34. குறள்., 1116

35. பொ.வே.சோ. (உ.ஆ), விளக்கம், குறு., 396

36. குறள்., 96

# இயல் 2

# தாவரங்கள்பால் உயிர்நேயம்

உலகத் தோற்றத்தின் அடிப்படையாக விளங்கும் பொருள்களுள் தாவரங்களுக்கு முக்கியப் பங்குண்டு. தாவரங்கள் இயற்கைப் பொருள்களில் அடங்குகின்றன. அறிவியல் அடிப்படையிலும் அவை மனித சமூகத்திற்கு மிகுந்த பயன்பாட்டை நல்குவன. காற்றையும் நீரையும் உருவாக்கும் பண்பு அவற்றிடம் உண்டு. தாவரங்கள் உணவாகவும் பயன்பட்டு மனித இனத்திற்கு மட்டுமின்றி விலங்கினங்களுக்கும் உறுதுணையாய் அமையும் திறன் கொண்டவை. தாவரங்களை வளர்க்கத் தாவரங்களே உணவாகவும் சத்துப் பொருள்களாகவும் விளங்குகின்றன. உலகில் காணப்பெறும் அறிவியல் வளர்ச்சி அடைந்த சமூகங்கள் பலவும் தாவரங்கள் மீது தம் ஆய்வைச் செலுத்தி, அவற்றைப் பயன்படுத்தும் வழிமுறைகளைக் கண்டறிதலில் முனைகின்றன;.[1] நற்பயன்களையும் பெற்றுள்ளன, மனித இனத்தில் இன்றும் நோய்கள் பலவற்றிற்கும் மருந்துகள் தாவரங்களின் வழிக் கண்டறிதல் என்பது புதுமையன்று. மரபு வழியான மருத்துவச் செயல்முறைகள் தாவரங்களின் பயன்பாட்டால் கிடைத்துள்ளன. இது போலவே தாவரங்கள் விலங்கினங்களுக்கும் மருந்தாகவும் பயன்படுவதை அறிவியல் உலகம் உறுதி செய்துள்ளது.

தாவரங்களோடு இணைந்த வாழ்க்கையை அனைத்துச் சமூகங்களும் தொடக்கக் காலத்தில் பெற்றிருந்தன. மனித இனத்தின் தொடக்கக் கால வாழ்க்கை முறை, ஆறுகள், மலை, காடுகள் போன்றவற்றிலிருந்தே தொடங்கியது. நவீன வளர்ச்சி என்பது காடுகளைப் புறந்தள்ளி வாழும் வாழ்க்கையாக மாறிவிட்டதாகக் கூறுவர்.[2] மரங்களும் மலர்களும் செடி கொடிகளும் பழங்கால மனிதர்க்கு உறைவிடப் பொருள்களாகவும் உறுதுணைப் பொருள்களாகவும்

விளங்கின. உலக இலக்கியங்களிலும் வரலாற்று ஆய்வுகளிலும் தாவரங்களுக்கும் மனிதர்களுக்கும் இருந்து வரும் உறவு நன்கு பதிவு செய்யப் பெற்றிருக்கின்றன. இத்தகைய பதிவு மூலங்களில் பழந்தமிழ் இலக்கியங்கள் முதலிடம் வகிக்கின்றன. சங்க இலக்கியங்கள் எனக் கூறப்பெறும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்பன தாவரங்களின் இயல்பையும் பயன்பாட்டையும் அவை மனிதர்கள் வாழ்வில் இடம் பெற்றுள்ள அரிய கூறுகளையும் மிகுதியாகவே குறிப்பிட்டுள்ளன. தாவரங்கள் இடம்பெறாத சங்க இலக்கியங்கள் அரிதாகவே உள்ளன. அவற்றில் புறப்பாடல்களிலும் அகப்பாடல்கள் செம்பாகம் வகிக்கின்றன.

சங்க இலக்கியங்களில் தாவரங்கள் கூறப்பட்டுள்ள முறைகள் சில அடிப்படைகளைக் கொண்டுள்ளன. அவற்றுள்ளும் குறிப்பிடத்தக்கது மனிதர்கள் தாவரங்களைப் போற்றிய முறையும் பயன்படுத்திய செயற்பாடும் ஆகும். இந்த அடிப்படையில் பழந்தமிழர் தாவரங்களிடத்துக் கொண்டிருந்த உறவு 'உயிர்நேயம்' எனவே கொள்ளத்தகும். இதனை முதன்மையாகக் கொண்டு தாவரங்களுக்கும் மனிதர்களுக்கும் இருந்த நேயத்தை சங்க இலக்கியங்களைக் கொண்டு இவ்வியல் ஆராய்கிறது.

வளர்ந்து வந்துள்ள நாகரிகச் சமூகத்திலும் பண்டைத் தமிழ்ச் சமூகத்திலும் தாவரங்கள் பெரும் பங்காற்றியுள்ளன. மரங்களையும் மலர்களையும் காய்கனிகளையும் பயன்படுத்தாத வாழ்க்கையே இல்லை எனச் சொல்லலாம்.

தமிழ்ச் சமுதாயம் பண்டைய நாளிலிருந்து இன்றுவரை தாவரங்களுடன் பின்னிப் பிணைந்துள்ளது என்பதில் எந்தவித ஐயமும் இல்லை. சமுதாயத்தின் பல பழக்கவழக்கங்கள், சடங்குகள் போன்றவற்றில் தாவரங்களின் பங்கு மிக முக்கியமானதாகும். சமுதாய மாற்றங்களிலும் தாவரங்கள் பெரும்பங்காற்றியுள்ளன. அரசர் முதல் சாதாரண மக்கள் வரை தாவரங்களையும்

தாவரப் பொருட்களையும் தம்முடைய அன்றாட சமுதாய வாழ்க்கையில் துய்த்தனர்[3] என்று பேராசிரியர் கு.வி.கிரு ˙ணமூர்த்தி குறிப்பிட்டுள்ளார்.

தாவரங்களின் துயரங்களைத் தம்துயர் போல எண்ணி அவற்றைப் பாதுகாத்தல் முதலான பல்வேறு நடவடிக்கைகளைப் பழந்தமிழர் மேற்கொண்டிருந்தனர்.

ஆய்வுப் பயன்பாடு கருதி இவ்வியல் பின்வருமாறு பிரித்துக் கொள்ளப்படுகிறது.

1. தாவரங்களிடம் இரக்கம் கொள்ளல்
2. பாதுகாத்தல்
3. பயன்கூறல்
4. சிறப்பைக் கூறல்

## 2.1. இரக்கம் கொள்ளல்

இரக்கம் என்பது ஒன்றன் இன்னல் கண்டவழி அதற்காக மனம் வருந்தும் பண்பாகும். இது மனிதகுலத்தில் காணப்படும் உயரிய பண்பாகும்.[4] மனிதர்க்கு மனிதர் இரக்கம் காட்டுவது போலவே மனிதர்கள் பிற உயிர்களின் துன்பங்களுக்கும் மனம் வருந்தும் நிகழ்வுகள் உருவாகின்றன.

> எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்
> தம்முயிர்போல் எண்ணி
> ஒத்துரிமம் உடையவராய் உவக்கின்றார்
> யாவரவர் உள்ளந்தான்
> சுத்தசித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
> இடமெனத் தேர்ந்தென்[5]

1. என்று இராமலிங்க அடிகள் பாடுவதன் அடிப்படை எல்லா உயிர்களுக்கும் இன்னல் ஏற்படுவதை மனித குலம் தடுக்க முயல வேண்டும் என்பதாகும். இரக்கம் என்பது ஆங்கிலத்தில் PITY என்று கூறப்படுகிறது. இவர்க்கு

முந்திய காலத்தில் வாழ்ந்த வள்ளுவர் எவ்வுயிரையும் தாழ்த்தல் கூடாதென்பதன் கருத்தினை,

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்[6]

என்கிறார்.

## 2.1.1. மலர்களிடத்து இரக்கம்

சங்க இலக்கியத்தில் பல்வேறு மலர்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. அவை பல்வேறு திணைகளிலும் இடம்பெற்றுள்ளன. சில மலர்கள் குறிப்பிட்ட திணைகளில் மட்டும் வருகின்றன. திணைகள் மாறி மலர்கள் இடம்பெறும் போது அவற்றைத் திணைமயக்கம் என்று கூறுவர்.[7] புலவர்களின் கற்பனைப் போக்காலும் கருப்பொருளாக அன்றிப் பிற ஏதுக்களால் சொல்லப்பட வேண்டியிருப்பதாலும் திணைமயக்கம் உருவாகின்றது. கருப்பொருள்கள் திணை மாறி இடம்பெறுகின்றன. தாமரை, அல்லி, கொன்றை, காந்தள் போன்ற மலர்கள் முல்லை முதலான திணைப்பெயர்களையே பெற்று அவ்வத் திணைக்குரிய மலர்களும் சங்கப் பாடல்களில் சுட்டிக் கூறப்படுகின்றன. குறிப்பிட்ட பெயர்களன்றிப் பொதுப் பெயரான மலர் என்றே அழைக்கப்படுவனவும் பூவெனக் குறிக்கப்பெறுவனவும் உள்ளன. இம்மலர்கள் வெய்யில் மழை போன்றவற்றால் சிதைவுறுவதையும் விலங்குகளால் அழிக்கப்பெறுவதையும் நீரின்றி வாடிக் கிடப்பதையும் சங்கப்புலவர்கள் புனைவதன்வழித் தம் இரக்க உணர்வைச் சுட்டியுள்ளனர். மக்கள் காலையிலும் மாலையிலும் மலர்சூடி மகிழ்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இச்செய்தி,

நாளணி நீக்கி நகை மாலைப்பூ வேய்ந்து[8]

எனக் கூறப்பட்டுள்ளது.

தலைவன் தலைவியர் உள்ளம் வருந்தியிருக்கும் காலையும் குறிப்பாகத் தலைவியின் வருத்தத்திற்கும் வாடிய மலர்கள் உவமையாகக் கூறப்பட்டுள்ளன.

முகம் வாடுதல், உள்ளம் கவலுதல் போன்ற உணர்வுகள் நிகழுங்கால் வாடிய மலர்கள் குறித்துக் காட்டப்பெறுகின்றன. இவ்வாறு வருவனவெல்லாம் மக்கள் மலர்களின் மீது கொண்டுள்ள பற்றுதலையும் அழகியலுணர்வையும் அவை இடையறுங்கால் ஏற்படும் போது உருவாகும் வருத்தத்தையும் காட்டுவன எனலாம்.

தலைவனின் பிரிவு தலைவியை ஆற்றொணாத் துயரத்திற்குள்ளாக்குவதாகச் சங்க இலக்கியங்களில் சுட்டப்படுகின்றது. ஆற்றியிருத்தலும் ஆற்றுப்படுத்தலும் நிகழ்வது பொது மரபாகும்.[9] இவ்வாறு தலைவி ஒரு சூழலில் வருந்திக்கிடக்கிறாள். அவளைத் தேற்றுவாரில்லாது துயருறுகிறாள். அவள் இருந்த நிலைக்குப் பூவாது கிடக்கும் பூமாலை காட்டாகக் கூறப்பட்டுள்ளது. பூமாலை சிறப்புடையதெனினும் அது பூவாது பூக்கும் தன்மையிழந்த பூவாலான தன்மை கொண்டதை எண்ணிய புலவர்,

பெய்யாது வைகிய கோதை போல
மெய்சா யினையவர் செய்குறிப் பிழைப்ப
உள்ளி நொதுமலர் நேர்புரை தெள்ளிதின்
வாரார் என்னும் புலவி உட்கொளல்
ஒழிக மாஎநின் நெஞ்சந் தானே (நற்., 11:1–5)

எனப்பாடுகின்றார்.

நின்ற வேனில் உலகத்த காந்தள் (நற்., 29:1)

என்னும் தொடரில் குறிக்கப்பெறும் காந்தள் மலர் இலக்கியப் பெருமை கொண்டது. பழங்காலம் முதல் தமிழிலக்கியத்தில் பயின்றுவரும் தன்மை கொண்டது. பொதுவாக மலர்களைத் தமிழர் பண்டைக் காலமுதல் பல்வேறு பயன்பாட்டிற்குரியனவாக அமைத்துக் கொண்டனர். விழாக்காலங்களிலும் மணப்பொருள் தயாரிக்கவும் மங்கலக்காரியங்களிலும் மலர்களைத் தமிழர் பயன்படுத்தினர் என்று பேராசிரியர் கு.வி.கிரு ்ணமூர்த்தி தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[10] பொதுவாகப் பெண்களின் கைவிரல்களுக்குக் காந்தள் மலர் உவமையாகக் கூறப்பெறும்.

தலைவன் பிரிவால் தலைவி வருந்துகிறாள். அதனால் அவள் மேனி நிறம் மாறுகிறது. பசலை தோன்றுகிறது. பசலை தலைவியின் பிரிவுத்துயரைக் காட்டும் ஒன்றாகும். தலைவியின் உடல்நிறம் மங்கியதை, மாறியதை நிறமிழந்து நிற்கும் கொன்றை மலரால் புலவர் சுட்டுகிறார். இதனைத் தலைவியின் கூற்றில் வைத்தே குறிப்பிடுகின்றார். பசுமையாக இருந்த பூ நிறமாறியதைக் கண்ட புலவர் பூமீது கொண்ட இரக்கத்தாலும் கொன்றைப் பூவின் நிறம் குறைந்த நிலையைத் தலைவியின் பசலைக்கு உவமையாக்குகிறார். தம்மைப் போல் கொன்றை மலரும் பசலை பூத்தது எனத் தலைவி கூறுவதை,

> சென்ற நாட்ட கொன்றையம் பசுவீ
> நம்போல் பசக்குங்காலை (குறு., 183:1–2)

எனப் பாடுகின்றார். தலைவியின் பசலை நிறமும் கொன்றையின் நிறமும் ஒன்றாயிருத்தலை இது உணர்த்துகிறது.

பிரிவால் வாழும் தலைவி யாரும் ஆறுதல் கூறாத நிலையில் தனித்தும் தவித்தும் இருக்கிறாள். பிரிந்த தலைவன் வந்து சேறின் அவள் துயரங்கள் கரையும். அவள் வருந்தியிருந்து. நீரற்ற குளத்தில் உள்ள தாமரையைப் போலக் கிடந்தாள் எனக் கூறப்பட்டுள்ளது. நீர் வடிந்து போன குளமும் அதில் தாமரையும் ஒன்றிற்கொன்று உதவாது இருப்பன. தாமரைக் குளம் ஓர் இரவில் நீர் முழுவதும் வடிந்துவிட்டதால் அதில் பூக்கள் பகலில் வாடுதல் போல அவள் வாடினாள் என்பது கருத்து. நீர் பெறாத தாமரை மலர் இங்கு இரக்கக் குறிப்பைப் பெறுகிறது.

> ஓரிரா வைகலுள் தாமரைப் பொய்கையுள்
> நீர்நீத்த மலபோல நீநீப்பின் வாழ்வாளோ (கலி., 5:14–15)

என்பது கலித்தொகை.

<u>மக்கள் அழித்தல்</u>

காடுகளிலும் மலைகளிலும் கானலிலும் ஊர்ப்புறத்தும் மலர்கள் சூழ்ந்த வண்ணம் இருப்பதாகச் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன. மக்கள்

வாழ்க்கையுடன் மலர்கள் இணைந்திருப்பதை ஆய்வாளர்கள் எடுத்துக் கூறியுள்ளனர்.[11] இவ்வாறு வளர்ந்துள்ள மலர்களை மக்கள் தம் தேவை கருதியும் வேறுபல ஏதுக்களாலும் அழிக்கின்றனர். சிதைக்க முயல்கின்றனர். இதனை உணர்ந்த அக்காலப் புலவர்கள் மலர்களின் சிதைவுக்கு இரங்கிப் பாடியுள்ளனர். அவ்வாறு பாடுவது தாவரங்கள் மீது அவர்கள் கொண்டிருந்த நல்லுணர்ச்சியையும் இரக்கத்தையும் காட்டுகின்றன. நீண்ட கோல் கொண்டு மரக்கிளையைத் தாக்கி அடித்தும் பூக்களைக் கொய்கின்றனர். இதனை,

மெல்வீழ் அஞ்சினை புலம்ப வல்லோன்
கோடறை கொம்பின் வீயுகத் தீண்டி
மராஅம் அலைத்த மணவாய்த் தென்றல் (அக., 21:10–12)

என்ற அகநானூறு கூறுகின்றது. கிளைகள் வருந்த மலர்க் கொய்தல் என்பது இரங்கத் தக்கதாம்.

## 2.1.2. வெய்யிலும் மலர்களும்

வெய்யிலின் கொடுமை என்பது சுரங்களிலும் பாலைநிலப் பகுதியிலும் அதிகமாக இருப்பது. இதன் வெம்மைக்குத் தாள முடியாது வாடிய மலர்களைப் புலவர்கள் பல பாடல்களில் குறித்துள்ளனர். மலர்களைப் பெண்களின் உறுப்புகளுக்குக் குறிப்பாக முகம், கண், செவி போன்றவற்றிற்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிடுவர். 'மலரன்ன கண்ணாள்' எனத் திருக்குறள் குறிப்பிடுகின்றது.[12] வேனிற்காலத்து வெம்மை தாளாது காந்தள் மலர் காய்ந்து உலர்ந்ததை,

நின்ற வேனில் உலத்த காந்தள் (நற்., 29:1)

எனப் பாடுகின்றார் புலவர். உலத்த என்பது வற்றிய என்னும் பொருளாகின்றது.

காயா மலர் வெண்ணிறத் தோற்றம் கொண்டது. காந்தள் உலர்ந்தது என்று வருந்தும் புலவர் காயா தன் நிறம் இழந்தது என்கிறார். அதற்கு வெய்யிலின்

வெம்மையே காரணமாய் அமைந்துள்ளது. முதுவேனிற் காலத்தில் அம்மலர் பொலிவிழந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

புல்லென் காயாப் பூக்கெழு பெருங்கினை
மென்மயில் எருந்தின் தோன்றும்
கான வைப்பின் புன்புலத் தானே (குறு., 183:5–7)

என்பது குறுந்தொகை.

மருதநிலத்திற்குரிய நெய்தற்பூ மென்மையானது. இஃது உழவர்களால் மிகவும் போற்றத்தக்கது. இப்பூ சிறிய அளவு வெப்பத்திலேயே வாடிவிடுகிறது என்று கூறப்படுகிறது. உழவர்கள் பயிர் நிறைந்த வயல்களில் களையெடுக்கின்றனர். அவர்கள் பயிரின் இடையில் முளைத்திருக்கும் நெய்தல் மலரைப் பிடுங்கி வரப்புப் பகுதியில் போட்டுச் செல்கின்றனர். அப்போது கதிரவனின் வெப்பத்தால் அவை வாடிக்கிடந்தனவாம். நெய்தல் மலர்களை உழவர் களையெனப் பிடுங்கி எறிவர். இருப்பினும் அந்நிலத்தை விட்டுப் பிரியாத மலர் தாம் வாடினாலும் மீண்டும் வயலில் களையாக முளைக்கிறது என்பதாம்.

கைவினை மாக்கள்தம் செய்வினை முடிமார்
சுரும்புண மலர்ந்த வாசம் கீழ்ப்பட்ட
நீடின வரம்பின் வாடிய விடினும்
கொடியோர் நிலம்பெயர்ந் துறைவோம் எண்ணாது
பெயர்த்தும் கடிந்த செறுவில் பூக்கும்
நின்னூர் நெய்தல் அனையேம் பெரும
நீஎனக் கின்னா தனபல செய்யினும்
நின்னின் றமைதல் வல்லா மாறே (குறு., 309)

எனக் குறுந்தொகை கூறுகிறது.

தலைவன் பிரிவால் தோள் வாடித் தலைவி வருந்துகிறாள். அவள் வாடிய தோளுக்கு உவமையாக நெருஞ்சி மலர் கூறப்படுகிறது. அழகியதும் சிறியதுமான

நெருஞ்சிமலர் சூரியனின் ஒளிக்கதிர்களால் சிதைவுறுகிறது. அதாவது சூரியன் செல்லும் திசை நோக்கித் திரும்பும் ஒளிக் கதிர்களால் வாடும் நெருஞ்சி மலர் இதழ்களைப் போல் வாடிற்றுத் தலைவியின் தோளெனச் சுட்டுகையில் நெருஞ்சி மலர் உறும் இடர்ப்பாடும் உணர்த்தப்பட்டது. இதனை,

எழுதரு மதியம் கடற்கண் டாஅங்கு
ஒழுகுவெள் ளருவி ஓங்குமலை நாடன்
ஞாயிறு அனையன் தோழி
நெருஞ்சி அனைய என்பெரும்பணைத் தோளே (குறு., 315)

எனக் குறுந்தொகை சுட்டுகிறது. பொதுவாக நெருஞ்சி முள்ளின் கூர்மை இலக்கியங்களில் சொல்லப்பட்டுள்ளது. சங்க இலக்கியம் முள்ளைச் சுட்டாது அதன் இதழைச் சுட்டியிருத்தல் குறிக்கத்தக்கது.

அனிச்சப்பூவும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்[13] (குறள்:1115)

என்கிறது குறள்.

### 2.1.3. காற்றும் மலர்களும்

கடுமையாக வீசும் காற்றாலும் மலர்கள் சிதைவதைச் சங்கப் புலவர்கள் உற்று நோக்கியிருக்கின்றனர். காற்று, வளி போன்ற சொற்களால் விசையுடைக்காற்று சுட்டப் பெறுகின்றது.[14] பிரிவுத் துயரில் வருந்தித் தன்னை இழந்து கிடக்கும் தலைவியின் நிலைக்குக் காற்றால் சிதைக்கப்பட்ட செங்காந்தள் மலரைப் புலவர் உவமையாக்கித் தம் இரக்கக் குறிப்பைக் காட்டியுள்ளார்.

பல்வரிப்................
பாம்பு அவிந்தது போலக் கூம்பிக்
கொண்டலில் தொலைந்த ஒண்செங் காந்தள்
கல்மிசைக் கவியும் (குறு., 185:4–8)

என்பது இதனை உணர்த்துகின்றது.

கார்காலத்தில் வீசும் காற்றினால் செங்காந்தள் பூ காம்பறுந்து வீழ்ந்தன என்று கலித்தொகையில் பேசப்படுகின்றது. பயன்பட வேண்டிய மலர்கள் முழுதும் பூச்செடியிலேயே இல்லாது வீழ்ந்தன என்பது பூப்பற்றிய இரக்கக் குறிப்பாகும். பிரிவுண்த்தப்பட்ட தலைவியின் உடல் மெலிந்தது. உடல் மெலிந்ததால் கைவளை கழன்று வீழ்ந்தன. அதற்கு உவமை கூறுங்கால் கோட்டுப்பூ காம்பறுந்து வீழ்வதுபோல இருந்ததென்கிறார்.

இவட்கே அலங்கிதழ்க் கோடல் வீயுடு பவைபோ
லிலங்கே ரெல்வளை யிறையூ ரும்மே (கலி., 7:15–16)

என இது சொல்லப்படுகிறது.

சுரம்புல் லென்ற ஆற்ற அலங்குகிளை
நாரின் முருங்கை நவிரல் வான்பூச்
சூரலங் கடுவெளி யெடுப்ப (கலி., 1:15–17)

என்பதில் முருங்கை மலர் சுட்டப்படுகின்றது. இதில் கூறப்படும் சூரலங்கடுவெளி என்பது சூறைக் காற்றைக் குறிக்கிறது. சூறைக் காற்று முருங்கையின் மெல்லிய பூக்களைச் சிதைத்துக் கொட்டச் செய்ததைக் குறிப்பிடுகின்றார் புலவர். இங்கும் காற்றால் சிதைக்கப்படும் மலர் கூறப்பட்டுள்ளமை எண்ணத்தக்கது.

காற்று வேகமாகத் தாக்கியதால் வேங்கை மரக் கிளைகள் ஒடிந்து தொங்கவும் அதிலிருந்து பூக்கள் உயிர்த் தன்மையிழந்து வாடித் தொங்கியதைக் குறுந்தொகை குறிப்பிடும்.

கோடை ஒற்றிய கருங்கால் வேங்கை
வாடுபூஞ் சினையின் கிடக்கும் (குறு., 343:5–7)

என்பது அது.

## 2.1.4. மழையால் சிதைவுறும் மலர்கள்

பருவக் காலங்களில் தொடர்மழையும் அளவுக்கு அதிகமான மழையும் இருக்கும். இதனால் வெள்ளப் பெருக்கும் ஏற்படும். மழை நீரின் வேகம் விரைவு பற்றிச் சங்க இலக்கியங்களும் பிற்கால இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன.

மழைவளம் தரூஉம் மாவண் தித்தன்[15]

மழை உருவின தோல்பரப்பி[16]

கருவி மாமழை வீழ்ந்தென[17]

மழைதலை வைத்தவர் மணிநெடுங் குன்றே[18]

என்பன மழைநீர் பற்றிய சங்கப் பாடல் தொடர்களாகும். இவ்வாறு பெய்யும் மழைநீரால் மலர்கள் சிதைந்தன என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது.

குண்டுநீர்ப் பைஞ்சுனைப் பூத்த குவளை

வண்டுபெயில் பல்லிதழ் கலைஇத்

தண்துளிக் கேற்ற மலர்போன் றரிவே (குறு., 291:9)

என்பது அது.

## 2.1.5. விலங்குகளால் துன்புறும் மலர்கள்

எருமை, யானை என்ற இரு விலங்குகளால் மலர்கள் அழிக்கப்படுவதையும் சிதைக்கப்படுவதையும் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது. இவ்விலங்குகள் ஊரைச் சுற்றியுள்ள பகுதியில் உள்ள நீர்நிலையில் செழித்து வளர்ந்திருந்த மலர்களையும் சிறிய காட்டுப்பகுதியிலிருந்த மலர்களையும் அழிக்கின்றன. முல்லை, தாமரை என்னும் மலர்கள் இவ்விலங்குகளால் அழிக்கப்படுகின்றன.

முல்லை மலர்கள் சிறிய காட்டுப் பகுதியில் வளர்ந்து மணம் வீசிக் கொண்டிருக்கின்றன. அங்குச் சென்ற யானை தன் கொம்புகளால் முல்லைப் பூக்காட்டைச் சிதைத்து எறிந்தன.

தாமே செல்ப ஆயின் கானத்துப்
புலந்தேர் யானைக் கோட்டை ஒழிந்த
சிறுவீ முல்லைக் கொம்பின் தாஅய்
இதமறிந் தூறும் கண்பனி மதரெழில்
பூண்க வனமுலை எனைத்தெறும்
காணார் கொல்லோ மாணிழை நமரோ (குறு., 348)

என்பது இதனை விளக்கும் பகுதியாகும். பூவின் சிறப்பும் அழகும் கூறப்பட்டு அவை கெட யானை அழிக்க முற்படுகின்றதெனக் கூறலில் இது வருத்தமுண்டாகிற செயல் எனலாம்.

சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலில் நோன்றனை பரிந்து
கூர்முள்வேலி கோட்டின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடன் இரீஇய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டுது பனிமலர் ஆரும் ஊரார் (அகம்., 46:1–5)

என்ற பாடல் தலைவியின் கூற்றாக இடம்பெற்றுள்ளது. எருமையானது தாமரை மலரையும் வள்ளைக் கொடியையும் சிதைத்துக் குளத்தைச் சேறாக்கிய செயல் இதில் பின்னப்பட்டிருக்கிறது. விலங்குகளால் அழகிய மலர்கள் சிதைக்கப்படுவதற்கு இஃதோர் எடுத்துக்காட்டு. இதில் எருமையின் கொடுந்தன்மை தலைவனுக்கு உவமையாய் வரினும் மலர்போன்ற தலைவி உள்ளம் சிதைந்தாள் என்று கூறப்படுவதற்குப் பொருத்தமாகப் புனையப்பட்டதாகும். மலர்கள் இரங்கத் தக்கனவாகவுள்ளன. அந்தூம்பு வள்ளை, வண்டுது பனிமலர் என்பன மலரின் மென்மைத் தன்மையையும் செங்கட்காரான் என்பது அவ்விலங்கின் கொடுந்தன்மையையும் காட்டின. சேற்றுநிலை முனைஇய செங்கட்காரன்[19] செங்கண் எருமை[20] என்னுந் தொடர்களைப் பிற இலக்கியங்களிலும் காணமுடிகிறது. மன்னர்கள் தரும் பொற்றாமரை வண்டிமிராத் தாமரை[21] எனக் கூறப்பட்டுள்ளது.

இரும்பு போன்ற கொம்புகளையுடைய எருமை ஒன்று குளத்தில் இறங்கி ஆண்டுள்ள ஆம்பல் மலை இதழ்கள் இழியுமாறு சிதைத்தது என அகப்பாட்டுரைக்கின்றது.

மணிகண் டன்ன துணியகம் தூங்க
இரும்பு இயன் றன்ன கருங்கோட் டெருமை
ஆம்பல் மெல்லடை இழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் மாந்தி (அகம்., 56:2–5)

என்பதனுள் ஆம்பல் மலரும், குவளை மலரும் அழிக்கப்பட்டமை குறிப்பிடப்பட்டுள்ளது. ஆம்பலைச் சிதைத்துக் குவளையைத் தின்றது என்பன எருமையின் செயல்கள். ஆம்பல்–ஈண்டு மலரைக் குறித்தது.

### 2.1.6. நண்டு சிதைத்த மலர்

நண்டுகள் வயற்புறத்திலும் கடற்கரைப் பகுதியிலும் காணப்படுவன. இலக்கியத்தில் இவை அலவன் என்றும் கள்வன் என்றும் சுட்டப்படுகின்றன.[22] நண்டு மருதக் கருப்பொருளாகும். ஐங்குறுநூறு கள்வன் பத்து என்னும் தலைப்பில் பத்துப்பாடல்களைக் கொண்டுள்ளது இதன் சிறப்பை உணர்த்தும். கள்வன் என்னும் சொல் பாடல்தோறும் பயின்றுவரும் பத்துச் செய்யுளின் தொகுதி என்றவாறு[23] என பொ.வே.சோமசுந்தரனார் என்ற உரையாசிரியர் இதற்கு விளக்கம் தந்துள்ளார்.

முள்ளி நீடிய முதுநீ ரடைகரைப்
புள்ளிக் கள்வ னாம்ப லறுக்கும்
தண்டுறை யூரன் களிப்பவும்
உண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய் (ஐங்., 21)

என்னும் செய்யுளில் வரும் புள்ளிக் கள்வன் ஆம்பல் அறுக்கும் என்ற தொடர் ஆம்பல் மலரை நண்டு அழிந்தது என்பதைக் குறிக்கும். நீரிலுள்ள ஆம்பல் தண்டினை அஃது அறுத்தது எனவே ஆம்பல் மலரும் சிதைந்தது எனக்

கொள்ளல் தகும். ஆம்பல்—அல்லி அதில் காணப்பெறும் முள்ளிச் செடி நீர்நிலையின் தன்மையைக் குறித்தது.

### 2.1.7. வண்டுகளால் சிதைந்த மலர்

வண்டுகள் தேனருந்த மலர்களை நோக்கிச் செல்வது இயல்பு. இலக்கிய மரபில் பொதுவாகக் காணப்படுவது இது. மலர்கள் மலர்ந்து மணம் வீச அவற்றிலிருந்து வழியும் தேனை உறிஞ்சிட அவை செல்லும். இவ்வாறு மலர்கள் மலர்வதற்கு முன்னர் அவை கூம்பிய நிலையிலிருக்கும் போதே வண்டுகள் சென்று மலர்களுக்கு இன்னல் விளைவிப்பதாகச் சங்கப் புலவர் பாடுகின்றார்.

காந்தளம் கொழுமுனை காவல் செல்லாது
வண்டுவாய் திறக்கும் பொழுதில் பின்னும்
தாமறி செமைச் சான்றோர்க் கண்ட
கடனறி மாக்கள் போல இடன்விட்டு
இதழ்களை அவிழ்ந்த ஏகல் வெற்பன்
நன்னர் நெஞ்சத்தன் தோழி நின்னிலை
யான்தனக் குரைத்தனென் ஆகத்
தான்நா ணின்னிஃ தாகா வாறே (குறு., 265)

என்னும் செய்யுளில் மலரும் வரை காத்திராமல் வண்டுகள் காந்தள் மலர்களைக் கிண்டித் திறந்தன எனக் கூறப்பட்டிருப்பது மலரழிதலைக் குறித்தது. சான்றோர்களைக் கண்டவழி முன்னர் அறியாதிருந்தும் அவர்களை வரவேற்கும் நன்மக்களைப் போலக் காந்தள் மலர் வண்டுகட்கு இடமளித்தன என்பது இலக்கியச் சுவையாகும். வண்டுவாய் திறத்தல் என்பது வண்டுகள் மலரின் வாயினைத் திறந்தன என்பதாம்.

### 2.1.8. மீன்களால் சிதைந்த மலர்

நீர்வாழ் சாதியுள் மீன்கள் குறிக்கத் தக்கவை. கயல் என்பது மீனைக் குறிக்கும் சொல். சங்கச் செய்யுட்களில் பெண்களின் கண்களைச் சுட்டுங்கால் இது உவமையாக இடம்பெறுகின்றது.

தோற்றம் அன்றே தோழி கண்ணெனத்

தூற்றும் துவலைத் துயர்கூர் காலைக்

கயமலர் உண்கண் கனங்குழை மகளிர்

கைபுணை ஆக நெய்பெய்து மாட்டிய

சுடர்துயர் எடுப்பும் புன்கண் மாலை

அரும்பெறற் காதலர் வந்தென விருந்து அயர்பு[24] (குறு.398)

என்னும் பாடல்வழி இதனை அறியலாம். மீன்களில் பல வகையுண்டு. வாளை, வரால் போன்ற மீன்களும் வேறுசில உயிரினங்களும் சங்க இலக்கியத்தில் இடம்பெறுகின்றன. பழனவாளை[25], பூக்கதூஉம் இனவாளை[26], நுண்ணாரால் பருவரால்[27], வாளைமேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்[28], பருவராஅல்[29] என்னும் தொடர்கள் இதனைக் குறிப்பனவாகும். மீன்கள் கடலிடத்தும் ஆறு, குளம் போன்றவற்றிலும் காணப்படுகின்றன. வயல்களில் மீன்கள் மிகுந்து காணப்பட்டதாகச் சங்க இலக்கியப் பாடல் தெரிவிக்கிறது.

கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்

பழன வாளை கதூஉ மூரன்[30] (குறு.8)

என்ற பாடல் வாளை மீனின் வினையை அடிப்படையாகக் கொண்டு அமைந்ததாகும். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் இருபிரிவுச் செய்யுட்களிலும் மீன்கள் இடம்பெறுகின்றன. கருப்பொருள் வகையில் அடங்கும் இவை உணவுப் பொருள்களாகச் சுட்டப்பெற்றுள்ளன. நெய்தல் நிலத்திலும் மருத நிலத்திலும் மீன்கள் சிறப்பாகக் காணப்படுவதாகச் சங்க இலக்கியப் பதிவுகள் காணப்படுகின்றன.

தலைவனுடைய ஊர் பூக்கள் நிறைந்த குளங்களைக் கொண்ட வளமுடையது. அக்குளத்தில் ஒருவன் தூண்டில் இட்டு மீனுக்காகக் காத்துக் கொண்டிருந்தான். தூண்டிலில் வராஅல் மீன் வகையின் ஆண்மீன் சிக்கிக் கொண்டது. தூண்டில் இரையை விழுங்கியதும் மீன் துள்ளத் தொடங்கிற்று. அக்குளத்தின்கண் ஆம்பல் (அல்லி), குவளை ஆகிய மலர்களில் மோதி

அவற்றின் இதழ்கள் சிதையுமாறு செய்தது. பின்னரும் அக்குளத்திலிருந்து வள்ளைக் கொடியிலும் சிக்கி அதனையும் அறுத்தது.

> பருவாய் வராஅல் பல்வரி இரும்போத்துக்
> கொடுவப் இரும்பின் கோளிரை தூற்றி
> ஆம்பல் மல்லடை கிழியக் குவளைக்
> கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்து எழுந்து
> அரில்படு வள்ளை ஆய்தொடி மயக்கி (அகம்., 36:1–5)

எனவரும் அகச் செய்யுளில் வராஅல் மீன் கொடிய வாயை உடையதெனவும் அது மெல்லிய ஆம்பல் மலரையும் குவளை மலரையும் இழித்தது என உரைக்கப்பட்டுள்ளது. மலர்கள் பிற உயிரினங்களால் சிதைக்கப்படுதலின் மனிதர்களுக்கு இச்செயல் மன இரக்கத்தை உண்டாக்குவனவாக உள்ளன.

### 2.1.9. மரங்களிடத்துக் காட்டும் இரக்கம்

சங்க இலக்கியத் தாவரங்களில் உணவுக்குப் பயன்படுவதைப் பெரும்பான்மையாகக் கொண்டிருப்பவை மரங்களே ஆகும். மலைகள், காடு, சுரம் எனச் சொல்லப்பட்ட அனைத்திலும் மரங்களே நிறைந்திருக்கின்றன. காய், கனிகளை இவற்றிலிருந்து பறித்து மக்கள் உணவாக உண்டனர். உணவு உற்பத்தி தனித்த முறையில் உருவாகாத காலக்கட்டத்தில் மரங்களை உண்பதற்கு வேண்டியவற்றைத் தந்தன. மனிதர்கள் மட்டுமின்றி விலங்குகளுக்கும் மரங்கள் உணவை வழங்கின எனலாம். சிலவகை மரங்கள் காய்களையும் சில கனிகளையும் தந்தன. மரங்களின் இலைகள், பட்டைகள் போன்றவையும் உணவாகப் பயன்பட்டன.[31] மரங்களின் நிழலில் மக்கள் வசித்து வந்தனர். இவை குடியிருக்கும் இடங்களாகவும் வெய்யிற் காலங்களில் நிழல்தரும் மரங்களாகவும் போற்றப்பட்டன. சங்க இலக்கியங்களில் பொதுவாக மா, பலா, வாழை, மூங்கில், ஓமை போன்ற பல்வேறு மரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. பண்டைத் தமிழர்களின் மரப்பயன்பாடு குறித்து,

> போர்ச்சின்னமாக மரங்களும் விளங்கின. தமிழ் மன்னர்களின் கோட்டைகளில் குறிப்பிட்ட காவல் மரங்கள் இருந்தன. இவை கடிமரம் என்றழைக்கப்பட்டன. மற்றார் அதைக் கைப்பற்றாத வகைகளில் கடிமரங்கள் காவல் காக்கப்பட்டன. கடம்பமரம் கடிமரமாகத் திகழ்ந்தது[32]

என்று கு.வி.கிருஷ்ணமூர்த்தி விவரிக்கிறார். அரசு அமைந்த நிலவுடைமைச் சமூகத்தில் மரம் அரசச் சின்னமாக மாறிவந்துள்ளமை எண்ணத்தக்கது. இக்காவல் மரம் பற்றிய செய்திகள் புறநானூற்றில் மிகுந்து காணப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் இயற்கையை மிகுதியும் வலியுறுத்துவனவாக இருப்பது மரங்களின் பயன்பாட்டை அதிகம் எடுத்துரைப்பதற்கும் வாய்ப்பாக அமைந்துள்ளது. பண்டைத் தமிழ்ப் புலவர்கள் தாவரங்களிடத்துக் காட்டும் அன்புணர்வு மரங்களிடத்தும் பரவியுள்ளது. மரங்களை மனித உயிர்கள் போலவும் கருதிப் பாடிய செய்யுட்களையும் இவற்றில் காணமுடிகிறது.

பழந்தமிழ் மக்கள் மரங்களைத் தெய்வமாக வழிபட்டனர். இதற்கு மர வழிபாடு எனப்பெயர். தொல்காப்பியர் தமிழர்களின் மர வழிபாட்டுப் பண்பாட்டை ஏற்றுக் கொண்டுள்ளார்.[33] இக்காலத்துக் கிராமப்புறங்களில் வேப்பமரம், அரசமரம் ஆகியவற்றை மக்கள் வணங்கி வருவதைக் காணமுடிகிறது. இறைவன் மரத்தில் தங்கியுள்ளதாக எண்ணி மக்கள் வழிபட்டதைச் சங்க இலக்கியங்களும் எடுத்துரைக்கின்றன.

> கடவுள் மரத்த[34] (அக:270:12)

> எம்மூர் வாயில் உண் டுறைத் தடைஇய
> கடவுள் முதுமரத்து[35] (நற்:83:1–2)

என்னும் தொடர்கள் மரத்தில் கடவுள் தங்கியிருப்பதை உணர்த்துவனவாகும். மக்களும் அதனால் மரத்தையே வழிபட்டனர். சங்க இலக்கியங்களில் கடவுளுக்குரிய கோயில்கள் பெருங்கட்டிடங்கள் என்ற குறிப்பின்றிக் கடவுளை மரத்துடன் தொடர்புபடுத்திப் பேசுகின்றன. கந்து என்பது மரத்தைக் குறிக்கும்

என்றும் கந்தன் என்ற சொல்லும் அதனடியில் தோன்றியதே என்றும் விளக்கப்படுகின்றது.

> கந்து என்பது ஒரு குட்டையான ஆனால் தடித்த மரக்கம்பத்தை அல்லது தூணைக் குறிக்கும் சொல்லாகும். ஒரு நன்கு வளர்ந்த மரத்தின் அடிமரத்தை விட்டுவிட்டு மீதப்பகுதியை வெட்டி நீக்கிவிட்டால் எஞ்சியிருக்கும் தூண் போன்ற அடிமரம்தான் கந்து எனப்பட்டது. இந்தக் கந்து பண்டைய தமிழகக் கிராமப்புற மக்களால் வழிபாடு செய்யப்பட்டது[36]

என்கிறார் கு.வி.கிருஷ்ணமூர்த்தி. கடவுள் மரங்களில் மறைந்துள்ளார் என்பது பண்டைத் தமிழரின் இறைக் கொள்கையாகவும் இருந்தது. இந்த அடிப்படையில் சங்க இலக்கியங்களும் புனையப்பட்டன எனலாம். மரவழிபாடு ஆரியர்களுக்கு முந்திய வழக்கமாகத் தமிழர்களால் பின்பற்றப்பட்டது. இன்றும் கோயில்களில் கொடிக்கம்பம் அமைக்கப்பட்டிருப்பதும் மரத்தையும் கடவுளையும் தொடர்புப்படுத்திப் பார்ப்பதாகக் கொள்ளமுடியும். தமிழகப் பெருங்கோவில்களில் மூல இறைவன் மரங்களோடு இணைத்துக் கூறப்பட்டிருப்பதைக் காணமுடியும். இம்மரங்களுக்குத் தலமரங்கள் எனப் பெயர். இவ்வாறு சமூகத்தோடு கலந்துள்ள மரங்கள் பற்றிய பரிவும் இரக்கமும் சங்கப் பாடல்களில் கூறப்பட்டுள்ளன.

மரங்களிடத்து மக்கள் கொண்டிருந்த இரக்க உணர்வு நான்கு வகையில் அடங்குகிறது. இது மரங்களின் தோற்றம் முதலானவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுகின்றது. இவ் அன்புணர்வை,

1. தோற்றத்தால் எழுவது
2. மக்கள் அழித்தல்
3. விலங்குகள் அழித்தல்
4. வெயிற் கொடுமை

எனப் பிரித்துப் பார்க்கும் வாய்ப்புகள் செய்யுளில் காணப்படுகின்றன.

**2.1.10. தோற்றத்தால் எழுவது**

மரங்கள் கிளை, இலை, பூ எனப் பல்வேறு உறுப்புகளால் அழகு பெறுவன. செய்யுட்களின் மரத்தின் ஒவ்வொரு பகுதியும் இடவண்ணனைக் கொண்டமைந்துள்ளது. மரத்தின் தோற்றமே மரங்களுக்கு அழகும் பெருமையும் தருவதாகும். பயன்பாடு வாழ்க்கையின் பிறிதொரு பகுதியாகும். தோற்ற வருணனை மரங்களுக்கு அடிப்படையாக வேண்டப்படுவதாகும். 'நெட்டை மரங்களென நின்றார்'[37] என்று பாரதி பாடியதிலும் மரத்தின் நெடிய தோற்றம் பதிவாகியுள்ளதைக் காணமுடிகிறது. சபை நடுவே நீட்டோலை வாசியாதான் நின்றான் நெடுமரம்[38] என்ற அவ்வையின் பாட்டிலும் மரத்தின் தோற்றம் குறிக்கப்பட்டிருத்தல் எண்ணத்தக்கது. சங்க இலக்கியங்களில் மரங்கள் வருணனை அழகுறவே புனையப்பட்டிருக்கிறது.

வருணிக்கப்பட்டிருக்கும் மரங்கள் சில செய்யுட்களில் பொலிவிழந்து நிற்பதாகவும் இலைகளையும் கிளைகளையும் இழந்து நிழல்தரும் தன்மையினீங்கி நிற்பதாகவும் சங்கச் செய்யுட்களில் கூறப்பட்டுள்ளன. இத்தோற்றம் இழந்த நிலை, மரங்கள் மீது இரக்க உணர்ச்சியை ஏற்படுத்துவதாக அமைகின்றது. பாடலைப் பாடிய புலவர்களுக்கும் படிப்போர்க்கும் இரக்க உணர்வை ஏற்படுத்துவதால் பண்டைத் தமிழ் மக்கள் தாவரங்கள்பால் குறிப்பாக மரங்களிடத்தும் காட்டும் பரிவை அறிந்து கொள்ள முடியும். மரங்கள் அழகிழந்து காணப்படும் நிலையும் மக்கள் வாழ்க்கையின் இரங்கத்தக்க நிலைக்கு உவமையாகவே எடுத்தியம்பப்பட்டிருக்கிறது.

சோழன் கரிகாற்பெருவளத்தான் இறந்தான். அது கேட்ட மக்கள் பெருந்துயர் அடைந்தனர். மகளிர் தாம் அணிந்திருந்த அணிகலன்களைக் களைந்துவிட்டு வறிதே அழகற்று நின்றனர். இது வேங்கை மரத்தின் பூக்களை ஆவினத்திற்காகக் கோவலர்கள் கொய்தபின் பூவற்று நின்ற வேங்கை போன்ற தோற்றம் கெண்டிருந்தது எனப் புலவர் புனைகிறார்.

பூவாட் கோவலர் பூவுட னுதிரக்

கொய்து கட்டழிந்த வேங்கையின்

மெல்லியல் மகளிரும் இழைகளைந் தனரே (புற., 224:15–17)

என்ற புறப்பாட்டு மேற்குறித்த செய்தியை விளக்குகின்றது. இத்தொடர்களில் கட்டழிந்த வேங்கை என்பது வேங்கை மரத்தின் பொலிவிழந்த நிலையை உணர்த்துகின்றது. வேங்கைப்பூ மகளிரணியும் பொற்றாவிபோல் இருத்தலின் அப்பூவுதிர்ந்த வேங்கை இழை துறந்த மகளிர்க்கு ஏற்ற உவமமாயிற்று[39] என்கிறார் ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை.

வேனிற்காலத்து வெம்மைக்கு ஆற்றாது மரஞ்செடி கொடிகள் எனப் பலதிறத்துத் தாவரங்களும் பொலிவற்றுக் கிடந்தனவென்று கலித்தொகை கூறுகின்றது.

செல்லுநீ ளாற்றிடைச் சேர்ந்தெழுந்த மரம்வாடப்

புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி தகைப்பன

துணிபுநீ செயக்கண்ட ஆற்றிடை அம்மரத்

தணிசெல வாடிய அந்தளிர் தகைப்பன (கலி., 3:12–13, 16–17)

என்பன மரமும் செடிகொடிகளும் வாடி நின்ற கோலத்தை நாட்டி மனத்தில் வருத்தத்தை உண்டாக்குகின்றன.

### 2.1.11. மக்கள் அழித்தல்

காட்டிலும் வழிகளிலும் மலைப்பகுதிகளிலும் உள்ள மரங்களை மக்கள் அழிப்பதால் மரங்கள் பட்டுவிடுவதும் செழிப்பற்றிருப்பதும் சங்க இலக்கியங்களில் சுட்டப்பட்டள்ளன. மக்களின் தேவை கருதி மரங்கள் அழிக்கப்படுகின்றன. காய்த்த மரங்கள் கனிகளுக்காகச் சிதைக்கப்படுகின்றன. இவ்வாறு மரங்களின் அழிப்பைக் கூறுங்கால் இரக்கவுணர்வு உருவாகும் அளவில் பாடல்கள் புனையப்பட்டுள்ளன. நல்ல மரங்கள் பயனுள்ள மரங்கள் அழிக்கப்படுவது இரங்கற் குறிப்புடன் சொல்லப்படுகிறது. குறவர்கள் மலையும் மலைசார்ந்த பகுதிகளிலும்

வாழ்பவர்கள். அவர்கள் தினை விளைவிப்பதும் மலைகளில் தேனெடுப்பதும் தொழிலாகக் கொண்டவர்கள். இவர்கள் மணமிக்க சந்தன மரங்களை அறியாமையினால் வெட்டி வீழ்த்திவிட்டனர் என்று ஒரு பாடல் குறிப்பிடுகின்றது. இது,

> மரல்நார் உடுக்கை மலையுறை குறவர்
> அறியா தறுத்த சிறியிலைச் சாந்தம்
> வறனுற் றார முடுக்கிப் பையென
> மரம் வறிதாகச் சோ்ந்தஉக் காங்கென் (நற்., 64:4–7)

எனக் கூறப்பட்டுள்ளது. அறியாதறுத்த என்பது விளையாட, அறுக்கக் கூடாத மரமென்றும், அதனால் மீண்டும் தளிர்க்காது, அது வற்றிப் போயிற்று எனவும் கொள்ளப்பெறும். மணம் தரும் சந்தன மரங்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது புலவர் தரும் குறிப்பாம். மேலும் சிறியிலைச் சாந்தம் என்பதும் அம்மரத்தின் மென்மைத் தன்மையைச் சுட்டிற்று.

கானவன் (குறவன்) ஒருவன் தன் கொல்லை நிலத்தில் இருந்த மரத்தை வெட்டி வீழ்த்தி விதை விதைத்தான் என்பதை, மறங்கொல் கானவன் புனம்துளர்ந்து வித்திய (குறு.214:1) எனக் குறுந்தொகை குறிப்பிடுகின்றது.

மன்னர்கள் அரண்மனையில் இருக்கும் காவல்மரம் அவர்களின் அரசாட்சியின் அடையாளமாக விளங்குவதாகும். முரசு, காவல் மரம் போன்றவற்றை மன்னரும் மக்களும் மிக மதிப்புடன் போற்றுவர். அவற்றிற்கு இழுக்கேற்படா வண்ணம் அரசர்களின் செங்கோலாட்சி நடைபெற்று வருவது இயல்பு. காவல்மரம் உயிருள்ள மரமாக அரண்மனையில் வளர்க்கப்படும். நன்னன் என்ற மன்னனின் காவல் மரத்திலிருந்து விழுந்த மாவடுவொன்றை ஆற்றின் வழியிலிருந்து எடுத்துத் தின்ற பெண்ணைக் கொலை செய்த வரலாறு தமிழ் இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளது.[40] சங்ககாலக் குறுநில மன்னர்களும் பேரரசர்களும் இத்தகைய காவல் மரத்தைப் போற்றி வந்தனர்.

திதியன் என்பானின் காவல் மரத்தைப் போரொன்றில் அன்னி என்னும் மன்னனின் படைகள் வெட்டி வீழ்த்தின.

அன்னி குறுக்கைப் பறந்தலை திதியன்
தொல்நிலை முழுமுதல் துமியப் பண்ணி
புன்னை குறைத்த ஞான்று (அகம்., 45:9–11)

எனவரும் பாடற்செய்தி காவல் மரமாகிய புன்னை துணிக்கப்பட்ட தகவலைத் தருகிறது. புன்னை அழகிய மலர்களையுடையதும் மணற்பாங்கில் வளர்வதும் நன்னிழல் தருவதுமாகியதொரு மரம். அஃதோடன்றிக் காவல் மரமாயும் இருந்த நிலையில் அது வெட்டப்பட்டது. அம்மண் வாழ்நர் அனைவர்க்கும் துக்கம் தருவதாகும். குறுக்கை பறந்தலை என்பது போர் நிகழ்ந்த இடமாகும். முழுமுதல் துமிய என்பது வேருடன் வெட்டி வீழ்த்தப்பட்டது என்பதாகும். மருந்து மரத்தின் அடிப்பகுதிப் பட்டையை வெட்டி மக்கள் இணைத்துள்ளனர். இதனை மருந்து கொள் மரத்தின் வாள் வடு (புறம்.180:5) எனப் புறநானூறு கூறும்.

### 2.1.12. விலங்குகளின் அழிப்பு

மனிதர்களால் மரங்களுக்கு அழித்தல் உண்டாதல் போல விலங்குகளாலும் நேருகின்றது. குறிப்பாக யானை போன்ற வலி மிகுந்த விலங்குகள் காடுகளிலும் புனங்களிலும் உள்ள மரங்களை மோதி அழிக்கின்றன. இத்தகைய விலங்குகளால் உண்டாகும் மரச் சேதங்களை ஆங்காங்கே புலவர்கள் பாடியுள்ளனர். ஓமை, யா, வாழை போன்ற மரங்களை விலங்குகள் தாக்குகின்றன. மரங்களின் கிளைகளை முறிப்பதும் பட்டைகளை உரிப்பதும் வேருடன் சாய்ப்பதுமாக விலங்குகள் செயற்படுகின்றன. விலங்குகளின் சினக்குறிப்புத் தோன்றுமாறும் பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. ஓமை என்னும் மரம் காடுகளில் மிகுந்திருக்கும். இதன் பட்டை இனிப்புச் சுவையுடையதாகத் தோன்றும். இதனால் யானைகள் ஓமை மரத்தைச் சாய்த்து அதன் பட்டையை உரித்துத் தின்பதை இலக்கியங்கள் புனைந்துள்ளன.

நாட்சுரம் உழந்த வாட்சேழ் ஏற்றையொடு

பொருத யானைப் புட்டாள் ஏய்ப்பப்

பதிப்பிடி உதைத்த ஓமைச் செவ்வரை

வெயில்காய் அமையத்து இமைக்கும் அத்தம் (நற்., 279:5–8)

என்று ஓமை மரப்பட்டையை யானை உரித்துத் தின்றமை கூறப்பட்டுள்ளது. புலியும் யானையும் சண்டையிடும்போது யானையின் கால்கள் புண்பட்டன. அப்புண்களின் வலியுடன் செல்லும் பசி மிகுந்த யானை அருகிலிருந்து ஓமை மரத்தினை உதைத்துச் சிதைத்தது. நன்கு வளர்ந்திருந்த ஓமை சாய்ந்து கெட்டது என்பது பொருள். உதைத்த என்னும் பெயரெச்சம் யானையின் சினத்தைக் குறித்தது.

ஊருக்கருகிலுள்ள சோலையின்கண் வாழை மரங்கள் பயிரிடப்பட்டுள்ளன. அவை நீண்ட இலைகளையும் குருத்துகளையும் கொண்டு செழிப்புடன் வளர்ந்திருந்தன. அவற்றின் பக்கமாக வந்த மதங்கொண்ட யானைத் தன்தலையை வாழையின் குருத்தில் சேர்த்துத் தேய்த்தது. இதனால் வாழையின் குருத்தும் இலையும் சிதைந்தன. யானை இந்தச் செயலுக்குப் பின்னர் வாழை பயன்பாட்டுக்குரியதாகாது என்பது கருத்து. இளம்வாழைக் கன்றுகளை மக்கள் மிகுந்த பொறுப்புடன் பாதுகாப்பர்.

சோலை வாழை சுரிநுகம் பிணைய

அணங்குடை இருந்தலை நீவலின் மதனழிந்து

மயங்குதுயர் உற்றமையல் வேழம் (குறுந்., 308:1–3)

என்பது யானையின் வன்முறைச் செயலைக் குறிப்பதாம். மயக்கத்துடனும் துயருடனும் யானை இருந்ததை இவ்வாசிரியர் உணர்த்துகின்றார். சுரிகுரும்பு என்பது சுருண்ட குருத்து என்னும் பொருளது. இத்தகைய வாழை மக்களின் பயன்பாட்டிற்குரியதென்க.

தண்ணீர் தெளித்துத் தன்கையால் தடவிக்

குமரி வாழைக் குருத்தகம் விரித்து

அடிகள் அமுதம் உண்டு[41]

எனக் கண்ணகி குறிப்பிட்டதாக இளங்கோவடிகள் பாடுகின்றார். இதில் வரும் குமரி வாழைக் குருத்து வாழையின் மெல்லிய பகுதியாகும். இதைத் திரிக்காமல் அவ்வாறே பயன்படுத்த வேண்டும் என்பதே கருத்து.

> களிறுதன்
> உயங்குநடை மடப்பிடி வருத்தம் நோனாது
> நிலைஉயர் யாஅம் தொலையக் குத்தி
> வெண்ணார் கொண்டு கைசுவைத்து அண்ணாந்து
> அழுங்கல் நெஞ்சமொடு முழங்கும்
> அந்த நீளிடை... (குறு., 307:4–9)

என்பது யா மரத்தைத் தம் கொம்புகளால் குத்தி அதன் பட்டையைப் பசிக்குணவாகச் சுவைத்த களிற்றின் செயலைக் குறிப்பதாகும். தொலையக் குத்தி என்பது மரம் அழிந்ததைக் குறிக்கிறது. உயர்நிலை யா என்பது உயர்ந்த மரம் என அதன் தோற்றத்தைச் சுட்டியதாகும். வெண்மையான நிறத்தை உடைய அதன் பட்டையை உரித்துத் தின்றது என்றமையால் மரத்தை முழுமையாகச் சிதைத்து விட்டது என்பதை அறியலாம். இவ்வாறு யானைகளால் மரங்களுக்கு இன்னல் நேர்ந்தது என்பது குறிப்பு. யா மரத்துக்கிளையிலே சிறிது தழை காணப்படுதலால் அதனை அண்ணாந்து நோக்கி முழங்கிற்றென்க[42] என உரையாசிரியர் குறிப்பொன்றை எழுதியுள்ளார்.

கன்னி ஒருத்தியை அரசிளங்குமரனுக்குப் பெண் கேட்டனர். பெண்ணைப் பெற்றவர் பெண்தர மறுத்துவிட்டனர். இதன் காரணமாக இரு மன்னர்க்கும் போர் மூண்டது. அரசிளங்குமரனது படை கன்னியின் அரண்மனையை முற்றுகையிட்டது. அரண்மனையைச் சுற்றியுள்ள மரநிழலில் பகைநாட்டுத் தேர்கள் நிறுத்தப்பட்டிருந்தன. யானைகள் சில மரங்களின் அடிப்பகுதியில் கட்டப்பட்டிருந்தன. அவ் யானைகள் அசைத்தசைத்து அம்மரங்களைச் சாய்த்தன. அம்மரங்களின் வேர் வெளித்தோன்ற அம்மரங்கள் வருந்துகின்றன என்றே புலவர் பாடியுள்ளார்.

ஆனாது
நிழல்தொறும் நெடுந்தேர் நிற்ப, வயின்தொறும்
செந்நுதல் யானை பிணிப்ப
வருந்தல மன்எம் பெருந்துறை மரனே (புறம்., 348:7–10)

எனப் பாடப்பெற்ற செய்யுளடிகள் யானை அசைத்தலால் வருந்தும் மரத்தின் துயரத்தைச் சுட்டுவனவாகும்.

### 2.1.13. வெய்யிற்கொடுமையும் மரங்களும்

தமிழகத் தட்ப வெப்பநிலை சீரானதாக அமைந்துள்ளது. மிகக் கடுமையான வெப்பம் அல்லது கடுமையான குளிர் என்பது இந்தியாவின் பிற மாநிலங்களைக் குறிப்பாக வடமாநிலங்களை ஒப்பிட்டுப் பார்க்கையில் சீராகவே அமைந்துள்ளது. பிற உலக நாடுகளிலிருந்தும் தமிழக வெப்பநிலை வேறுபட்டதாகும். பொதுவாகக் குளிரற்ற வெப்பமண்டல நாடுகளில்தான் தமிழகமும் இந்தியாவும் இணைக்கப்பட்டுள்ளன. இத்தகைய சீரான வெப்பநிலையைக் கொண்ட தமிழகத்தில் கடுங்குளிரும் கடும் வெப்பமும் இருந்ததாகச் சங்க இலக்கியங்கள் புனைந்துள்ளன. அக இலக்கியங்களில் தலைவி அல்லது தோழி கூற்றில் வரும் பாடல்களில் தலைவன் செல்லும் பாதை வெப்பம் மிகுந்த சுரங்களாகவும் காடுகளாகவும் சித்தரிக்கப்படுகின்றன. பிரிந்து செல்லும் தலைவனின் உணர்வும் மீண்டு வரும் தலைவனின் உணர்வுகளும் இக்காட்டிடத்தே சொல்லப்பெறும்.[43]

வெய்யிலின் கொடுமைக்கு விலங்குகளும் பறவைகளும் தாங்க இயலாமல் வேறு இடங்களுக்குச் சென்று விடுவதும் துன்புறுவதும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. பாலைநிலங்களில் வெப்பத்தைத் தாங்கிக் கொள்ளும் திறன் கொண்ட தாவரங்கள் காணப்படுவதாகப் புலவர்கள் பாடியுள்ளனர். ஓமை என்ற தாவரம் சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளது. இதற்குரிய மலர்கள்

குறிக்கப்படவில்லை. இது பாலைவனத் தாவரமாகக் கூறப்பட்டுள்ளது. பாலைவன வெம்மையைத் தாங்கிக் கொண்டு அங்குக் கிடைக்கும் குறைந்த அளவு நீரைக்கொண்டே தழைத்து வளரக் கூடியது. நன்றாக விரிந்த கிளைகளைக் கொண்டு விரிந்த நிழல் தரக்கூடியது எனச் சொல்லப்படுகிறது.[44] தேக்குமரம் பற்றிய குறிப்புகளும் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. தேக்கு, சந்தனம் போன்ற மரங்கள் முதன்மையானவையாகக் கொள்ளப்படுகின்றன.[45]

இவ்வாறு சங்கப் பாடல்களில் குறிப்பிடப்பட்ட மரங்கள் பயனுள்ளவையாக இருப்பினும் காண்பதற்கு அழகூட்டுபவையாகத் தோன்றினும் அவை வெய்யில் கொடுமையால் நீரின்றி வாடி வற்றிப் போகும் காட்சிகள் உள்ளத்தை நெகிழ வைப்பவையாகக் கூறப்பட்டிருக்கின்றன. விலங்குகளாலும் மனிதர்களாலும் இன்ன பிற இன்னல்களாலும் மரங்கள் தங்கள் பொலிவை இழப்பது போலவே வெய்யிலின் வெம்மையாலும் அவை சிதைவுறுகின்றன. இவற்றைப் பாடுபொருளின் தேவை கருதிப் பாடிய புலவர்கள் உள்ளத்தில் நெகிழ்வு தோன்றவே பாடியுள்ளனர். இப்புனைவுகள் அடங்கிய பாடல்களைப் படிக்குந்தொறும் இரக்க உணர்ச்சியும் தாவரங்கள் மீதான பரிவும் ஏற்படுவது இயல்பாகவே எழுவதற்கு வாய்ப்புகள் உள்ளன.

வேம்பு என்ற மரம் பச்சிலையைக் கொண்டது. மருந்தாகவும் பயன்படுகிறது. இன்றும் தமிழகத்தில் இதன் இலைகளை மருந்தாகப் பயன்படுத்துகின்றனர். சித்த மருத்துவ முறையில் வேம்பு குறிப்பிடத்தக்கது. மருத்துவப் பொருளாகக் கொள்ளப்படுகிறது. பழங்காலத்தில் பாண்டிய மன்னர்கள் வேப்பம்பூ மாலை அணிந்து வந்தனர் என்று தமிழிலக்கியத்தில் கூறப்படுகிறது.[46] நல்ல நிழல் தரும் மரமாகவும் வேப்பமரம் பயன்பட்டு வருகிறது. குறுந்தொகைப் பாடலொன்றில் மலைப் பகுதியிலிருந்த வேம்பு வெய்யில் இல்லாக் காலத்திலும் வாடிற்று எனக் கூறப்பட்டுள்ளது.

கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்
என்னை இன்றியும் கழிவது கொல்லோ
ஆற்றயல் எழுந்த பெவண்கோட்ட டதவத்
தெழுகுளிர் மிதித்த ஒருபழம்போலக்
குழையக் கொடியோர் நாவே
காதலர் அதலக் கல்லென் றவ்வே (குறு., 24)

இப்பாடல் தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவி வேம்பு மலரைச் சூடாததால் அவை வாடிப் போயிற்று எனக் கூறுப்படுகிறது.

மூங்கில் மரம் வறட்சியைத் தாங்கும் இயல்பு கொண்டது. அது பாலை நிலத்தில் தனித்து நிற்பதாகக் காட்சி ஒன்று குறுந்தொகையில் கூறப்பட்டுள்ளது. நிழல் மரங்களிலும் மூங்கில் அடங்காது. மக்கள் தம் வாழ்க்கைப் பயன்பாட்டிற்காக இதனைப் பயன்படுத்துகின்றனர். இன்றும் வீடுகட்டுதல், கூடை போன்ற பயன்பாட்டுப் பொருட்களைத் தயாரித்தல், காகிதம் தயாரித்தல் என்பன இம்மரத்தைப் பயன்படுத்தி உற்பத்தி செய்யப்பெறும் பொருள்களாகும். இம்மரம் பாலை நிலத்தில் மிகுந்த துயரோடு நின்றதாகப் புலவர் பாடுகின்றார். மரத்தின் துயரை எண்ணி உணர்ந்து பாடியுள்ள புலவரின் திறம் குறிக்கத்தக்கது.

பழூஉப் பல் அன்ன பரூஉகிர்ப் பாஅடி
இருங்களிற்று இளநிலை ஏந்தல்வரின் மாய்ந்து
அறைமடி கரும்பின் கண்ணிடை அன்ன
பைதல் ஒருகழை நீடிய சுரனிறந்து
எய்தினர் கொல்லோ பொருளே அல்குல்
அவ்வரி வாடத் துறந்தோர்
வன்பர் ஆகத்தாம் சென்ற நாட்டே (குறு., 180)

என்னும் செய்யுளில் 'பைதல் ஒருகழை நீடிய சுரன்' என்பது இங்குக் குறிக்கத்தக்கது. இத்தொடர் மூங்கில் மரம் பெற்ற வெய்யிலின் வெம்மையை இரக்கவுணர்வோடு சுட்டுகின்றது. பைதல் என்பதும், துன்பம். வெய்யிலின் கொடுந்துயரில் தனியாக நிற்கும் மூங்கில் என ஆசிரியர் கூறுகின்றார். இது பாலை நிலத்தில் தனித்து ஒற்றை மரமாக நின்றதும் அதன் மீது இரக்க உணர்வு தோன்றுவது இயல்பாகும். மா, பலா, வாழை என்பன முக்கனிகள் என அழைக்கப்பட்டன. தனித்தனி முக்கனி பிழிந்து[47] என இராமலிங்க அடிகள் பாடியதில் முதலில் நிற்பது மா கனியாகும். மூங்கில் மரத்தைப் போலவே வெம்மை தாங்காது கிளைகளிலிருந்த பூக்கள் சிதறிவிடுகின்றன. வெப்ப மிகுதியால் பூக்கள் சிதறிவிடின் காய்க்கும் வாய்ப்பும் குறைவாகப் போய்விடும். இதுபோல மராஅ மரம் என்பதும் ஒன்று. அதுவும் வெய்யிலில் வாடுவதை இலக்கியம் சுட்டுகிறது.

> அஞ்சில் ஓதி ஆய்வளை நெகிழ
> நேர்ந்து நம்மருளார் நீத்தோர்க் கஞ்சல்
> எஞ்சினம் வாழி தோழி எஞ்சாது
> தீய்த்து மராஅத்து ஓங்கல் வெஞ்சினை
> வேனில் ஓரிணர் தேனோடு ஊதி
> ஆராது பெயரும் தும்பி
> நீரில் வைப்பின் சுரன் இறந்தோரே (குறு., 211)

என்பதில் வேனிற்காத்து மராஅ மரத்தின் பெரிய கிளைகள் வாடின எனக் கூறப்பட்டிருப்பது எண்ணத்தக்கதாகும். அக்கிளையின் கண் பூத்திருந்த பூக்களும் வாடின என்பது குறிப்பு. குறுந்தொகையில் வருவது போலவே கலித்தொகையிலும் மரங்கள் நீரின்றிக் காய்ந்தமை குறிப்பிடப்பட்டுள்ளது.

உலறிய உயர்மரம் (கலி. 10:6) என்பது மரத்தின் தனிப் பெயர் சுட்டாது. பொதுவாக மரங்களை வெய்யில் வாட்டுவதை இப்பாடல் குறிப்பிடுகின்றது. காடு முழுதும் இவை பட்டுப் பாழாகிக் கிடக்கின்றன.

கனிதரும் மரங்கள் பூத்துக் குலுங்கும் இயல்புடையன. அவை பூத்த பின்னரே காய்க்கின்றன. அதனையடுத்து அக்காய்கள் கனியாகிப் பயன்தருகின்றன. இவ்வாறு பூக்கும் மரங்கள் வெய்யிலின் வெம்மையால் பூவையிழந்தன. அதன் பின்னர்க் காய்த்து பழுக்கும் கனிகளையும் உருவாக இயலாமல் நின்றுவிட்டன என்று பழந்தமிழ்ப் பாடல் குறிப்பிடுகின்றது. கலித்தொகையில் இடம்பெறும் இவ்வருந்தத்தக்க நிகழ்ச்சி,

வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின (கலி., 10:5)

எனக் கூறப் பெற்றுள்ளது. வேருடன் மரம் வெம்மையில் பட்டதால் பூத்தலையும் காய்த்தலையும் இழந்தது. மரம் உயிர் வாழ வேர் முதன்மையானது. வேர்களில் ஆணிவேர், சல்லி வேர், பக்க வேர்கள் எனப் பலவகை கூறப்படுகின்றன. வெம்மை அதிகமிருப்பினும் பூமியில் மண்ணிலுள்ள ஈரத்தைக் கொண்டாவது தாவரங்கள் உயிர்வாழ அடிப்படையாக வேர் இருக்கிறது. சில தாவரங்களின் வேர் தொடங்கி முழுதுமே மருந்துக்கும் பயன்பட்டன.[48] அதுவே வெய்யிலில் காய்தல் என்பது மரத்தின் துயரை மேலும் வெளிப்படுத்தியதாகும். பயிருக்கு வேர் முதலானது என்பதை அடிப்படையாகக் கொண்டு தமிழில் நீதிக் கருத்துகளும் கூறப்பட்டன. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்[49] என்பது அவ்வை வாக்கு.

காடுகள் நெருப்புப் போன்ற வெம்மைத் தரும் (கலி., 11:6–9), காடுகளில் மரக்கிளைகளின் இலைகள் வெம்மையால் சாகின்றன (கலி., 11:10–13), ஞாயிற்றின் வெம்மையால் மூங்கில்கள் வெடிக்கும் (கலி., 11:14–17) என்றும் கூறப்படும் செய்திகள் யாவும் வெய்யிலின் வெம்மையால் மரங்கள் படும் துயரத்தை வெளிக்காட்டுவனவாய் இருக்கும். கல்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதல் (கலி., 11:14) என்பது கலித்தொகைத் தொடர். இதுபோல அகநானூறு, புறநானூறு ஆகிய இரு இலக்கியங்களிலும் மரஞ்செடி கொடிகள் காடுகளிலும் மலைப் பகுதிகளிலும் வெய்யிலால் சிதைந்து அழிவது கூறப்பட்டுள்ளது. அச்செய்திகள் யாவும் வருந்தத் தக்கனவாகவுள்ளன.

யான்னென் செய்கோ தோழி பொறிவரி

வானம் வாழ்த்தி பாடவும் அருளாது

உறைதுறந்து எழிலி நீங்கலின் பறையுடன்

மரம்புல் லென்ற முரம்புயர் நனந்தலை

அரம்போழ் நுதிய வாளி அம்பின்

நிரம்பா நோக்கின் நிரயம் கொண்மார்

நெல்லி நீளிடை (அக., 67:1–7)

என்ற அகப்பாடல், மேகம் மழை பெய்தலை நிறுத்தியதால் வறட்சியேற்பட்டு வெம்மை உண்டானதையும் வானம்பாடிப் பறவை பாடியதையும் தொடர்ந்து மழையின்மையும் மரங்களில் இலைகள் அதிர்ந்து வறட்சி தாளாமல் கிளைகள் வற்றித் தோன்றியதையும் உணர்த்துகின்றது. வானம் அருளாது என்பது மழையின்மையைச் சுட்டியது. வெம்மை குறைவதற்குத் தேவை மழையே என்பது இப்பாடலின் கருத்தாகும். எல்லாவற்றிற்கும் மழையே அடிப்படை என்பதை வள்ளுவர் வான்சிறப்பு என்றும் அதிகாரத்தில் சுட்டியுள்ளார்.

நெடுங்கடலும் தண்ணீர்மை குன்றும் தடிந்தெழிலி

தானல்கா தாகி விடின்[50] (குறள்:48)

என்று கடல் நீருக்கும் மழையே முதன்மையாவது சுட்டப்பட்டுள்ளது.

மரங்களின் தனித்தனி உறுப்புகள் பூ, இலை, காய் என ஒவ்வொன்றையும் சுட்டின் அவற்றின் சிதைவையும் அழிவையும் வருந்தப்பாடும் புலவர்கள் வெய்யிற் கொடுமையால் மலைப்பகுதியும் பிற இடங்களில் உள்ள தாவரங்களும் சுட்டெரிக்கப் படுவதைப் பல பாடல்களில் புனைந்துள்ளனர். இவ்வாறு பொதுவாகச் சுட்டும் போக்கினால் வெய்யிலின் கொடுமை உணர்த்தப்படுகின்றது. மரங்கள், செடி, கொடிகள் பயிர்கள் எனப் பலவும் வாழ அழிவதையும் அவற்றுள்ள மரங்களும் கொடிகளும் பூக்களை இழந்தனவென்றும் பாடப்பெற்றுள்ளமை காணத்தக்கது. அகநானூறு 185, 259 ஆகிய இருபாடல்களும் இத்தன்மையில் அடங்குவனவாகும்.

ஒலிகழை நிவந்த செல்லுடை நெடுதவதிர்

கலிகொள் மன்னர் வில்விசையின் உடைய

பைதரி வெம்பிய கெல்பெருபரப்பின்

வேனில் அத்தத்து ஆங்கண் வானிலந்து

அருவி ஆன்ற உயர்சிமை மருங்கில்

பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்

இலைஇல மலர்ந்த இலவளமொடு

நிலையுயர் பிறங்கல் மலைஇறந் தோலே (அக., 185:6–13)

என்னும் பாடலில் மூங்கில், இலவமரம் போன்ற மரங்கள் வெய்யில் மிகுதியால் வெம்பின எனச் சுட்டப்பட்டன. பைதற வெம்பிய என்பது பசுமை அற்றுப் போக எனப் பொருள்பட்டது. அகன்ற மலையிடம் வேனில் வெம்மையால் கொதித்தது. அதனால் இலவ மரத்தின் தழைகள் அனைத்தும் அழிந்தன. காய்களும் வெடித்துச் சிதறின எனக் கூறப்படுவது எண்ணத்தக்கது.

கூட்டருகே உள்ள பூஞ்செடிகள் வாடின. வயலைக் கொடிகளும் வாடின, நொச்சியின் வெம்மையான மலர்கள் வாட்டமுற்றன என்று பல்வகைத் தாவரங்களும் இளவேனிற் காலத்து வாடிப் பொலிவிழந்தன (அக., 259:6–10) என இந்நூல் மேலும் புனைகின்றது. இவையெல்லாம் பழங்கால மக்களின் இரக்கம் கொண்ட மன நிலையைக் காட்டுவனவாகத் தோன்றுகின்றன.

பனைமரமும், புன்னை மரமும் வெய்யிலில் துன்பமுற்றதைப் புறநானூறு குறிப்பிடுகின்றது. பனை, புன்னையை விட உயர்ந்தது. தமிழ் இலக்கியத்தில் பனை, பயன்பாட்டிற்கும் வருணனைக்கும் காட்டப்படுவது இயல்பானது. பொதுவான மழை, காற்று வெளியும் என்பதைக் காட்டிலும் வெய்யிற் கொடுமைக்குப் பனையும் உட்பட்ட செய்திகள் தமிழ் இலக்கியத்தில் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன.

பாரி இறந்த பின் அவன் நாடு வேந்தனில்லாத நாடாயிற்று. பொதுவாக இத்தகைய சூழலில் தாயில் தூவாக் குழவி போல் என வரும் உவமைகளைப் பயன்படுத்தி இரக்க உணர்ச்சியை வெளிப்படுத்துவர் புலவர். கபிலர் பாரியின் நாட்டை நிழல் அறவே இல்லாத வழியில் – நீண்ட வழியில் மரங்கள் பிற இல்லாத தனிமரம் போலப் பாரியின் நாடு இருந்ததாகக் குறிப்பிடுகிறார். அவ்வுவமை,

நிழலில் நீளிடைத் தனிமரம் போலப்
பணைகெழு மூவேந்தரை இறந்தும்
இரவலர்க் கீயும வள்ளியோன் நாடே (புற., 119:5–7)

எனச் சுட்டப்பட்டுள்ளது. வெய்யிலில் வாடும் தனிமரம் என்பது மரத்தின்பாற் கொண்ட இரங்கற் குறிப்பென்பதும் சங்கத் தமிழர் தாவரங்கள் மீது கொண்டருந்த பிரிவு இது என்பதும் போதரும்.

புன்னை மரம் நெய்தல் நிலத்திற்குரியது. இது பெரும்பகுதியும் கடற்கரை மணற்பகுதியில் விளையும். அவ்வாறு இருக்கும் புன்னை மரத்தின் கிளைகள் கற்பக்கமாகச் சாய்ந்து நிற்கின்றன. கடலின் நீண்ட பெரிய அலைகள் அம்மரத்தின் கிளைகளைத் தாக்குகின்றன. அதனால் அதன் கண்ணுள்ள பூக்கள் சிதறி விடுகின்றன. இதனை,

கடலே
கானற் பின்னைச் சினைநிலைக் குந்து (புற., 386:14–15)

எனப் பாடுகிறார் கோவூர் கிழார்.

### 2.1.14. நீரினால் மரம் சிதைதல்

நீர் ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் எனப் பல திறத்தில் உருவாகின்றது. மக்கள் இம்மூவகை நீரையும் பயன்படுத்துகின்றனர். இவையன்றிக் கடல் நீர், குளம், குட்டை, ஏரி முதலான நீராதா;ங்களைப் பயன்படுத்திப் பண்டை நாள் முதல் வாழ்க்கை நடத்துகின்றனர். இத்தகைய நீராதாரங்கள் மரங்கள் வளர்வதற்குப் பயன்படுகின்றன. வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம்

வாடினேன்[51] என இராமலிங்க அடிகள் பாடியிருப்பது நீரற்ற பயிரை என்பது விளங்கும். நீருயர நெல்லுயரும்[52] என்பதும் நீரின் தேவை தாவரங்களுக்கு மிகத் தேவையானது என்பதை விளக்குகின்றது. இவ்வாறு பாதுகாப்புக்கு உரியதாக அமையவேண்டிய நீர் இயற்கைச் சீற்றங்களாலும் பிறவற்றாலும் அளவு மீறிடத் தாவரங்கள் அழிந்துபட ஏதுவாகின்றன. சங்க இலக்கியங்களில் நீரால் சிதைவுறும் தாவரங்கள் பற்றிய செய்திகளைக் காணமுடிகிறது. உயிர் தரவேண்டிய நீரால் தாவரங்கள் சிதைவதாகச் சொல்லப்படுவது பழங்கால மக்களின் மனிதநேய உணர்வைக் காட்டுவதாகும். எவ்வுயிர்க்கும் தீமை செய்யலாகாது என்னும் கொள்கையை இது வலியுறுத்துவதாகும்.

அன்னாய் வாழி உண்டு அன்னை நம்படைப்பைத்
தணயத்து அமன்ற கூதளம்ம குழைய
இன்னிசை அருவிப் பாடும் என்னதூஉம்
ஓங்கு சினைந்தொடுத்த ஊசல் பாம்பென
முழுமுதல் துமிய உரும்எறிந் தன்றே (அக., 68:1–7)

இப்பாடற் பகுதியில் அருவி வந்து மேல் விழுவதால் கூதளஞ்செடி சிதைந்ததும், இடி விழுந்ததால் அசோக மரம் துண்டித்து விழுந்ததும் கூறப்பட்டன. இவை நீரால் விளைந்து துயர் எனலாம்.

### 2.1.15. பயிர்களிடம் இரக்கம் (நெல், எள், கரும்பு)

நெல், தினை, கரும்பு போன்ற தாவரங்கள் பயிர்வகையைச் சார்ந்தவை. இவை உணவாகப் பயன்படுபவை. இவற்றை நிலத்தில் பயிரிட்டுப் பழந்தமிழ் மக்கள் பயன்படுத்தி வந்துள்ளனர். பயிர்த் தொழிலில் பண்டைத் தமிழ்ச் சமூகம் சிறப்புற்றிருந்தது. குறிப்பாக இதனை உழவுத் தொழில் என்று அதனைச் செய்த மக்கள் உழவர்கள் என்றும் அழைக்கப்பட்டிருந்தனர். உழவர்கள் பெருமைக்குரியவர்களாகவும் அவர்கள் செய்யும் தொழிலே உயர்ந்தது என்றும் மக்களின் பசிப் பிணியைப் போக்கும் என்றும் கூறப்பட்டது.[53] பசியுடன் வந்த இரவலர்க்கு உணவிட்ட பண்ணன் பசிப்பிணி மருத்துவன்[54]

என்றழைக்கப்பட்டான். இவ்வாறு சிறப்புடைய தொழிலால் உற்பத்தி செய்யப்பெறும் பயிர்களுக்கு அழிவு வருதலைக் கண்ட சங்ககாலப் புலவர்கள் அதற்கிரங்கிப் பாடியுள்ளனர். அப்பாடல்களின் வழிப் பண்டைத் தமிழ்ச் சமூகம் உயிரன்பு கொள்வதையும் அறிய வாய்ப்பாகிறது.

இருங்களிற்று இனநிரை ஏந்தல் வரின், மாய்ந்து,
ஆறைமடி கரும்பின் கண்இடை அன்ன (குறு. 180:2–3)

என்று கரும்பு யானையால் மிதிபட்டு அழிந்ததைக் குறுந்தொகை இரங்கிக் குறிப்பிடுகின்றது. எள் பயிர்காலத்துப் பயன்தரும் நிலையில் மிகுதியான மழை பெய்து அழித்துவிடுகிறது.

பதனழிந்து உருகிய சிதட்டுக்காய் எள்ளின் (குறு., 26:1–2)

எனக் கூறுப்பட்டுள்ளது. வயலில் விதைத்த நெல் முளையிட்டு விளைந்த தருணத்தில் நண்டுகள் அதனை அறுத்துப் பாழாக்கின என ஐங்குறுநூற்றில் சொல்லப்பட்டள்ளது (ஐங்., 29:2).

### 2.1.17. தினையும் ஐவன நெல்லும்

தினைப் பயிர்கள் நீரின்றிக் காய்ந்ததால் மக்கள் மனம் வருந்தினர். அஃது புன்செய் நிலமாதலின் மழையை எதிர்ப்பார்த்திருக்க மழையின்மையால் பயிர்கள் காய்ந்தன. அதுகண்டு மக்கள் வருந்தினர் என்று கவலை கொண்ட செவிலியிடம் மழைவரும் கவலை வேண்டாம் எனவும் கூறியதாக இப்பாடல் தெரிவிக்கின்றது (ஐங்., 207) ஐவன நெல்லிற்கு விலங்குகளால் அழிவு வரும் என்று மக்கள் அஞ்சியதாகப் பிறிதொரு பாடல் தெரிவிக்கின்றது (ஐங்., 267). விளைவயல் பள்ளம் வாடிய பயனில் காலை (புற., 388:2) என்பது புறப்பாடல் தொடர். விளைவயல் நீர் வற்றியும் நீர் நிலைகளில் நீரின்றியும் இருக்கும் பருவத்தைப் பயனில்லாத காலம் என இது கூறுகின்றது. இதில் வாளை வயல் வாடியது என்பது அறியத்தக்கது.

2.1.18. செடி கொடிகளிடம் இரக்கம்

இலைகள் செடி கொடிகள் போல்வனவும் இரங்கத்தக்க நிலையிலிருப்பதைப் பல பாடல்கள் புலப்படுத்தியுள்ளன. சந்தன மரத்து இலைகள் கோடை வெம்மையில் வாடித் தம் மணத்தை இழந்தன என்பதை,

சிறியிலைச் சந்தின வாடு பெருங்காட்டே (நற்:7:9)

என நற்றிணை கூறுகின்றது. வயலைக் கொடிகளை வேகமாக காற்றடித்துச் சிதைக்கிறது. இது,

புறல்புறந் தந்த புனிற்றுவயிர் பைங்காய்
வயலைச் செங்கொடி (ஐங்., 25:1–2)

எனக் கூறுப்பட்டள்ளது. நண்டு வளர்ந்திருந்த வயலைக் கொடியை நண்டுகள் அறுத்த செய்தி,

கள்வன்
வள்ளை மென்கால் அறுக்கும் (ஐங்., 26:1–2)

எனச் சுட்டப்படுகின்றது. தாழைச் செடிகள் அழிக்கப்பட்டமை மிகுதியாகச் சொல்லப்பட்டுள்ளது. கடல் அலைகள் வேகமாக வந்து மோதுதலால் தாழைச் செடிகள் சிதைவுற்றன என்பது நற்றிணை (20:1–2), ஐங்குறுநூறு (163:6–8) என்றும் பகுதிகளில் கூறப்பட்டுள்ளது. மேலும் இரவு முழுதும் தாழைகள் அலைகளால் மோதப்பட்டன என்றும் குறுந்தொகை கூறுகிறது (226), கடற்சுழியில் தண்ணீர் போய்ச் சேருங்கால் வளைந்தும், பின்னர் நிமிர்ந்தும் அல்லற்படுவதுமாகத் தாழைச் செடி இருக்கிறது என்றும் கூறுப்பட்டுள்ளது (குறு., 340).

2.2. தாவரங்களைப் பாதுகாத்தல்

தாவரங்களுக்கு அழிவு வராமல் பாதுகாப்பது பண்டைத் தமிழரின் உயிரன்புக் கொள்கைகளுள் ஒன்றாக இருந்தது. மழை, புயல், வெள்ளம், விலங்குகள் போன்றவற்றாலும் வெய்யில் முதலியவற்றாலும் தாவரங்களுக்கு இன்னல் நேர்ந்ததாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இத்தகைய இன்னல்களிலிருந்து அவற்றைக் காப்பாற்றுவதற்கான முயற்சிகளில் மக்கள்

ஈடுபட்டனர் என்பதையும் சங்க இலக்கியங்களில் வழி அறியமுடிகிறது. மனிதர்களே தம் தேவை கருதி அழிக்க முயன்றக்கால் அதனையும் தடுத்துள்ளனர். பெரியவர்களேயன்றிச் சிறுவர்களுக்கும் பெண்களுக்கும் கூட இத்தகைய பண்புகள் இருந்ததை அறிய முடிகிறது. இவை பாதுகாத்தல் முயற்சிகளெனினும் உயிரன்பு என்னும் சிந்தனையின் பாற்பட்டதாகும்.

பத்துப்பாட்டு எட்டுத்தொகை என்னும் இருபிரிவுகளுள் எட்டுத்தொகையில் இக்கருத்துகள் மிகுந்து காணப்படுகின்றன. உணவாகவும் மருந்தாகவும் தாவரங்கள் போற்றப்பட்டுப் பாதுகாக்கப்பட்டன. மலர், மரம், செடி, கொடிகள் பயிர் வகைகள் எனப் பலவும் பாதுகாக்கப்பட்டன. பயன்தரும் விளைபயிர்கள் வேலி அடைக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டன. மரங்களில் சில உயர்வாகக் கருதப்பட்டன. காவல் மரங்கள் பாதுகாக்கப்பட்டன. மணம் தரும் மலர்களை மக்கள் இல்லத்திலேயே வளர்த்து வந்தனர். தாவரங்களை மனித சமூக உறவினுள் அடக்கியும் போற்றியும் வந்ததைக் காணமுடிகிறது.

### 2.2.1. மலர் பாதுகாப்பு

மலர்களுள் குவளை, நெய்தல், முல்லை, தாமரை, வேங்கை போன்றவற்றை மக்கள் பாதுகாத்த முறைகளைச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. இப்பாதுகாப்பு அவற்றைப் பயன்படுத்தும் நோக்கிலும் சிறப்புத் தன்மை அடிப்படையிலும் மேற்கொள்ளப்பட்டிருந்தது. நற்றிணையில் குவளை மலர் பற்றிக் கூறப்படும் செய்தி எண்ணத்தக்கது. முருகனுக்குப் படையல் செய்வதற்காகப் பாதுகாக்கப்பட்ட பூக்களைப் பிறர் கொய்யாமல் காத்தனர்.

> கடவுள் கற்சுனை அடைவிறந் தவிழ்ந்த
> பறியாக் குவளை மலரொடு காந்தள்
> குருதி ஒண்பூ உறழக் கட்டி... (நற்., 34:1–5)

என்பதனுள் கொய்யாக் குவளை என்பது இதனைக் குறித்தது. இம்மலர் வளர்ந்த நீர்ச் சுனையும் கடவுள் கற்சுனை எனச் சுட்டப்பட்டது.

நெய்தல் மலர் தனிச்சிறப்புடையது. அழகும் மணமும் கொண்டது. இது கடற்கரைக் கானலிடத்தும் வயற்புறத்திலும் விளைந்து பூக்கக் கூடியது. இவ்வாறு வயல்களில் பூத்திருந்த இம்மலர்களை உழவர்கள் அறுவடைக் காலத்தில் பூக்கள் அறுபடாமல் நெற்கதிர்களை அரிந்தனர் என நற்றிணை குறிப்பிடுகிறது. அவை வாள் முனைப்பட்டுச் சிதையாமல் ஒதுக்கிவிடப்பட்டன.

> தண்ணறு நெய்தல் தளையெனில் வான்பூ
> வெண்ணெ லரிநர் மாற்றின ரறுக்கும்
> எல்லம் புலம்பன் மன்றஎம்
> பல்லித முண்கண் பனிசெய் தோனே (ஐங்., 190)

என்ற பாடலில் 'வெண்ணெல் அரிநர் மாற்றினர்' என்பது உழவர்தம் இரக்கக் குணத்தைக் காட்டுகிறது. இதற்கு உரை வகுத்த பொ.வே.சோமசுந்தரனார் அரிவோற் நெய்தற் பூவை நீக்கி வெண்ணெல் அரியும் என்றது தனக்கு அடுத்தது செய்தலன்றிப் பிறர்க்கு வருத்தஞ்செய் யானெனத் தலைமகன் குணங்கூறிய வாறு[55] என்றார்.

முல்லை மலரை வீட்டுத் தோட்டத்தில் பாதுகாப்புடன் வளர்த்தனர். தோட்டத்தின் கண்ணுள்ள நொச்சி மரத்தில் முல்லைக் கொடி படர்ந்து பூத்தது. இதனை,

> மனைஇள நொச்சி மௌவல் வால்முளை (அக., 21:1)

என அகநானூறு குறிப்பிடுகிறது. மலர் வளரும் சோலைகள் மிகுந்த பாதுகாப்புடன் இருந்தன. இத்தகைய சோலை கடிகா என்றழைக்கப்பட்டது. நம்பி நெடுஞ்செழியன் என்ற மன்னன் இத்தகைய சோலையில் பூத்த மலர்களை மாலையாக்கி அணிந்தனன் என்று சொல்லப்படுகிறது.

> கடிகாவின் பூச்சூடினான் (புற., 239:2)

என்பது பாடலடியாகும். காவலுடைய சோலையும் அதன் கண் மலர்ந்த மலர்களும் என்பது பொருள். படர்வதற்கிடமன்றி வழியிடத்தே தவித்த முல்லை மலர்க்குத்

தம் தேரைக் கொடுத்த பாரியின் செயலும் அக்கொடியின் மீது அவன் கொண்ட இரக்கமேயாம்.

ஊருடன் இரவ லக்கருளித் தேருடன்

முல்லைக் கீந்த செல்லா நல்லிசை

படுமணி யானைப் பறம்பிற் கோமான்

நெடுமாப் பாரி (புற., 201:2–5)

என்பது புறம். இதன் கண் பாரி முல்லைக் கொடிக்குத் தேரீந்து அக்கொடியைப் பாதுகாத்தமை வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இறைவனுக்கென்று முல்லை மலர் தனித்து வளர்க்கப்பட்டது போலத் தாமரை மலரும் தனியே வளர்த்துப் பாதுகாக்கப்பட்டது. தாமரையைக் கடவுள் ஒண்பூ என்கிறார் புலவர்.

கடவுள் ஒண்பூ அடைதல் ஓம்பி (பெரும்பா., 290)

என்பது பெரும்பாணாற்றுப்படை. வேல மரங்களின் பூவை ஊர்மன்றத்தில் பாதுகாத்தனர்.

## 2.2.2. மரம் பாதுகாப்பு

மரங்களைப் போற்றிப் பாதுகாத்த தமிழர்களின் வாழ்வு இயற்கையோடு இயைந்ததாகும். சங்க இலக்கியங்களின் கொள்கைகளை வகுத்தோரும் சங்க இலக்கியக் கொள்கை இயற்கைக் கொள்கை என்பர். பழந்தமிழ் இலக்கியங்களில் மரத்தின்பால் மிகுந்த அன்பும் பொறுப்பும் கொண்டு மக்கள் அவற்றைப் பாதுகாத்த நிகழ்வுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. கனிதரும் மரங்களும் நிழலளிக்கும் மரங்களும் தெய்வம் போலப் போற்றி வணங்கியனவும் காவல் மரங்களும் மிகுதியும் பாதுகாக்கப் பெற்றன. மன்றத்தில் வளர்க்கப்பட்டுப் பூவை உடைய வேங்கை மரத்தில் சிறுவர்கள் ஏறி மலர் பறிக்காமலும் மரத்திற்கு இடையூறு செய்யாமலும் இருந்தனர்.

கன்றாற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்

மன்ற வேங்கை மலர்பத நோக்கி

ஏறா திட்ட ஏமப் பூசல் (குறு., 241:3–5)

என்பது பாடல். சிறுவர்கள் இதில் ஏறாதிருந்தமை பற்றி உரையாசிரியர் மன்றமர்தல் தெய்வ முறைதலின் ஏறாராயினர் என்க[56] என உரைத்தனர்.

உன்னமரம் நிமித்தம் காட்டும் என்பதால் மக்கள் அதனைப் பாதுகாத்தனர் என்று கூறப்படுகிறது. ஒரு சமயத்தில் காற்றுப் போன்றவற்றால் உன்ன மரம் சாய அதனைக் கண்டு மக்கள் அஞ்சியுள்ளனர். பதிற்றுப்பத்து,

சுடர்வீ வாகைக் கடிமுதல் தடிந்த
தார்மிகு மைந்தின் நார்முடிச் சேரல்
புன்கால் உன்னம் சாயத் தெண்கள்
தான்தர உண்ட நனைநறவு மகிழ்ந்த (பதிற்., 40:15–19)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. உன்னம் உருவ மரம். இது வேந்தர்க்கு ஆக்கம் உண்டாயின் முன்பே நற்குறியாகக் குழைந்து காட்டும் என்றும், கேடு விளைவதாயின் தீக்குறியாகக் காட்டும் என்றும் கூறுப. இந்நார்முடிச் சேரல் உன்னம் கரிந்து காட்டிய வழியும் பகைவர் மேற்சென்று போர் தொடுத்தான் என்கிறார் உரையாசிரியர். உன்ன மரத்தின் மீதும் அதனால் வருந்தும் மக்கள் மீதும் இரக்கம் கொண்டதாக இப்பாடற் கருத்து அமைந்துள்ளது. மரங்களைப் பொருத்த வரையில் மிகுந்த பாதுகாப்பிற்குரியனவாக இருந்துள்ளன. வேங்கை மரங்களுக்குப் பழங்காலத்தில் சமூக மதிப்பிருந்தது. வேங்கை பூத்தமை நற்சகுனமாக எண்ணப்பட்டது. திருமண வயதிலுள்ள பெண்களுக்குத் திருமணம் நடைபெறும் நற்சகுனத்தைக் குறித்ததாக வேங்கை பூத்தல் கருதப்பட்டது. அம்மரத்தையும் மக்கள் போற்றிப் பாதுகாத்து வந்தனர். ஊரின் நடுவில் இருந்த மன்றத்திலும் வீட்டு முற்றத்திலும் இம்மரங்கள் இருந்தன.

வேங்கை முன்றிற் குரவை அயரும் (புறம்., 129:3)

எனப் புறநானூறு கூறுகிறது. வீட்டு முற்றத்திலேயே மக்கள் இம்மரத்தை வளர்த்து அதன் நிழற் பகுதியில் குரவைக் கூத்து நிகழ்த்தினர். இது பரிவுணர்ச்சியுடன் மரங்களை வளர்க்கும் தன்மையைச் சுட்டும்.

**2.2.3. பயிர்ப் பாதுகாப்பு**

பயிர் வகைகளுள் நெல் பாதுகாப்புடன் வளர்க்கப்பட்டுள்ளது. உழவுத் தொழில் வளர்ச்சியடைந்த காலகட்டத்தில் மற்றப் பயிர்களைக் காட்டிலும் நெற்பயிரே முதன்மையாகப் போற்றப்பட்டது.

> நெல்லும் உயிரன்றே
> நீரும் உயிரன்றே
> மன்னன் உயிர்த்தே
> மலர்தலை உலகம்[57]

புறப்பாடலில் சுட்டப்பெறும் உம்மை நெற்பயிரின் தேவையையும் உயர்வையும் காட்டுவதாகும்.

> நெல்லுக்குத்துப் பரவும் கடவுளுமில்லை (புற., 335:12)

எனக் கூறப்படுவது நெல்லைக் கொண்டு இறைவனுக்குப் படையல் செய்தமைக்கு எடுத்துக்காட்டாகும். இது இப்பயிரின் பயனைக் குறிப்பிடும் ஒன்றாகும்.

> நெல்விளை கழனி படுபுள் ஓம்புநர் (புற., 29:13)

என்பது பயிர் பாதுகாப்பிற்குகந்த சான்றாகும். பறவைகள் நெல் வளைந்த வயல்களுள் புகுந்து நெல் மணிகளைக் கொத்தித் தின்றழிக்கும். அதனால் பறவைகளை விரட்டி நெற்பயிரைக் காத்தனர் உழவர் என்பதை அறியமுடிகிறது.

**2.2.4. செடி கொடிகள் பாதுகாப்பு**

செடி கொடிகள் பகுதியில் முல்லைக் கொடியைப் பாதுகாத்தல் இடம் பெற்றுள்ளது. முல்லைக்கொடிகள் மணமுடைய மலர்களைத் தருவதுடன் அம்மலர்கள் மக்கள் வாழ்க்கையில் நற்காரியங்களுக்கும் பயன்பட்டன. முல்லைப் பூவை அணியும் பெண்கள் மணமானவர்களாக இருந்தனர். இந்தக் கொடியின் மீது அனைத்துத் தரப்பு மக்களும் அன்பும் பரிவும் கொண்டிருந்தனர். பக்கத்திலுள்ள மரங்களைப் பற்றிக் கிளைகளில் பூக்களைப் பூக்கும் இயல்புடையது இது. தரையில் பரந்து கிடந்து மலர்களைப் பூக்கச் செய்வதுமுண்டு.

அவ்வாறு முல்லைக் கொடி ஒன்று பற்றி மலர்வதற்குக் கொழுகொம்பில்லாத நிலையில் தரையில் படர்ந்து கிடக்க, அவ்வழியே தேரில் சென்ற பாரி என்ற மன்னன் அதனைக் கண்டு மனம் இரங்கித் தன் தேரையே அங்கே நிறுத்தி அதன் மீது அக்கொடியும் படரச் செய்தான் என்பது வழிவழியாகச் சொல்லப்பட்டு வரும் செய்தி. இதனை,

> சீறுவீ டறைக்கும் நாம நெடுவிழி
> நறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
> பிறங்கு வெள்ளருவி வீழும் சாரல்
> பறம்பின் கோன் பாரியும் (சிறுபாண்., 90–94)

எனக் கூறுகிறார் புலவர். இது இரக்க உணர்வைக் காட்டுவதாகும். முல்லைக் கொடி மென்மையானது. மழையோ காற்றோ கடுமையாக அதனைத் தாக்காது மக்கள் காத்து வந்தனர். இதனை,

> பெயல் பறந்தந்த பூங்கொடி முல்லை (குறு., 126:3)

எனக் குறுந்தொகை குறிப்பிடுகின்றது. இது மழையிலிருந்து முல்லைக் கொடியைக் காத்திட மக்கள் முயன்றதைச் சுட்டும்.

### <u>2.3. தாவரங்களின் பயன் கூறல்</u>

பண்டைத் தமிழ் மக்கள் தாவரங்கள் மீது அன்பு வைத்திருந்தனர் என்பதற்கு அடையாளமாக அவற்றின் பயன்களை எடுத்துக் கூறியுள்ளனர். மக்கள் வாழ்க்கையில் தாவரங்கள் பல்வேறு சூழல்களில் பயன்பட்டுள்ளன. அவை வாழ்க்கையின் அடிப்படைப் பொருளாகவும் இருந்தன. இயல்பாகவே அன்புடைய மக்கள் மிகுந்திருந்த பண்டைத் தமிழகத்தில் தாவரங்களின் பயனை உணர்ந்தும் அவற்றைப் போற்றியும் வாழ்ந்த சூழ்நிலையைக் காண முடிகிறது. பயன் என்பது உணவு, மருந்து போன்ற பொருட்களைத் தாவரங்கள் தந்துதவுவதாகும். மேலும் நிழல் தருவது

நீரைத் தருவது, மழையைத் தருவது முதலான பயன்பாடுகளோடு ஊருக்கும் நிலங்களுக்கும் பாதுகாப்பாக இருப்பது போன்றவற்றையும் பயன் என்றே கூறலாம்.

அன்பகத் தில்லா உயிர் வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று[58] (குறள் 78)

என்பது வற்றிப் போன மரம் தளிர்க்காது என்பது மட்டுமன்றிப் பயனும் தராது என்பதாம். இதுபோலத் தாவரங்களும் தாவர இனங்களும் பயன்படுவனவும் பயன்படாது வறிதேவுள்ளனவும் சங்க இலக்கியங்களில் குறிக்கப்படுகின்றன. இப்பகுதியில் மலர், மரம், பயிர், செடிகொடிகள் ஆகியவற்றின் பயன்கள் பற்றி ஆராயப்படுகின்றது.

### 2.3.1. மலர்ப் பயன்பாடு

ஊர்ப்புறங்களிலும் வீடுகளிலும் நடக்கும் நற்காரியங்களுக்கு மலர்களைக் கொண்டு வந்து அலங்கரித்தனர். வீட்டு முற்றத்தில் சுற்றிலும் மலர்கள் கட்டப்பட்டிருந்தன எனக் கூறப்படுகிறது.

அறவை நெஞ்சத் தாயர் பறவை நெஞ்சத் தாய்இலளர்
அரும்பலர் செருந்தி நெடுங்கண் மலர்கமழ்
விழவணி வியன்கள மன்ன முற்றத்து
ஆர்வலர் குறுகி னல்லது காவலர்
கனவிலும் குறுகாக் கடியிடை வியனகர் (புற., 390:1–5)

எனப் புறநானூறு குறிப்பிடுகின்றது. மலர்களைப் போற்றும் மனிதப் பண்பாக இதனைக் கொள்ளல் வேண்டும். வேங்கைப் பூக்கள் முற்றத்தில் சிதறிக் கிடந்து அழகூட்டின. (நற்., 232).

பெண்கள் மலர்களைச் சூட்டிக் கொள்வது தமிழர் மரபு. உலகில் பல இடங்களிலும் இவ்வழக்கம் காணப்படுகிறது. மேலைத் தேயங்களில் மலர்களைக் கொண்டு மணப் பொருள்களை உற்பத்தி செய்கின்றனர். பழந்தமிழர் வாழ்விலும்

மலர்கள், சந்தனம் போன்ற பொருட்களும் மணப் பொருள்களை உருவாக்கப் பயன்பட்டன. கொண்டான் உவக்கச் சத்தி சாந்தரைக்கும்[59] என வருந்தொடர் போல்வன மணச்சாந்தைக் குறிப்பன எனலாம். இது போல மலர்கள் நறுமணப் பொருட்களாகவும் மங்கலப் பொருட்களாகவும் பண்டை நாளில் பயன்பட்டதைத் தமிழ் இலக்கியங்களில் காணமுடிகிறது.

பார்ப்பன மகளிர் சார்ப்புறத் தணியக்
கல்சுடர் சேரும் கதர்மாய் மாலை (நற்., 321:4–5)

என்ற தொடரில் பார்ப்பனப் பெண்கள் மாலைப் பொழுதில் முல்லை மலர்களைச் சூடிக் கொண்டனர் எனக் கூறப்படுகிறது. செண்பக மலரினை மாலையாகக் கட்டி ஆண்கள் அணிந்து கொண்டனர் என்பதும் அறியத்தக்கது. இது,

மாரிப் பித்திகத் தீரிதழ் அலரி
நறுங்காழ் ஆரமொடு தடைந்த மார்பு (நற்., 314:3–4)

எனப் பாடப்பெற்றுள்ளது. வெட்சிப் பூக்களைப் பெண்கள் அணிந்தனர்.

மயிலைக் கண்ணிப் பெருந்தோட் குறுமகள் (புற., 42:2) என்பது புறம். இதுபோல் பனங்குருத்து மாலையும் வேப்பம்பூ மாலையும் ஆடவர்களால் அணியப்பெற்றன.

வெண்மணற் பொதுளிய பைங்கால் கொக்கின்
கொம்பைப் போந்தைக் குடுமி வெண்தோட்டு
அத்த அவம்பின் அமலை வான்பூச்
சுரிஆர் உளைத்தலை பொலியச் சூடி (குறு., 281:1–4)

என்பது குறுந்தொகை. பனம்பூ சேரமன்னர்களின் அடையாளமாகக் கருதப்பட்டது.[60] புறநானூற்றில்,

வேம்பும் ஆரும் போந்தையும் மூன்றும்
மலைந்த சென்னியர் (புற., 338:6–7)

என்பதும் ஆடவர்கள் – மன்னர்கள் – மூவேந்தர்கள் முறையே வேம்பு, ஆத்தி, பனம்பூ ஆகியவற்றை அடையாளமாக அணிந்தமை உணர்த்தப்பட்டிருக்கிறது.

### 2.3.2. மரங்களின் பயன்காடு

மரங்களின் பயன்பாடுகள் மிகுதியாகும். தற்காலத்தில் மரவேலைப்பாடுகள் கொண்ட பொருட்கள் வீடுகளிலும் அலுவலகங்களிலும் பயன்படுகின்றன. தச்சுத் தொழில் நவீனக் கருவிகளைக் கொண்டு செய்யப்பெறுகின்றன. பழங்காலத்தில் வண்டிகள், தேர்கள் போல்வன மரத்தைக் கொண்டு வடிவமைக்கப்பட்டன. எண் தேர் செய்யும் தச்சன்[61] என்பது மரங்களைப் பயன்படுத்திப் பயன்படு பொருட்களைச் செய்யும் தொழில் நுட்பங்கள் பழந்தமிழகத்தில் பின்பற்றப்பட்டன என்பதற்குச் சான்றாகும். சிறுசிறு பொருள்களுள் விளையாட்டுப் பொருட்களும் உற்பத்தி செய்யப்பட்டமைக்கு இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. சிறுமாவையம்[62] பண்டி[63] போன்ற சொற்களும் இதனை உறுதி செய்வனவாகும். தினைப் புனங்களில் பயன்படுத்தப்பெற்ற பரண்[64], கவண் ஆகியவையும் இதனை உணர்த்தும். மரங்கள் நிழல்தரும் பொருளாகப் போற்றியும் சொல்லப்பட்டிருக்கின்றன. சங்க இலக்கியங்களில் காடுகள், சுரங்கள் ஆகியவற்றில் காணப்படும் மரங்கள் பற்றிய செய்திகள் மிகவும் பதிவாகியுள்ளன. மலர்களின் பயன்பாடுகளையடுத்து மரங்களின் பயன்பாடுகள் இங்கு விளக்கப்படுகின்றன.

நற்றிணையில் ஓமை, புன்னை, பனை மரம் குறுந்தொகையில் பனைமரம், அசோகமரம், ஆத்தி மரம், புறநானூற்றில் வேம்பு போன்ற பல மரங்களும் அவற்றின் பயன்பாடுகளும் சொல்லப்பட்டுள்ளன. மேலும் நிழல்தரும் மரங்கள் மருந்தாகப் பயன்படும் மரங்களும் கூறப்பட்டுள்ளன.

அசோக மரத்தினது தழைகளை மக்கள் உடையாக அணிந்திருந்தனர் (குறு., 214:3–4) ஆத்திமரம் சுவையான இலைகளைக் கொண்டதாக இருந்தது.

அது ஊர் மன்றில் வளர்க்கப்பட்டது (அக., 104:12) வழிச் செல்வோர் தங்கும் நிழலாக ஓமை மரம் இருப்பதை நற்றிணை கூறுகிறது.

அருவி யான்ற நீரில் நீளிடைக்
கயர்தலை மடப்பிடி இலங்குபசி களைஇயர்
பெருங்களிறு தொலைச்சிய முடத்தாள் ஓமை
வருஞ்சுரம் செல்வோர்க்கு அல்கநிழல் ஆகும்(நற்., 137:3–5)

என்பது அது. அல்குநிழல் ஆகும் என்பது ஓமை நிழல் தந்து பயன்பட்டது என்பதைக் குறிக்கும். நற்றிணையிலும் குறுந்தொகையிலும் பனைமரத்தின் பயன்பாடு கூறப்பட்டிருக்கிறது. ஊரின் நடுவே இருந்த பனைமரங்கள் இனிமையான கள்வடிய நின்றன (நற்., 323:1–2) என்றும் ஊர்ப் பொது மன்றருகே நின்ற பனைகளில் அன்றில் பறவைகள் கூடுகட்டின (குறு., 177:4–8) என்றும் கூறப்பட்டுள்ள செய்திகள் மக்களுக்குப் பயன்படும் வண்ணம் பனைகள் இருந்து மகிழ்வை உண்டாக்கின. மன்றப் பெண்ணையில் அன்றில்கள் கூடுகட்டியமையும் சொல்லப்பட்டுள்ளது (நற்., 203).

ஓங்கிடும் பெண்ணை நுங்கொடு பெயரும்
அதியமான் மூதூ ரன்ன (குறு., 293:3–4)

என்பது பனை நுங்குகளைத் தந்த பனை மரங்களைக் காட்டுகிறது. வௌவால்கள் கனிகளுக்காகவும் கூடுகளை அமைத்துத் தங்கவும் மரங்களை நாடிச்சென்றன. பழுத்த மரம் நாடி வௌவால்கள் ஒன்றின (குறு., 172:3) எனக் குறுந்தொகை பேசும். வீட்டு முற்றத்தில் புன்னை மரங்களை வளர்த்துப் போற்றினர். புன்னை மரங்கள் நறு நிழலையும் மணமுள்ள மலர்களையும் தருவதால் மக்கள் அவற்றைப் போற்றி வளர்த்தனர். சமூகத்தில் பெரிதும் விரும்பி வளர்க்கப்பட்டன. ஊர்ப் பொது மன்றத்தில் வேம்பு மரம் வளர்க்கப்பட்டது. அதன் பூக்களை மாலையாகக் கட்டி அணிந்தனர். காண்பதற்கு அழகாகத் தோன்றும் தன்மை கொண்டவை வேம்பு மலர்கள். சிறிய அளவில் மகரந்தத் தூள்கள் நிறைய இவை தோன்றும். பொதுவாக மரங்கள் நிழல் தருவன எனப் பேசப்படுவது இயல்பு. எப்போதும் நிழல்

தரும் மரங்களைப் புலவர்கள் புலவர் புகழ்ந்து கூறியுள்ளனர். மன்னரின் குடைநிழல் போலத் தண்ணென்ற மரநிழல் (நற்., 146:1–5) மரங்கள் மருந்துக்குப் பயன்பட்டதை நற்றிணை குறிக்கின்றது.

மரஞ்சா மருந்தும் கொள்ளார் மாந்தர்
உரஞ்சாச் செய்யார் (நற்., 226:1–2)

என்பது மருந்து மரத்தின் பயன்பாட்டை உணர்த்துவதாகும். ஆலமரம் தன்னை அடைந்த பறவைக்கு அடைக்கலம் தந்தமை ஐங்குறுநூற்றில் கூறப்பட்டடுள்ளது (ஐங்., 303:6–7).

### 2.3.3. பயிர்களின் பயன் கூறல்

விளைபொருள்கள் பயிர்வகைகளுள் அடங்கும். பழந்தமிழகத்தில் நெல், வரகு, தினை போன்ற தானியங்கள் விளைவிக்கப்பட்டன. இவை உணவுப் பொருள்களாகக் கொள்ளப்பட்டன. உணவுப் பொருட்களை மையமாகக் கொண்டு அரசு நிதியமைப்புக் கட்டமைக்கப்பட்டது. நெல் முதலிய விளைபொருட்களுக்கு வரியும் விதிக்கப்பட்டன. உழவுத் தொழிலைச் செய்வோர் பெரிதாக மதிக்கப்பட்டனர். ஒரேழ் உழவர்[66] என்பது உழவுத் தொழிலின் தேவையை உணர்த்துகின்றது. உழுவார் உலகத்திற்காணி என்றும் இதன் முக்கியத்துவம் உணர்த்தப்பட்டது. நிலங்கள், நன்செய் நிலம், புன்செய் நிலம் என இருவகையாகப் பிரிக்கப்பட்டது. இவ்விரு நிலங்களிலும் விளையும் பொருள்களைக் கொண்டு அந்நிலத்தின் தன்மைகள் அறியப்பட்டன. மா, பலா, வாழை போன்றவையும் மூங்கில், அகில் போன்றவையும் அவற்றிற்குரிய தனித்தனி நிலங்களில் விளைந்தன. மிகுந்த உடல் உழைப்பை உழவர்கள் அத்தொழிலுக்குத் தர வேண்டியிருந்தது. நில உடைமையாளர்கள் உழவுத் தொழில் செய்யும் உழைப்பாளர்களைப் பெரிதும் பாதுகாத்து வந்தனர். நெல் போன்ற பயிர்களை மக்கள் வெகுவாகப் போற்றினர். அவற்றின் பயன்பாட்டைச் சங்கப் பாடல்கள் எடுத்தியம்புகின்றன. உணவுக்காகப் பயன்பட்டு உயிர்வாழ வழி செய்யும் உணவுப் பொருளின் பயனைக் கூறுவது அப்பயிர்கள் மீது மக்கள் கொண்டிருந்த

பற்றுதலைக் காட்டுகிறது. உழவுத்தொழிலைத் தொடங்கும்போதும் அறுவடைக் காலங்களிலும் இறைவனுக்குப் படையல் செய்ததைச் சங்கத் தமிழர்கள் வழக்கமாகக் கொண்டிருந்தனர். இன்றும் அவ்வழக்கம் தொடர்வதைக் காணமுடிகிறது.

புளி புளிப்புச் சுவையுடைய பொருள். இதன் காய்களையும், பழங்களையும் மக்கள் பயன்படுத்தி வருகின்றனர். பசியுடன் இருக்கும் சிறார்கள் புளியங்காய்களைத் தின்று பசி போக்கினர் என்று நற்றிணை கூறுகின்றது. புளி உணவுடன் கலந்து சமைத்து உண்பதற்குப் பயன்படும். புளிஞ்சோறு, புளிங்கூழ்[67] என்னும் சொற்கள் தொல்காப்பிய உரைகளில் எடுத்தாளப்பட்டுள்ளன. புளிய மரத்தின் பட்டையும் இலையும் மருத்துவக் குணமுடையவை எனச் சித்த மருத்துவ நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

முரம்புதலை மணந்த நிரம்பா இயவின்
ஓங்கித் தோன்றும் உமண்பொலி சிறுகுடிக்
களரிப் புளியின் காய்ப்பசி பெயர்ப்ப (நற்., 37:1–3)

என்று நற்றிணை பகர்கிறது. புளி களர் நிலத்திலே விளையக் கூடியது என்ற குறிப்பும் இதன் கண் குறிப்பிடப்பட்டுள்ளது. வான் பூங் கரும்பு (குறு., 149:3) என்று பயன்படும் பருவம் எய்திய கரும்பு சொல்லப்படுகிறது. வளைகதிர் வல்சி (புற., 190:1–2) எனப் புறநானூறு நெல்லரிசியைக் குறிக்கிறது. வரகு, தினை போன்ற தானியங்களை நன்கு விளைவித்திருந்த உழவர், பசித்து வரும் இரவலர்க்கு வழங்கினர்.

வாடும் தியையும் உள்ளவை யெல்லாம்
இரவல் மாக்கட்கு ஈயத் தொலைந்தன (புற., 328:3–4)

என்பது புறம். இரவலர்க்குக் கொடுத்துத் தீர்ந்தன என்பது இப்பொருள்களின் பயனைக் குறித்தது.

பருத்தவேலிச் சீறூர் மன்னன்

உழுத்ததர் உண்ட ஓய்நடைப் புரவி (புற., 299:2–3)

உழுந்தின் சக்கையினைக் குதிரை உண்ணக் கொடுத்ததையும் அதை உண்ட குதிரை உடல் வலிமை பெற்றதென்பதையும் குறிக்கிறது. பசும்பயறு தூற்றியெடுத்தபின் அதன் கோதுகையைத் தரையில் போட்டு அதனை எருமைகளுக்குப் படுக்கையாகப் பயன்படுத்தினர் என்று புறநானூறு குறிக்கிறது (புற., 297:1–2).

## 2.3.4. கனிகள் பயன்பாடு

உண்ணப் பயன்படும் பல்வேறு கனிகள் சங்கப் பாடல்களில் பதிவாகியுள்ளன. குறிப்பாக மா, பலா, வாழைக் கனிகள் சிறப்பிடம் பெறுகின்றன. இவை ஒவ்வொரு நிலத்தினுள் உள்ள கருப்பொருள்களாகவும் சுட்டப்பட்டுள்ளன. இலக்கியப் புனைவுகளுக்குப் பயன்படுவதுடன் மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படு பொருள்களாகவும் இவை இருக்கின்றன. வாழை போன்றவை பிற்காலத்தில் பூசைப் பொருள்களாகவும் பயன்பட்டன. மலைகளில் மிகுந்திருந்த பலாக்கனிகள் குரங்குகள் முதலிய விலங்குகட்கு இன்றியமையாத உணவுப் பொருளாயிற்று இக்கனிகளின் இனிய சுவை வியந்து கூறப்பட்டுள்ளது. கனிகளை நேரடி உணவாகப் பயன்படுத்துதலேயன்றிப் பிற உணவுப் பொருள்கள் தயாரிக்கும் போதும் இவற்றைப் பயன்படுத்தி வந்தனர்.

நற்றிணை, புறநானூறு போன்ற இலக்கியங்களில் பலாக்கனியை மக்கள் பயன்படுத்திய முறை கூறப்பட்டுள்ளது. முக்கிய உணவாக இது பயன்பட்டதாதலின் இதனை உயர்வாகப் போற்றினர். இவற்றின் உயர்வுக்குரிய அடைமொழிகளையும் தந்து புலவர்கள் பாடியுள்ளனர். மக்கள் பயன்படுத்தியது போல விலங்குகள் பயன்படுத்தியதை நற்றிணை,

சிறுகண் யானைப் பெருங்கை ஈரினம்

குளவி தண்கயம் குழையத் தீண்டிச்

சோலை வாழை முனைஇ அயலது

வேரல் வேலிச் சிறுகுடி அலரச்

செங்காற் பலவின் தீம்பழம் மிசையும் (நற்., 232:1–5)

எனக் கூறுகின்றது. செங்காற் பலவின் என்றது செம்மை மிகுந்த பலா எனக் கனிச் சிறப்பை உணர்த்திற்று இங்கு மிசைதல் என்பது உண்ணுதல் என்ற பொருளைத் தரும், மலைவாழையினை வெறுத்துச் செம்பலாக் கனியை உண்டது எனக் கூறப்பட்டது எண்ணத்தக்கது. வேலியால் பாதுகாக்கப்பட்ட சிறுகுடில்களில் வளர்க்கப்பெற்ற பலா எனக் கூறப்பட்டமை மக்கள் இக்கனியைப் பெரிதாகப் போற்றியதை விளக்கிற்று.[68] மக்கள் பலா மரத்தினைத் தம் வீட்டு முற்றத்திலே வளர்த்தனர் முன்றிற் பலவின் படுசுளை (நற்., 373:1) என்கிறது இந்நூல். பலாமரத்தில் பலவிதக் கொடிகள் படர்ந்து கிடக்கும். அவை பந்தல் போலக் காட்சி தர அவற்றிடையே பலாக்கனிகள் தொங்கும் (புற., 8:1–2) எனப் புறநானூறு கூறுகிறது. மலை வாழைக்கனிகள் மிகச் சுவையுடையவை. அவற்றை யானைகள் விரும்பியுண்ணாது பக்கத்தில் கண்ட பலாக்கனிகளை நோக்கிச் சென்றன என்பது பலாக் கனிகள் இல்லாதவிடத்து வாழைக்கனிகள் விலங்குகளுக்குப் பயன்படுவன என்பது பொருள் (நற்., 232:3).

நெல்லிக்கனிச் சுவை சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது. வழிச் செல்வோர், விழியில் சிதறிக் கிடக்கும் நெல்லிக் காய்களைத் தின்று நீரருந்தினர் (நற்.,271:57) மேலும் நெல்லியை அறந்தலைப்பட்ட நெல்லி (குறு., 209) எனக் கூறி வழிச்செல்வோரின் நீர்வேட்கையைத் தணித்தது எனக் கூறப்படுவது எண்ணத்தக்கது. இன்சுவை மாவுடன் பால் கலந்தது போன்ற சுவை என மாங்கனியின் சுவையறிந்து கூறப்பட்டுள்ளது. பால் கலப்பன்ன தேக்கொக்கு (குறு., 201) என்பது குறுந்தொகை. கொக்கு – மாமரம் ஓங்குசினை மாவின் தீங்கனி நறும்புள்ளி (புற., 399:4) என்பது மாங்கனியைக் கொண்டு உருவாக்கிய

புளிக்குழம்பை மக்கள் பயன்படுத்தியதை உணர்த்தும். அத்திப்பழம் பயன்பட்டதைப் புறநானூறு பேசும் (புற., 399:3–4).

## 2.4. தாவரங்களைப் புகழ்தலும் போற்றலும்

தாவரங்களைப் புகழ்தலும் போற்றலும் தனித்தன்மை கொண்டவை. பயன்களைக் கூறிப் போற்றியும் இலக்கியச் சிறப்பிற்காகப் புகழ்தலும் அடிப்படைகளாய்ச் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. இயற்கை கவிஞனுக்கு உள்ளெழுச்சி ஊட்டுகிறது. தாமரை, நெய்தல், முல்லை போன்ற மலர்கள் மிகவும் போற்றப்படுகின்றன. பிற மலர்கள் புகழப்படுகின்றன. இதுபோலவே மரங்களின் சிறப்புகளும் பழந்தமிழ் இலக்கியங்களில் புகழ்ச்சிக்குரியனவாய்த் தோன்றுகின்றன. பழங்களின் தன்மையைப் புகழும் பாடல்களும் பயிர்வகைகளை உயர்த்திக் கூறும் முறையும் பழந்தமிழ்ப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. மலர்களைப் பெண்களுடன் ஒப்பிட்டுப் புகழும் முறை சங்க கால இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. பெண்களின் முகம், கை, அடி போன்ற உறுப்புகளுக்கு உவமையாக மலர்கள் கூறப்பட்டுள்ளன. உவமைகளைப் பற்றி இலக்கணம் வகுத்த தொல்காப்பியர்,

> வினைபயன் மெய்யுரு என நான்கே
> வகைபெற வந்த உவமத் தோற்றம்[70]

என்று உவமையை வகைப்படுத்துகிறார். இந்நால்வகை உவமைகளுள் மலர்கள் உரு (பண்பு) உவமைக்கே மலர்கள் மிகுதியும் இடம் பெற்றுள்ளன. காந்தள் மலர் நிறத்திற்கும்[71] தாமரை மலர் தன்மைக்கும்[72] உவமைகளாயின . மலர்கள் மீது மக்கள் கொண்டுள்ள பற்றினால் மங்கலக் காரியங்களுக்கு மலர்கள் பயன்படும்போது போற்றிக் கூறப்பட்டன. பின்னாட்களில் மலர்களின் வழி மருந்துகளையும் நறுமணப் பொருள்களையும் தயாரித்தனர். தற்காலத்தில் உலகெங்கினும் மலர்களின் பயன்பாடு பெரிதாகக் கருதப்படுகிறது.

தமிழ் இலக்கியங்களைத் தொடங்கும் போது குறிப்பிட்ட சில சொற்களைக் கொண்டே தொடங்க வேண்டும் என்ற மரபு காணப்படுகிறது. அத்தகைய சொற்களில் மலர் குறிப்பிடத்தக்க சொல்லாகும். அதனால் மலர்தலை உலகம் எனத் தொடங்குவதைக் காணலாம். சங்க இலக்கியங்களில் மலர்கள் பற்றிய பதிவுகளில் மலர்களைப் போற்றிப் பாடப்படும் முறை காணப்படுகிறது. இது மக்கள் மலர்கள் மீது கொண்டுள்ள அன்பினையும் பற்றுதலையும் உணர்த்துகின்றது.

**2.4.1. மலர்கள்**

மலர்களைப் புகழ்தல் என்ற நிலையில் அவற்றின் தனித்தன்மைகளை எடுத்துரைக்கும் முகத்தான், அரும்பு, ஆத்தி, ஆம்பல், ஆவிரை, குரவு, குருந்தம், கொன்றை, தளவு, தாமரை, முல்லை போன்ற மலர்கள் புகழ்ந்துரைக்கப்படுகின்றன. இவை பழந்தமிழர் வாழ்வில் பெற்ற சிறப்பிடத்தை விளக்குவனவாயுள்ளன. அரும்புகளாய் இருந்தன என்று கொன்றை மலர்கள் சுட்டப்பட்டுள்ளன. பொற்காசு போன்ற கொன்றை மலர் அரும்பு (குறு., 148:2) என இது குறிக்கப்பெற்றுள்ளது. கண்ணார் கண்ணி கரிகால்வளவன் (பொருந., 148) என்று கரிகால் வளவன் அணிந்த ஆத்திமாலை கூறப்படுகிறது. ஆத்தி மாலை அரச சின்னமாக வழங்கினமை உணர்த்தப்படுகிறது. பொன்னேர் ஆவிரை (குறு.,173) என்பது கொன்றை மலரும் ஆவிரையும் நிறத்தில் பொன்னையொத்தன என்பதைப் புலப்படுத்தும். ஆம்பல் என்பது அல்லி. இதன் கண்ணுள்ள விதைகள் அரிசி என அழைக்கப்படும். மக்கள் ஆம்பல் மலர்களைத் தழை போலப் பயன்படுத்தினர். பின்னர் அவற்றிலிருந்து அரிசியை எடுத்து உண்டனர். முதலில் தழையாய் உதவிய இம்மலர் பின்னர் அரிசி தந்து உதவிற்று எனப் புறநானூறு கூறும் (புற., 248:1–5). ஆம்பல் முதலிய பல மலர்களின் பெயர்கள் எண்களுக்குப் பயன்பட்டன. இவற்றின் இதழ்களின் எண்ணிக்கையைக் கொண்டு கணக்கிட்டனர். ஏந்தெழில் மலரத் தூம்புடைத் திரள்கால் ஆம்பல் (குறு., 178:2–3) என ஆம்பல் அழகு கூறப்பட்டது. ஆம்பல், தாமரை, நெய்தல் போல்வன இவ்வாறு கூறப்பட்டன (பரி., 2:13–15).

குரவே தளவே குருந்தே முல்லையென்

றிந்நான் கல்லது பூவு மில்லை (புற., 335:1–3)

என்பது தமிழர் பலர் பண்பாட்டில் இடம்பெற்றுள்ள மரபு வழி வந்த மலர்களைச் சுட்டுவதாகும். சமுதாயத்தில் பல மலர்கள் காணப்படினும் இதற்குக் குறிப்பிடப்பட்ட குரவு, தளவு, குருந்தம், முல்லை என்ற நான்கும் தமிழர்க்குரியன என்பதைச் சுட்டுகின்றது.

தார் விரி கொன்றை

தாரன் மாலையன் மலைந்த கண்ணியன் (அக.கட.)

என்பது இறைவன் கொன்றை மாலையை அணிந்திருந்தான் எனச் சுட்டுகிறது. இதனால் இம்மலர் ஏனையவற்றினின்றும் வேறுபட்டுச் சிறப்புற்றமை தெளிவாம். மலரை மக்கள் போற்றியதில் குறிப்பிடத்தக்கது இவ்வெடுத்துக்காட்டு. பொய்கைகளில் பல்வேறு மலர்கள் இடம்பெற்றிருப்பினும் தாமரை மலர்கள் இடம்பெற்றிருப்பினும் தாமரை மலர்கள் தோன்றுவதே சிறப்பாம்.

மலர்ந்த பொய்கை முகைந்த தாமரை (ஐங்., 6–7) என்பது அது. முல்லை மலர்கள் பழந்தமிழ் இலக்கியங்கள் முழுமையிலும் இடம் பெற்றிருப்பது எண்ணத்தக்கது. முல்லை வாழி (குறு., 162) என மலரை வாழ்த்திக் கூறப்பட்டுள்ளது. முகை முற்றினவே முல்லை (குறு., 188:1) எனப் பருவம் கூறப்பட்டது. மண் செழிப்பு உணர்த்தப்பட்டது. மணங்கமழ் முல்லை (குறு., 242) என நறுமணம் உயர்த்திக் கூறப்பட்டது. ஆடவர்கள் அணிந்த மலர்மாலை கண்ணி எனப்பட்டது. வண்டுபட ததைந்த கண்ணி (அக., 1:1) என்பது அகநானூறு.

**2.4.2. மரங்களைப் புகழ்தல்**

மரங்களைப் புகழ்ந்து அவற்றின் சிறப்புகளைப் புலவர்கள் உணர்ந்து பாடியுள்ளனர். மரங்களின் மீதுள்ள இரக்க உணர்வும் அன்பும் இதனால் வெளிப்படுகின்றன.

1. அரலை
2. ஆலமரம்
3. இலவம்
4. குரா
5. ஞாழல்
6. தென்னை
7. பலா
8. புன்னை
9. மா
10. வேம்பு
11. பொது

அரலை மரத்திற்கு மக்கள் மாலை சூட்டி மகிழ்ந்தனர். அசோகு, அரலை என்றும் இரு மரங்களுள் அசோகைத் தவிர்த்து அரலைக்குச் சிறப்புச் செய்தனர். இதனை,

> செயலை முழுமுதல் ஒழிய அயல
> தரலை மாலை சூட்டி
> ஏனுற் றன்றிவ் வழுங்க லூரே (குறு., 214:5–8)

என்றும் செய்யுளுணர்த்தும். ஆலமரம் கடவுள் சூலம் எனக் கடவுளுக்கு ஒப்பாகப் புனையப் பெற்றுள்ளமை காணலாம்.

கடவுளாலத்துத் தடவுச்சினைப் பல்பழம் (புற., 199:1) என வருமிடத்திற்குப் பொருந்தும். தீங்கனி இரவமொடு வேம்புமனைச் செரீஇ (புற., 281:1) என்பது வீட்டில் குரவமும் வேம்பும் வளர்க்கப்பட்டமையை உணர்த்தி மக்கள் தம்முடைமை

போல இம்மரங்களைப் போற்றியமை எய்தப்பட்டது. இலவ மரத்தின் தழையையும் வேம்பின் தழையையும் பேய் நெருங்காதிருக்க வீட்டின் முகப்பில் வளர்த்தனர் என்பதாம். கரா மரமும் புன்கமரமும் சோலையில் ஒரு சேர இருந்த காட்சியைப் புலவர் அழகுறப் பாடுகிறார் (குறு., 341:1–3) எக்கரிலுள்ள ஞாழற்கிளை கடல் அலைகளைத் தழுவி மகிழும் என்பதை,

எக்கர் ஞாழல் நறுமலர்ப் பெருஞ்சினைப்
புணரி திளைக்கும் துறைவன்
புணர்வி னின்னா னரும்புணர் வினனே (குறு., 150)

என்று ஐங்குறுநூறு கூறுகின்றது. கடல் அலைகளை மரங்கள் தழுவி மகிழும் என்பது தாவரங்கள் பால் கொண்ட உயர்மதிப்பைக் காட்டுகிறது.

தென்னை மரம் இளநீரைத் தருவது அதன் பயனாகவும் சிறப்பாகவும் சொல்லப்படுகிறது. பழந்தமிழ் இலக்கியமுதல் தென்னையைப் புகழ்வது மரபாக உள்ளது. தாளுண்ட நீரைத் தலையாலே தென்னை தருகிறது என்பது அறநூல் கூறுவது. தென்னை ஒரு நாட்டில் இருப்பது அந்த நாட்டின் வளத்தைக் காட்டுவதாகப் புறநானூறு கூறுகின்றது.

ஒழிமடல் விறகின் கழிமீன் சுட்டு
வெங்கள் தொலைச்சியும் அமையார் தெங்கின்
இளநீர் உதிர்க்கும் வளமிகு நன்னாடு
பெற்றனர் உவக்கும் நின் படைகொள் மாக்கள் (புற.,29:15–18)

என வரும் புறப்பாடலில் வீரர்களின் சிறப்பைக் கூறி நாட்டுச் சிறப்பை எடுத்துரைக்கிறது.

இச்செய்யுளில் சொல்லப்பட்ட ஏனைய வளங்களுடன் தென்னை வளமும் சொல்லப்படுவது தென்னையின் சிறப்பை உயர்விக்கும். பலாக்கனிகளை மக்களும் விலங்குகளும் உண்டு மகிழ்ந்ததாகச் சங்கச் செய்யுட்கள் பேசுகின்றன.

ஊர் மன்றத்தின் கண்ணே பலா வளர்க்கப்பட்டதும் அதன் மலர் உட்படப் பலவற்றைப் பயன்படுத்தியதையும் சிறப்பாகப் புலவர்கள் பாடியுள்ளனர். இதனை,

தண்பணி உறைக்கும் புலரா ஞாங்கர்
மன்றப் பலவின் மால்வரைப் பொருந்தியென்
தெண்கண் மாகக்கிணை தெவிர்ப்ப ணற்றி
இருங்கலை ஓர்ப்ப இசைஇக் (புற., 374:5–8)

என்ற புறப்பாடல் விளக்கும்.

ஒரு குறிப்பிட்ட பகுதியில் நில முழுதும் பலாக்கனி விளையக் கூடியது. மலைப்பகுதியில் பலா நிறைந்து காணப்படும். மன்றம், முற்றம், ஊர், காடு, மலை போன்ற பகுதிகளிலும் பலா மரங்கள் நிறைந்து காணப்படுகின்றன. மற்ற இடங்களில் விளையும் பலாக்களை விடப் பாரியின் பறம்பு மலைப் பலா சிறப்புடையது என நற்றிணை கூறுகின்றது. கபிலர் தம் பாடலொன்றில்,

பேரிசை உருமொடு மாறி முற்றிய
பலகுடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி
பலவுறு குன்றம் போலப் பின்றே
பெருங்கவின் எய்திய அழுங்கா (நற்., 253:9)

எனப் பாடுகிறார். பாரி பலவுறு குன்றம் என்றது பலாவின் சிறப்பை உணர்த்தும் தொடராகும். பலா மரங்களால் அம்மலை சிறப்பு அடைந்தது எனப் பாடுகின்றார்.

புன்னைமரம் நல்ல நிழலையும் மணமுள்ள மலர்களையும் தரவல்லது. இது அரண்மனையிலேயே வளர்க்கப்பட்டது. வளநகரில் வளர்க்கப்பட்ட மரம் இது எனப் புறநானூற்றில் பேசப்படுகிறது.

ததைந்த தூவியம் புதாஅஞ் சேக்கும்
துதைந்த புன்னைச் செழுநகர் வரைப்பின்
நெஞ்சமர் காதல்நின் வெய்யோள் (புற., 391:16–18)

என்பது அது. மாமரம் அதன் கிளைச் சிறப்புடனும் பூச் சிறப்புகளுடனும் சொல்லப்பட்டுள்ளன.

அலங்குசினை மா (ஐங்., 10:3)

பூத்த மா அத்து (ஐங்., 10:4)

என இம்மரம் சிறப்பிக்கப்பட்டுள்ளது. வேம்பு மரத்தைத் தெய்வத்திற்கொப்பாகக் கருதிப் படையல் செய்தனர். இது வழிபடு பொருளாக கருதப்பட்டது.

தெய்வஞ் சேர்ந்த பராரை வேம்பிற்

கொழுப்பா எறிந்து குருதி தூஉய்ப் (அக., 309:5–6)

என அகநானூறு கூறும். இதனால் இம்மரத்தின் மீது மக்கள் கொண்டிருந்த பிரிவினையும் உயிர் எண்ணத்தையும் அரியமுடிகிறது. இது போல் முதிய மரமும் சொல்லப்படுகிறது. இம்மரத்தில் கடவுள் வீற்றிருப்பதாகவே சொல்லப்பட்டள்ளது.

எம்மூர் வாயில் உண்டுறைத் தடைஇய

கடவுள் முதுமரத் துடனுறை பழகிய

தேய வளைவாய்த் தெண்கட் கூருகிர்

வாய்ப்பறை (நற்., 82:1–4)

என்பது நற்றிணை. பரிபாடலில் திருமாலைப் பற்றிக் கூறும் போது திருமால் பலவித மரங்களாகவே இருக்கிறான் என மரங்கள் உயர்த்திச் சொல்லப்பட்டுள்ளன.

அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை

ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்

கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்

அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்

எவ்வயி னோயும் நீயே... (பரி., 4:66–70)

என்பது பரிபாடல். மரங்கள் தோன்றா ஊர் என்று குறுந்தொகை பேசும்.

மரத்தலை தோன்றா ஊரும் அல்லர் (குறு., 203:2)

என்பது அது. மரங்கள் ஊர்க்கண் மிக அடர்ந்திருத்தலை இது உணர்த்தும்.

<u>2.4.3. பயிர்களைப் புகழ்தல்</u>

பயிர்கள் என்பவை நெல் முதலான பலவற்றைக் குறிக்கும். இப்பயிர்களை விளைவித்துப் பாதுகாத்துப் பயனடைந்த மக்கள் அவற்றின் சிறப்புகளைக் கூறியும் போற்றியும் வந்துள்ளனர். நல்ல விளைச்சல் என்பது விளையுள்[73] எனச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. விளைந்து அழகுடன் தோன்றும் நெல், கரும்பு, வாழை போன்றவற்றை வாழ்த்திப் பாடும் இலக்கிய மரபும் தமிழில் உண்டு.

சொல்லரும் சூல்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காத்தவே

(சீவக.சிந். நாமகள் இலம்பகம். நாட்டுச் சிறப்பு : 53)

என்று சீவகசிந்தாமணி கதிர் காய்த்து முற்றிய நெல்லைச் சிறப்பிக்கின்றது. சான்றோர் தலைவணங்கிச் செல்வது போல் நெற்கதிர்கள் வளைந்து நின்றன என்பது இதன் கருத்து. சொல் என்பது நெல்லைக் குறித்தது. சங்க இலக்கியங்கள் நெல் விளையும் வயலை வாழ்த்திப் பேசுகின்றன. பயிர்கள் மீது மக்கள் கொண்டுள்ள உயர்வான எண்ணத்தை இது விளக்குகிறது.

விளைக வயலே வருக இரவலர் (ஐங்., 2:2)
வேலி ஆயிரம் விளைக நின் வயலே (புற., 191:20)

என்று கூறப்படுவது நெல்லையும் மற்ற விளையும் பயிர்களையும் உயர்த்திக் கூறியது.

நெல்போல் பொலிக பொன் பெரிது சிறக்க (ஐங்., 1:2)

என்பது நெல் மருந்து விளைய பொன்றும் பிற பொருட்களும் நிறைந்து கிடைக்கும் என்பதை உணர்த்துகின்றது. நெல் உயிர் (புற., 186:1) எனக் கருதப்பட்டதை நுட்பமாகப் புறநானூறு உணர்த்துகின்றது. நெல் பூத்ததைச் சிறப்பிக்கும் சங்க இலக்கியம் நெல்லின் இரும்பூ (ஐங்., 30:3) எனக் கூறுகிறது. அதியமான்

நெடுமானஞ்சியின் மகன் பொகுட்டெழினியைச் சிறப்பித்துப் பாடும் ஔவையார் கரும்பை வெளி நாட்டிலுருந்து அந்நாட்டிற்குக் கொண்டு வந்த மரபில் வந்தவன் எனச் சிறப்பிக்கிறார். இதனால் கரும்பின் உயர்வு கூறப்பட்டது. இதனைப் புறநானூறு,

அரும்பெறல் அமிழ்த மன்ன
கரும்பு இவண்தந்தோன் பெரும்பிறங் கடையே (புற.,393:2021)

எனக் கரும்பைச் சிறப்பித்திருப்பது எண்ணத்தக்கது.

### 2.4.4. செடி கொடிகள் – புகழ்தல்

சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள செடிகொடிகள் பலவாம். அவற்றுள் பெரும்பகுதியானவை தற்காலத்தில் இல்லை. சிலவே இப்போது பேசப்படுகின்றன. பரங்கி, சுரை, முடக்கத்தான் போன்றவை கொடிகளாகவே இன்றும் காணப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் முல்லை, வயலை, வள்ளி போன்ற கொடிகள் சுட்டப்பட்டுள்ளன. இவற்றின் தன்மைகளும் பயன்பாடுகளும் சுட்டப்பட்டது போலவே இவை புகழ்ந்தும் உரைக்கப்படுகின்றன. வயலைக் கொடியும் வள்ளிக் கொடியும் புகழ்ந்துரைக்கப்படுகின்றன. வயலைக் கொடி மென்மையானது. இதன் மென்மையைச் சிறப்பாக எண்ணும் புலவர் பெண்களின் இடை மென்மைக்கு எடுத்துக்காட்டாக இதனைக் காட்டுவர்.

வயலைக் கொடியின் வாடிய மருங்குல் (புற., 305:1)

என இஃதுரைக்கப்பட்டுள்ளது. வள்ளிக் கொடி வாடாத தன்மை கொண்டது எனப் பேசப்படுகிறது. பொதுவாக வாடாமலர் எனவும், வாடாத மலர் எனவும் கூறப்படுவது மரபு.

வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்
மணவாளன் இறந்தால்பின் மணத்தல் தீதோ[74]

என்பது பாரதிதாசன் கூற்று. சங்க இலக்கியம் வள்ளிக் கொடியை வாடாத கொடி எனப் பகர்கிறது. பசிய இலைகளைக் கொண்டு வாடாதிருக்கும் வள்ளி என்பதை,

அவலோ கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியம் காடிறந் தோரே
யானே தோடார் எல்வளை நெகிழ ஏங்கிப்
பாடமை சேக்கையில் படர் கூர்ந் திசினே
அன்னள் அளியல் என்னாது மாமழை
இன்னும் பெய்ய முழங்கி
மின்னும் தோழி என்னின் னுயிர் குறித்தே (குறு., 216)

எனப் பாடுகிறது குறுந்தொகை. இதன்கண் வாடா வள்ளி காடு என்பது வள்ளிக் கொடிகள் மிகுந்த காடு எனப் பொருள்படும்.

### 2.4.5. கனிகளைப் போற்றுதல்

சங்க இலக்கியங்களில் குறிப்பிடத்தக்கனவாய் மா, பலா போன்ற கனிகள் கூறப்படுகின்றன. தமிழ் இக்கியங்களில் சுட்டப்படும் கனிகள் பெரும்பான்மையும் உணவாகப் பயன்படுவன. பயன்படாத கனிகள் எனச் சிலவே சுட்டப்படுகின்றன. உணவாகப் பயன்படும் கனிகள் சிறப்புடன் போற்றியும் பாடப்படுகின்றன. அவற்றுள் மா, பலா என்ற இரண்டும் குறிக்கத்தக்கன.

கணைக் கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு
துணர்த்தேக் கொக்கின் தீம்பழம் கதூஉம்
தொன்று முதில் வேளிர் குன்றூர்க் குணாது
தண்பெரும் பவ்வம் அணங்குக தோழி
மனையோள் மடமையின் புலக்கும்
அனையேம் மகிழ்நர்க்குயாம் ஆயினம் எனினே (குறு., 164)

என்ற பாடலில் மாங்கனி சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. கொக்கு என்பது மாமரம். தீம்பழம் என்பது சுவையுடைய மாங்கனியைச் சுட்டுகிறது. அது போலவே பலாக்கனிகளை மலைப்பகுதியில் குரங்குக் கிழித்துண்ணப் பின்னர் அது விட்டு

வைத்த பகுதியும் குறவர்களுக்குச் சில நாட்களுக்கு உணவாகப் பயன்படும் எனப் புறப்பாட்டுக் கூறுகிறது.

கலைஉணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழம்

சிலைகெழு குறவர்க்கு அல்குமிசை வாகும் (புற., 236:1–2)

என்ற பாடற்பகுதியில் பலா உணவு எனச் சுட்டப்படுவது அதன் சிறப்பை எடுத்துரைப்பதாகும்.

## தொகுப்புரை

இவ்வியல் தாவரங்களின் இன்றியமையாச் சிறப்புகள் மீது மக்கள் அறிந்திருந்த அனுபவங்களை எடுத்துரைக்கிறது. முதற்கண் மலர் மீது இரக்கம், மலர்கள் அழிப்பு, வெய்யிலில் மலர், காற்றால் மலர் படும் தீமை, மழையால் அழிதல் ஆகியன கூறப்படுகின்றன.

அடுத்து விலங்குகளால் மலர்கள் அழிதல், வண்டுகளால் அழிதல், மீன்களால் சிதைதல் கூறப்படுகின்றன. அடுத்து மரங்கள் மீது இரக்கம், மரங்களை அழித்தல், மரங்களின் தோற்றம், விலங்குகளால் மரம் அழிதல், வெய்யில் மற்றும் நீரினால் மரங்கள் சிதைதல் ஆகியன கூறப்படுகின்றன.

இதன் பின் பயிர்களிடத்து இரக்கம், பயிர்களுக்குண்டாகும் அழிவு அவற்றை அழிக்கும் காரணங்கள், பயிர்களால் உண்டாகும் பயன்கள் சொல்லப்படுகின்றன.

இதே போல் செடிகொடிகள் மீது இரக்கம் அவற்றிற்குண்டாகும் அழிவு, அவற்றைப் பாதுகாத்தல், அவற்றிற்கு ஏற்படும் தீமைகள் அதற்குரிய காரணிகள் ஆகியன கூறப்படுகின்றன.

இறுதியில் மரம், மலர், பயிர், செடி, கொடிகள், கனிகள் ஆகியவற்றின் பயன்கள் அதனால் உண்டாகும் இரக்க உணர்வு ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

# சான்றெண் குறிப்புகள்

1. கு.வி.கிருட்டிணமூர்த்தி, தமிழரும் தாவரமும், ப.11.
2. கோ.சடகோபன், சுற்றுக்சூழல் பொருளியல், ப.5.
3. கு.வி.கிருட்டிணமூர்த்தி, தமிழரும் தாவரமும், ப.134.
4. பதிப்புக்குழு, பெரியாரும் இராமலிங்கம், ப.5, பா.18.
5. இராமலிங்க அடிகள், திருவருட்பா, (ஆறாம் திருமுறை) பா.5297
6. குறள்., 972.
7. தொல்.பொருள்.அக., நூ.958
8. பரி., பா.10:2.
9. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.62.
10. கு.வி.கிருட்டிணமூர்த்தி, தமிழரும் தாவரமும், ப.136.
11. சி.பாலசுப்பிரமணியன், மலர்காட்டும் வாழ்க்கை, ப.12.
12. குறள்., 1119.
13. குறள்., 1115.
14. அக., பா.82:2.
15. மேலது., பா.6.
16. புற., பா.16.
17. குறு., பா.42.
18. ஐங்., பா.207.
19. குறு., பா.261.
20. மலைபடு., அடி.472.
21. புற., பா.69.
22. கழகத்தமிழகராதி. 24
23. பொ.வே.சோமசுந்தரனார், உரைவிளக்கம், கள்வன்பத்து, ஐங்குறுநூறு. முகப்பு விளக்கம்.
24. குறு., பா.398.

25. மேலது., பா.8.

26. புற., பா.18.

27. மேலது., பா.16.

28. மேலது., பா.6.

29. மேலது., பா.436.

30. குறு., பா.8.

31. வன உயிரினங்களின் வாழ்க்கை முறை, ப.13.

32. கு.வி.கிருட்டிணமூர்த்தி, தமிழரும் தாவரமும், ப.144.

33. மேலது., ப.140.

34. அகம்., பா.270:12.

35. நற்., பா.83:1–2.

36. கு.வி.கிருட்டிணமூர்த்தி, தமிழரும் தாவரமும், ப.161.

37. பாரதியார், பாஞ்சாலி சபதம். 62:21

38. அவ்வையார், மூதுரை, 13

39. ஔவை.சு.துரைசாமிப் பிள்ளை, உரைவிளக்கம் புற., 224.

40. மலைபடு., பா.30.

41. சிலம்பு. மதுரைக் காண்டம்,கொலைக்களக் காதை. 41–43

42. பொ.வே.சோ.உரைவிளக்கம் குறு., 307.

43. தொல்.பொருள்.கற்பியல்., நூ.146

44. கு.வி.கிருட்டிணமூர்த்தி, தமிழரும் தாவரமும், ப.111.

45. மேலது., ப.271.

46. மேலது., ப.136.

47. இராமலிங்க அடிகள், அருட்பா, பா.1236.

48. கு.வி.கிருட்டிணமூர்த்தி, தமிழரும் தாவரமும், ப.231.

49. கொன்றை வேந்தன் , 6

50. குறள்., 48.

51. திருவருட்பா, 796.

52. அவ்வையார் தனிப்பாடல், தொ.

53. குறள்.,1031

54. புறம்., பா.173

55. பொ.வே.சோ.உரைவிளக்கம் ஐங்., 190.

56. மேலது., குறு., 241.

57. புறம்., பா.186

58. குறள்., 78

59. தொல்.சொல்.சேனா.விளக்கம்.ப.185

60. உ.வே.சா. உரைவிளக்கம். புறம்., 338.

61. புறம்., 87.

62. குறு., பா.61.

63. குறு., பா.59.

64. குறு., பா.63.

65. குறு., பா.73.

66. குறு.,பா.131

67. தொல்.எழுத்., 245, 246

68. புலியூர் கேசிகன், உரை விளக்கம், நற்.232.

69. க.மீனாக்குமாரி, ந.பிச்சமூர்த்தியார் படைப்புகள் ஓர் ஆய்வு, ப.129.

70. தொல்.உவமை. நூ.1

71. குறு., பா.4

72. குறு., பா.57.

73. மலை., 171

74. பாரதிதாசன் கவிதைகள், ப, 60

# இயல் 3

# விலங்குகள்பால் உயிர்நேயம்

மனித சமூகத்தின் பழமையையும் வளர்ச்சியையும் சுட்டுவன என்பதற்கடையாளமாகத் திகழ்வன பழந்தமிழ் இலக்கியங்களாகும். சங்க இலக்கியங்களுக்கு உள்ள தனிச்சிறப்புகளில் இது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். மனிதன் இயற்கையோடு இயைந்த வாழ்வை மேற்கொண்டிருந்தான் என்பதை இவற்றைக் கொண்டு துணிந்திட முடியும். சங்க இலக்கியங்களை ஆராய்ந்த அறிஞர்கள் சங்க இலக்கியங்களின் இலக்கியக் கொள்கை இயற்கையைப் போற்றுதல் என்றே முடிவு செய்தனர். இயற்கை என்பது தாவரங்கள், மலை, ஆறு, கடல் என்பனவும் இவற்றுடன் கலந்து கிடக்கும் பிற உயிரினங்களையும் சுட்டுவதாகும். குறிப்பாக விலங்கினங்கள் இயற்கை வாழ்வைக் கொண்டு உயிர் வாழ்ந்தன. காடுகளிலும் மலைப்பகுதிகளிலும் வாழ்ந்த விலங்கினங்களையும் வீடுகளிலே வளர்த்த விலங்கினங்களையும் ஏதோ ஒரு வகையில் போற்றிச் சங்கத் தமிழர்கள் வாழ்ந்தார்கள். ஆடு, மாடு போன்றவை பண்டைத் தமிழரின் வாழ்க்கைச் செல்வங்களாகவே கருதப்பட்டன. காடுகளில் வாழ்ந்த விலங்குகளுடன் போரிட்ட மனிதன் சிலவற்றை வீடுகளில் போற்றி வளர்த்தான். விலங்குடன் உற்பத்தி உறவுகள் இணைத்தே திட்டமிடப்பட்டது. அரசர்கள், பெரும்புலவர்கள், செல்வந்தர்கள், தனிமனிதர்கள் எனப் பல திறத்தினரும் பல்வேறு வகையான விலங்குகளைப் பாதுகாத்திட வேண்டியவர்களாயிருந்தனர்.

அரண்மனையில் யானை, குதிரை போன்றவைகள் படைப் பயன்பாட்டிற்காகவும் தேர் இயக்கத்திற்காகவும் பாதுகாத்து வளர்க்கப்பட்டன. இவற்றைப் பாதுகாப்பதற்கெனத் தனியிடங்களும் இருந்தன. யானைத் தொழுவம், குதிரைக் கொட்டில் என இவை கூறப்பட்டன. இவற்றைக் கண்காணிக்க ஆட்கள் தனியாக இருந்தனர். சமூகத்தில் சிறந்தோர்க்கு விலங்குகளில் சில பரிசாகத்

தரப்பட்டன. போர்களுக்கும் உழைப்பிற்கும் பல விலங்குகள் பயன்படுத்தப்பட்டன. இவை மனிதர்க்குப் பல்வேறு சூழல்களில் உதவிய காரணத்தாலும் பயன்பாடு மிக்கிருந்தமையாலும் காலப்போக்கில் நாகரிகம் வளர வளர மானுடப் பண்புகள் உயர விலங்குகளிடத்தில் பேரன்பு காட்டும் பெரும்பக்குவம் தமிழ் மக்களிடையே உண்டாக்கப்பட்டது. இலக்கியங்களிலும் இந்த உணர்வுகள் பதிவு செய்யப்பட்டன. அகப்புற வாழ்க்கையில் விலங்குகளின் உறவு மிகுதியாக இருந்தது. சங்க இலக்கியங்கள் முழுமையிலும் விலங்குகளின் செயற்பாடுகளும் பண்புகளும் மனிதர்கள் அவற்றுடன் கொண்டிருந்த உறவுகளும் உற்பத்தி உறவில் அவற்றின் பங்கும் குறிப்பிடப்பட்டுள்ளன. புலவர்கள் விலங்குகளின் செயல்களை மனிதச் செயல்களோடு ஒப்பிட்டு அவற்றின் செயல்களை உயர்த்திக் கூறுவதால் விலங்குகள் பால் அவர்கள் கொண்டிருந்த பரிவுணர்வை உணர முடிகிறது. விலங்குகளும் மனித வாழ்க்கையும் எனத் தனியாக ஆராய்ந்திடும் வாய்ப்புகள் மிகுதியாயின. இவற்றிற்கு மூலமாக அமையும் பல கூறுகளில் உயிர்நேயமும் அன்பும் முதன்மையாக அமைகின்றன. இயற்கையை எதிர்த்து வாழும் மனிதன் அதனை நேசித்தும் வாழ வேண்டியிருந்தது.

> மனிதன் வானத்து இடிமுழக்கத்தையும் வையம் புரக்கும் சூரியனையும் கானகத்துத் தீயினையும் கடல் ஏவும் புயல்காற்றினையும் கடவுளாக்கிக் கைதொழுவான். கைக்கு அடங்கும் உயிரினங்களைக் காலில் போட்டு மிதிப்பான். காடு கொன்று நாடாக்கும் முயற்சியில் இயற்கைமீது பகையை கொண்டு படையெடுப்பையே நடததிக் கொண்டிருப்பான். இருந்தாலும் தமிழ் மரபில் முல்லைக்குத் தேர் தந்து மயிலுக்குப் போர்வை தந்து இயற்கை நேசத்தை வளர்த்தையும் காண்கிறோம். வாடிய பயரைக் கண்டபோதெல்லாம் வாடினேன் காற்றில் கை வீசி நடக்கவும் அஞ்சினேன் என்ற வள்ளலாரின் கனிந்த இயற்கை நேசமும் நம் கவனத்திற்குரியது[2]

என்று பொ.ஐங்கரன் தமிழர்கள் இயற்கை மீது கொண்ட தேசத்தையும் வாழ்க்கை முயற்சிகளையும் எழுதுகிறார்.

இந்த அடிப்படையில் பழந்தமிழ் இலக்கியங்களில் விலங்குகள்பால் மக்கள் உருவாக்கிக் கொண்ட அன்புணர்ச்சியும் இரக்கமும் இவ்இயலில் ஆராயப்படுகின்றன. இம்மூன்றாவது இயல் ஆய்விற்குப் பொருந்தும் வகையில் பின்வருமாறு பகுத்துக் கொள்ளப்படுகிறது.

1. இரக்க உணர்ச்சி
2. பாதுகாத்தல்
3. செயல்களைப் போற்றதல்
4. பயன்களைப் போற்றுதல்
5. பொதுப் புகழ்ச்சி

## 3.1. இரக்க உணர்ச்சி

தாவரங்கள் மீதும் பரிவும் இரக்கமும் கொள்வது பண்டைத் தமிழரின் பண்பாட்டுணர்ச்சியாக இருந்துள்ளது. பழந்தமிழ் இலக்கிங்களில் இதனைப் பரக்கக் காணலாம். அதுபோலவே விலங்குகள் மீதும் அவர்கள் கனிவும் இரக்கமும் கொண்டிருந்தார்கள். விலங்குகளைத் தாம் இருக்கும் இடத்திலேயே வைத்து வளர்த்தனர்.

விலங்குகளைப் பராமரிப்பதும் பாதுகாப்பதும் மனித வாழ்க்கையின் ஓர் அங்கமாக மாறின. விலங்குகளில் சில வீட்டு விலங்குகளாகக் கருதப்பட்டன. அவற்றின் மீது மக்கள் அன்பு செலுத்தி வந்தனர்.[3] அவற்றின் தோற்றமும் செயலும் போற்றப்பட்டன.

தமிழ்ப்புலவர்கள் அவற்றைத் தம் கவிகளில் வைத்துப் பாடியுள்ளனர். விலங்குகளின் துயரங்கள் கவிதைப் பொருளாக அமைந்தன.[4] கொடிய விலங்குகள் எனச் சொல்லப்படுபவையும் காக்கப்பட வேண்டும் என்று தற்காலத்தில் உலக அளவில் பரப்புரைகள் செய்யப்படுவது நோக்கத் தக்கது.

உலகில் புலிகள் வெகுவாகக குறைந்ததையடுத்து சர்வ தேச மற்றும் இயற்கை வனப்பாதுகாப்பு ஒன்றியம் (IUCN) அழிந்து வரும் இனங்களின் (Endangered Species) பட்டியலில் 1969 ஆம் ஆண்டு புலிகளைச் சேர்த்துக் கொண்டது. புலிவேட்டை நின்ற பாடில்லை. மனிதனில் பராக்கிரசாசங்களை வெளிக்காட்டுவதற்காக நடத்தப்பட்ட வேட்டை இன்று மனிதனுக்குப் பராக்கிரமம் கொடுக்க வேண்டியுள்ளது[5]

என்று பொ.ஐங்கரன் கூறுகிறார். விலங்குகளைப் பாதுகாக்கும் மனித இனம் இரக்க உணர்வைக் காட்டுகிறது. மனிதர்களால் காக்கப்பட்டுவரும் விலங்குகள் குறித்த பதிவுகள் சங்கப் பனுவல்களில் இரண்டு நிலைகளில் அடங்குகின்றன. அவை மனிதர்களின் இரக்க உணர்வை வெளிக்காட்டுகின்றன.

1. விலங்குகளின் உடல்துயர்
2. பசித்துயர்

மேற்குறித்த இரண்டையும் கண்ட பழந்தமிழ் மக்கள் வருந்தியதையும் வருந்தி மனமிரங்கி அவற்றைக் காக்க முயன்றதையும் புலவர்கள் பாடியுள்ளனர்.

காட்டிலும் வீட்டிலும் என விலங்குகளின் வாழிடங்கள் பலவாக இருந்தன. எல்லா இடங்களிலும் இவை இன்னல்களுக்குள்ளாயின. இவையும் வாழ்க்கைப் போராட்டத்தை மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

கீழே குறிப்பிடப்பெறும் விலங்குகள் உடல்துயர் பெற்றதாகச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

1. எருமை
2. காளை
3. குதிரை
4. குரங்கு
5. பசு
6. பன்றி

7. புலி
8. மான்
9. முதலை
10. யானை

மேலே குறிக்கப்பட்டவற்றுள் எருமை, பசு, குதிரை, காளை என்பன வீட்டு விலங்குகளாகக் கொள்ளப்பட்டவை. இவை போலவே பசித் துயரால் வாடும் விலங்குகளும் சுட்டப்படுகின்றன.

1. எருது
2. நாய்
3. கன்று
4. பசு
5. புலி
6. மந்தி
7. மான்
8. யானை

இவ்விலங்குகள் காடுகளிலும் மலைப் பகுதியிலும் மக்கள் வாழும் வீடுகளிலும் காணப்படுகின்றன. தாமே வெளியிற் சென்று உணவு தேட வாய்ப்பற்றவை. அதனால் இவை பசித்துயருக்கு ஆளாயின. இவ்விரு பகுதி விலங்குகளும் அவற்றிற்கேற்பட்ட உடல்துயர் மற்றும் பசித்துயர் இங்கே விளக்கப்படுகின்றன.

## உடல் துயர்படு விலங்குகள்

### 3.1.1.எருமை

எருமைகள் வெவ்வேறு பெயர்களில் சங்க இலக்கியத்தில் சுட்டப்படுகின்றன.. விலங்குகளில் எருமை தற்காலத்தில் உழவுக்கும் பால் தருதற்கும் பயன்படுகின்றன. பழங்காலத்தில் இவை உழவுக்குப் பயன்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. உழவின் வளர்ச்சி இல்லாத தொடக்க காலத்தில் இவை

இவ்வாறு பயன்படுத்தப்பட்டன. உழவுக்குப் பயன்பட்ட எருதுகள் முதுமை அடைந்ததும் அவற்றால் உழவு செய்ய இயலாத நிலை ஏற்பட்டது. உடல் நலிந்து போன அவ்விலங்குகளை மக்கள் இரக்கப்பட்டு உழவுத் தொழிலிலிருந்து விலக்கி அவற்றை வளர்த்தனர். இவை உணவு கொள்வதற்கான முறைகளை உருவாக்கிப் போற்றினர். முதுமையினால் விலங்குகள் அடையும் துயரம் கருதி மேற்கொண்ட இரக்க உணர்வு என இதனைக் கூறலாம். முதுமையுற்ற விலங்குகளைப் போற்றிய செயல் தமிழிரின் பண்பாட்டு அடையாளமாகும். இதனை,

> நல்லெருது நடை வளம் வாய்த்தென உழவர்
> புல்லுடைக் காவில் தொழில்விட் டாங்கு (நற்., 315:3–5)

என்று நற்றிணை கூறும்.

> இதற்குரை வரையப் புகுந்தோர் நல்லபடியாகத் தொழில் செய்து உதவிய எருது, தன் நடைச் சிறப்பினின்று நீங்கியதாயிற்று என்பதனாலே, உழவர்கள் அதனைப் புல்லையுடைய தோட்டத்திலே தொழில் செய்யாதபடி வறிதே விட்டுவிட்டனர்[6]

என்றனர்.

'உழுது அதனால் ஒய்ந்த காளை' எனப் புறநானூறு கூறுகிறது. இது "உழுதூர்காளை" (புறம்.322:1) எனப் பாடப்பட்டுள்ளது. இத்தொடர்கள் கடின உழைப்பிற்குள்ளாகி அதனால் தளர்ந்துபோகும் விலங்குகளைப் பற்றிய பரிவைக்காட்டுவன. எருமை, காளை என்ற இரண்டும் இவ்வாறே போற்றப்பட்டன. இது மக்களின் உயிரன்பைப் புலப்படுத்தும். எருது எருமையைக் குறித்தது. 'நடைவளம் வாய்த்தல்' என்பது நடக்கும் தன்மையை இழத்தல் என்னும் பொருளது. வாய்த்தல் என்பது குறைதல், இழத்தல் எனப்படும். உணவு கிடைக்காத பசுக்கூட்டம் காட்டில் அலைந்தன என்று நற்றிணை (நற்., 37:1–5) கூறுகிறது. பசுக்கூட்டம் அலைதல் என்பது இரங்கற் குறிப்பு, அலைதல் – நோக்கமின்றித் திரிதல் ஆகும்.

குதிரைகளைப் பற்றிய இரக்க உணர்வு குறிப்பிடத்தக்க அளவில் வரையப்பட்டுள்ளது. குதிரைகள் இறந்து கிடைந்ததைக் கண்டு கலங்கியதையும் தேரில் பூட்டப்பெற்ற குதிரைகளைத் தார்க்குச்சியால் குத்தி விரட்டியதையும் பின்னர்த் தார்க்குச்சியிலுள்ள கூரிய முள்ளைக் கழற்றியதையும் புலவர்கள் பாடியுள்ளனர். அவர்கள் மனஞ் சிதைந்து இயம்பியுள்ளனர். புறநானூற்றிலும் பொருநராற்றுப்படையிலும் இப்புனைவுகள் இடம்பெற்றுள்ளன. புலவரொருவர் மன்னனைப் பாடிப் பரிசில் பெற அவன் போர்க்களத்திலுள்ளான் என அறிந்து ஆண்டு விரைந்தார். அங்கவன் போர்ப்புண்பட்டு வீழ்ந்து கிடந்தனன். அவனது படை யானைகளும் குதிரைகளும் இறந்திருந்தன. 'யானையையும் தேரையும் குதிரையையும் பரிசில் பெற வந்தேன்' அவை அழிந்தனவே எனப் புலம்புகிறார் புலவர்.

கொடுஞ்சி நெடுந்தேர் முகக்குவன் எனினே
கடும்பரி நன்மான் வாங்குவயின் ஒல்கி
நெடும்பீடு அழிந்து நிலம் சேர்ந்தனவே (புறம்., 368:7–10)

எனப் பாடுகிறார் புலவர். இது புலவரின் பரிவு உணர்வைக் காட்டுகிறது. நெடும்பீடு அழிந்து நிலத்தில் சாய்ந்து கிடந்தன என்பது இரங்கற்குறிப்பாம்.

கரிகாற்சோழன் தன்னைக் காண வந்த பொருநர்க்குத் தேரையும் குதிரையும் தருபவன். அத்தருணம் தார்க்குச்சியிலுள்ள முள்ளை நீக்கிவிட்டுக் குச்சியை மட்டும் வறிதே வந்து குதிரையைத் தேரில் பூட்டிச் செல்லுக எனக் கூறுவான் எனப் பாடப்படுகிறான். மன்னனின் இச்செயல் விலங்குகளைப் போற்றுவதாகும்.

காலின் ஏழடிப் பின்சென்று கோலின்
தாறு களைந்து ஏறுஏறுஎன் றேற்றி (பொரு., 166–167)

என்று அவனது ஈகைக் குணம் கூறப்பட்டுள்ளது. தாறு களைந்து என்பது குச்சின் முனையிலுள்ள இரும்பாலான முள்ளை விலக்கியதாகும். மேலும் தேர்க்காலின் பின்னர் ஏழடித் தூரத்தில் அம்மன்னன் நின்றான் என்பது இரங்கற் குறிப்பு.

**3.1.2. பசு**

பசுக்கள் தமிழ்ச் சமூகத்தில் மிகப் பழமையான விலங்குகள். இவை கட்டப்படும் இடங்களில் கயிற்றினால் பிணைத்துக் கட்டப்பட்டுக் கிடந்தன. அவற்றை ஈக்கள் மொய்க்கின்றன. கட்டுத்தளையிலிருந்து அவற்றால் நகர இயலவில்லை. தலையை மட்டும் அசைக்கின்றன. இதனைக் குறுந்தொகை,

ஊதை தூற்றும் கூதிர் யாமத்து
ஆனுளம் புலம்புதொறு எம்பும்
நாநவில் கொடுமணி நல்கூர் குரலலே (குறு., 86:4–6)

என்று பாடுகின்றது. கடுங்குளிர், வேகமான காற்று இவற்றில் சிக்கிய மானினம் இங்குக் குறிக்கப்பட்டிருப்பது கருதத்தக்கது.

அஃறிணை உயிர்கள் படும் இத்தகைய இன்னல்களைத் தீர்ப்பதற்குப் பண்டைத் தமிழர் பண்பாட்டு அடிப்படையில் முயன்றுள்ளனர். உடலில் ஏற்படும் அரிப்பினை மனிதர்கள் தேய்த்துக் கொள்ள உரசிக் கொள்ளக் கைகள் பயன்படுகின்றன. விலங்குகட்கு அவ்வண்ணம் இயலாதென்பதனை அறிந்த நிலையில் சாலையில் உயரமான கற்களை நட்டு வைத்தனர். அதற்கு ஆதீண்டுக் குற்றி எனப் பெயர். இந்தக் கற்களின் மீது விலங்குகள் உடலைத் தேய்த்துக் கொள்ளும். பழங்கால அறமுறைகளில் இதுவும் ஒன்றாகக் கருதப்படுகிறது. இந்த அறச்செயல் இல்லாத சமயத்தில் பசுக்கள் துயரப்பட்டன. அத்துயரைப் போக்கும் ஒன்றாக இதனைக் கொள்ளலாம்.

பனிக்குளிர் பருவக்காலங்களில் மக்களும் தாவரங்களும குளிரால் இன்னல் அடைவதைத் தமிழ் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. அகத்துறை இலக்கணம் பெரும்பொழுது, சிறுபொழுது என இருவகையாகக் காலத்தைப் பிரிந்துள்ளது. ஒவ்வொரு பொழுதும் ஒருதிணைக்குரியதாகச்

சொல்லப்பட்டுள்ளது. பனிக்காலம் பெரும்பொழுதில் அடங்கும். இது முன்பனிக்காலம், பின்பனிக்காலம் என இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இரண்டுமே குளிர் மிகுந்த பருவமாகக் குறிக்கப்பட்டுள்ளன. பனிக்கால இடர்ப்பாடுகள் குறித்துப் பாடும் பல்வேறு செய்யுட்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

இவ்வாறு சொல்லப்படும் குளிரில் பசு ஒன்று இடர்ப்பட்டதாகவும் அதனைக் காப்பாற்றும் முயற்சிகள் நிகழ்ந்ததாகவும் குறுந்தொகைச் செய்யுள் கூறுகிறது. பசு ஒன்று கிணற்றில் விழுந்து அல்லற்பட்டதைக் குறுந்தொகை,

> கவலை யாத்த அவல நீளிடைச்
> சென்றோர் கொடுமை எற்றித் துஞ்சா
> நோயினும் நோய் ஆகின்றே—கூவிற்
> குரால்ஆன் படுதுயர் இராவில் கண்ட
> உயர்திணை ஊமன் போலத்
> துயர்பொறுக் கல்லேன் தோழி நோய்க்கே (குறு., 224)

எனக் கூறுகிறது. இது தலைவி கூற்றாகப் பாடப்பெற்றுள்ளது. தோழியின் வருத்தத்தைக் கண்ட தலைவி கிணற்றில் விழுந்த பசுவினை இரவில் கண்ட ஊமன் போல வெளியிற் சொல்ல இயலாது தவித்தாள் எனக் கூறப்பட்டிருக்கிறது. எற்றம் என்பது எற்றி எனத் திரிந்து நினைந்து என்னும் பொருளில் வந்தது. விலங்குகளிடம் கொண்ட இரக்கத்தை இது காட்டும்.

மாடுகளைக் காட்டுப் பகுதிக்கு ஓட்டிச் சென்று கோவலர்கள் மேய்க்கின்றனர். ஆக்களுக்கு நீர் வேட்கை மிகுந்து நிற்கும் நிலையை அறிந்த அவர்கள் அவற்றிற்கு நீரருந்த ஏற்பாடு செய்கின்றனர். தம் கையில் வைத்திருந்த கோலின் உதவிக்கொண்டு குழி தோண்டுகின்றனர். இந்த நிகழ்ச்சி,

கல்லா கோவலர் கோலிற் தோண்டிய

வானீர்ப் பத்தல் யானை வெளவும்

தல்லதர்க் கவலை செல்லின் மெல்லியல்

புயனெடுங் கூந்தல் புலம்பும்

வயமான் தோன்றல் வல்லாதீமே (ஐங்., 304)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது அவர்களின் நேய உணர்வைக் காட்டுகிறது.

வீடுகளுக்கு அருகிலும் தோட்டங்களிலும் கிணறுகள் தோண்டப்படும் வழக்கம் பண்டை நாளில் இருந்தது. இதன் வழிப் 'பயிருக்கு நீர்' இரைத்துக் கொள்ளவும் குடிநீருக்குப் பயன்படுத்திக் கொள்ளவும் கிணற்று நீர்ப் பயன்பட்டது. கிணறு மணற்பாங்கற்ற அழுத்தமான பகுதிகளில் தோண்டப்படுவதாகும். தம் கைகளில் இருக்கும் கோலின் உதவியால் குழி தோண்டினர் என்பதால் மணற்பாங்கு மிகுந்த மண் பகுதி அது என்பதை உணரலாம்.

கோவலர்கள் பசுக்களை மேய்ப்பதற்காக வெளியில் ஓட்டிச் செய்கின்றனர். தாய்ப்பசுக்கள் மேய்ச்சலுக்கு செல்கின்றனர். கன்றுகள் வீட்டில் கட்டிக் கிடக்கின்றன. அவை பசுக்களுடன் சென்று மேய்ந்து வரும் பருவம் அற்றவை. ஆகையால் அவை பசுக்களை எண்ணி வாட்டுமுற்றுக் கிடந்தன. இதனைக் கண்ட பெண் ஒருத்திக் கன்றைக் கண்டு அதன் ஏக்கத்தை எண்ணி வருந்தியவள் 'உம் தாயர் விரைவில் வருவர். வருத்த வேண்டாம் எனக் கூறுகிறாள்' சிறு கன்றின் துன்பத்திற்காக வருந்திய மனித உள்ளம் அப்பெண்ணின் உள்ளம்.

கொடுங்கோல் கோவலர் பின்னன் உய்த்தர

இன்னே வருர் தாயர் என்போயர் (முல்லை., 15–16)

என்பது அவள் கூற்று.

கோடைக்காற்று மிகக் கடுமையாக வீசியதால் அதைத் தாங்க முடியாமல் மரப்பசு வாடியிருந்ததை,

> துகில் விரித்தன்ன வெயிலவிக் உருப்பின்
> என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்
> ஒய்பசி செந்நாய் உயங்குமரை தொலைச்சி
> ஆர்ந்தன ஒழிந்தன மிக்கில் சேய்நாட்டு
> அஞ்சுரம் (நற்., 43:1–5)

என நற்றிணை பாடுகிறது.

மேய்ச்சலுக்குப் பசுக்களுடன் கன்றுகளும் செல்கின்றன. கன்றுகள் நீர்வேட்கையால் தவிக்கின்றன. அவைகளுக்கு நீரூட்ட வேறு வழியின்றி ஓட்டிச் சென்ற கோவலர்களும் வறிதே இருக்கினறனர். நீர் வேட்கையுள்ள கன்றுகளையும் அவற்றின் மீதுக் கொண்ட இரக்கவுணர்வையும் புறப்பாடலொன்று தெரிவிக்கிறது.

> மதிலும் ஞாயி லின்றே கிடக்கும்
> நீர்மையிற் கன்றுமேய்த் துகளும் (புற., 1–2)

என்று இதனைப் புலவர் பாடியுள்ளார். இப்பாடலில் உகளும் என்ற சொல் புலவரின் இரக்கமுடைய உள்ளத்தைக் காட்டுவதாகும்.

எருதுகள் கடினமாக உழைப்பவை. அத்தகைய எருதுகளை உமணர்கள் வண்டியில் பூட்டி ஓட்டிச் செல்வர். உப்பு வண்டியைச் சுமந்து செல்வதாய் அவை இருந்தன. ஓர் எருது கால் முடமாகி விட்டநிலையில் அதனைக் கவனியாது உமணர்கள் சென்றுவிட்டதால் உணவின்றி அது அலைந்ததாக ஒருபாடல் குறிக்கிறது. எருதுவின் இயங்கா நிலைக்கண்டு புலவர் இரங்கிப் பாடிய பாடல்,

> நீரும் புல்லும் ஈயா
> யாருமி லொருசிறை முடத்தொரு துறந்த
> வாழா வன்பகடு (புற., 7–9)

என முடிகிறது. முடத்தொடு துறந்த என்றும் வாழா வன்பகடு என்றும் குறிப்பது அவ்விலங்கின் மீது கொண்ட இரக்கத்தைக் காட்டுவதாக உள்ளது. வேடர்கள் கட்டியிருந்த வலையைக் கண்ட மான் அஞ்சியது. அவ்அச்ச உணர்வை,

வலைகாண் பிணை (அக., 7:11)

என அகப்பாடல் சித்திரிக்கிறது.

காட்டுப் பசுக்கள் வெய்யிலின் வெப்பத்தில் மேய்தற்கு அலைந்து திரிகின்றன. புல் நுனியும் தலைக்காட்ட இயலாத நீரற்ற மணப்பகுதி. அருந்துவதற்கு நீரும் கிடைக்காமல் அவை அலைந்தன என்று ஒரு பாடல் கூறுகிறது. காட்டுப்பகுதியில் இருந்த செடிகள் யாவும் காய்ந்து கருகி விட்டாதல் தழைகளும் கிடைக்காமல் அவை திரிந்தன. இதனை,

மரையா மரல்கவர மாறி வறப்ப
விரையோங் கருஞ்சுரத தாரிலிடச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலர்வலாடு நாவிற்கு (கலி., 6:1–4)

எனக் கலித்தொகைக் கூறுகிறது.

ஊர்ப்புறத்தில் சுற்றித் திரிந்த பசுக்களும் நீரின்றி வேட்கையால் அலைந்தன. ஊர்க்கண் இருந்த குளங்களும் கோடை வெம்மையால் வற்றிப்போயின. ஊரில் உள்ள குளங்கள் மக்களுக்கும் விலங்குகளுக்கும் நீர் வழங்கி வந்தன. கோடைக்காலத்தில் அவை நீர் வற்றிப் போயிருந்தன. இந்தச் சூழலில் பசியாலும் நீர் வேட்கையாலும் துயருற்ற பசு ஒன்றின் நிலையைப் புலவர்,

வானம் எயல்வளம் சுரப்பக் கானம்
உலறி இலையிலே வாசுப் பலவுடன்
ஏறுடை ஆயத்து இளம்பசி தெறுப்பக்
கயனற வறந்த கோடையொடு நயனறப்
பெருவரை நிவந்த மருங்கில் (அக., 29:1–5)

எனப் பாடுகின்றார். வயதாகி முதுமையடைந்த பசுக்கள் பசி தாளாது ஆம்பல் மலர்களைத் தின்றன என்று பதிற்றுப்பத்தில் கூறப்பட்டுள்ளது.

கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்
வளைதலை மூதாம்பல் ஆர்நவும் (பதிற்., 2:13)

புறங்களிலே வளைந்த தலையினவான கிழட்டுப் பசுக்கள், ஆடும் அம்மகளிரது தழையுடைகளின்றும் சோர்ந்து வீழ்கின்ற ஆம்பல் மலர்களை உண்டபடியே தம் பசியாறிக் கொண்டிருக்கும் என்ற கருத்து இதன்கண் கூறப்பட்டுள்ளது.

### 3.1.3. பன்றி

சங்க காலத்திலேயே தமிழகத்தின் காட்டுப் பகுதிகளிலும் வீட்டுப் புறங்களிலும் காணப்பட்ட விலங்காக இது இருந்துள்ளது. இவ்விலங்கு மக்கள் வளர்ப்பு விலங்காக இருந்தமையும் தெரிகிறது. தாயை இழந்த பன்றிக் குட்டி இரக்க நிகழ்வு ஒன்றற்கு உவமையாக இடம் பெறுகின்றது. ஐங்குறுநூற்றில் இது புனையப் பெற்றுள்ளது.

தாயிழந்த குழுவரிக் குருளை (ஐங்., 268:1)

என்பது அது. இப்பகுதியில் சொல்லப்பட்ட கதை நிகழ்வுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் இவ்விலங்கின் மீது மக்கள் கொண்ட இரக்கம் புலனாகும்.

### 3.1.4. புலி

சங்கப் பாடல்களில் மிகுதியும் இடம்பெறும் விலங்காகக் கூறப்படுவனவற்றுள் புலியும் ஒன்று. காட்டில் வாழும் விலங்காகவும் பிற விலங்குகளை அடித்து உண்ணும் விலங்காகவும் இது இடம்பெறுகிறது. பாடல்களில் உள்ளுறை மற்றும் இறைச்சிப் பொருளமையப் பாடுதற்குக் கருப்பொருளாகப் புலியின் பசி குறிப்பிடப்பட்டுள்ளது. பசியால் புலி அடையும் துயரம் அச்செய்யுளில் தரப்பட்டுள்ளது. அது புலி பசித்தன்மை (புறம். 190:10) என்ற உவமையால் கூறப்பட்டுள்ளது.

குட்டியை ஈன்ற பெண்புலி பசியால் வாட அதனைக் காணப்பெறாத ஆண்புலி அதற்கு உணவு கொண்டு வரமுயன்றதைப் புலவர் பாடலொன்றில் புனைந்துள்ளார்.

நின்ற வேனில் உலந்த காந்தள்
அழலவிர் நீளிடை நிழலிடம் பெறாஅது
ஈன்றுகான் மடிந்த பிணவும்பசி கூந்ர்தென
மான்ற மாலை வழங்குநர்ச் செகீஇய
புலிபார்த்துரையும் புல்லதர்ச் சிறுநெறி (நற்., 29:1–5)

என்பது சங்கச் செய்யுள், நின்ற வேனில், உலந்த காந்தள் அழவிர் நீளிடை என்னுந் தொடர்கள் பாலை நிலத்தின் கொடுமையை வெளிப்படுத்தி நிற்பன. புல்லதர்ச் சிறுநெறி என்பதனைச் சிறிய வழி எனக் கூறுவர். 'பிணவுப் பசிகூர்ந்தெனப் புலி வழிபார்த்து உணவுக்காகக் காத்திருந்தது' என்பது குறிப்பு.

விலங்குகள் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டு ஒன்றை ஒன்று அழிக்க முற்படுகையில் அந்த நிகழ்ச்சிகளை இரக்க உணர்வுடன் சங்ககால மக்கள் உணர்ந்துள்ளனர். யானை தாக்கியதால் புலி நடுங்கியதைக் கண்ட புலவர் அதனை,

சொல்லிற் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்
திருமுகம் இறைஞ்சி ராணுகி அதுமெனக்
காமம் மைம்மிகின் தாங்குதன் எளிதோ
கொடுங்கேழ் இரும்புறம் நடுங்கக் குத்திப்
புலிவிளையாடிய புலவு நாற வேழம் (நற்., 39:1–5)

எனப் பாடுகிறார்.

இச்செய்யுளில் புலி விளையாடிய புலவு நாறு வேழம் என்பது யானையின் சினத்தை வெளிப்படுத்துகிறது. நடுங்கக் குத்தி என்பது யானையின் கடுந்தாக்குதல் எனக் கூறப்பட்டது. கொடுங்கேழ் இரும்புறம் நடுங்க என்பது

புலியின் அச்சத்தை உணர்த்துவதாகும். யானைத் தாக்குதலை அதன் வீரியத்துடன் குறிப்பிடலே இவ்வாறு உரைக்கப்பட்டது. இது புலியின் மீது இரக்கத்தை உண்டாக்குகிற பாடற்பகுதியாகும். இச்செய்யுளை நச்சரும் இளம்பூரணரும் தொல்காப்பிய இலக்கணத்திற்கு எடுத்துக்காட்டுகளாகத் தருகின்றனர்.

### 3.1.5. யானை

பாசறையிலும் படைக்களப்பகுதியிலும் உரிய இடங்களில் யானைகள் கட்டப்பட்டிருந்தன. பொதுவாகப் பல்வேறு பணிகளுக்கும் யானைகள் பயன்படுத்தப்பட்டன. போர் செய்வதற்கு யானையே பொருத்தமான விலங்காக இருந்தது. பெரிய மரங்களையும் மலைக் கற்களையும் சுமந்து செல்வதற்கு யானைகள் பயன்படுத்தப்பட்டன. பொதுவாக இவை வீட்டு விலங்குகளைப் போலவே பாதுகாப்புடன் வளர்க்கப்பட்டன. யானைகளைப் பராமரிக்கவென்று தனி ஆட்கள் இருந்தனர். அவர்கள் பாகர் (பாகன்) என்று அழைக்கப்பட்டனர். சிறப்பான கவிதைகளைப் பாடி மன்னரைப் புகழுங்கால் அப்புலவர்களுக்கு மன்னர்கள் யானைகளைப் பரிசில்களாகவும் தந்தனர். சமூகத்தில் மதிப்புமிக்க ஒரு விலங்காக இது போற்றப்பட்டது. இத்தகைய யானைகளின் பசி போன்ற போன்ற துன்பத்திற்கு அக்கால மக்களும் மன்னர்களும் பிறரும் இரக்கம் காட்டினர். பசியுடன் இருந்த யானைகளுக்குக் கரும்புகளை அவை கட்டப்பட்டிருந்த இடத்திற்கு மேலே கட்டித் தொங்கவிட்டிருந்தனர். அவற்றை அவை எளிதாகக் கடித்துப் பசி போக்கிக் கொண்டன. சோற்று உருண்டைகளை உருட்டிக் கையால் எடுத்து யானைகளின் வாயில் பாகர்கள் ஊட்டிய செய்தியையும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

உவலைக் கூரை ஒழுகிய தெருவில்
கவலை முற்றம் காவல் நின்ற
தேம்படு கவுள சிறுகண் யானை

ஓங்கு நிலைக் கரும்பொடு கதிர்டைந்தது யாத்த

வயல்வினை இண்குளகு உண்ணாது நுதல்துடைத்து

அயில்நனை மருப்பில்தம் கையிடைக் கண்டேன் (முல்., 30–36)

என்பது முல்லைப்பாட்டு யானைக்கு உணவூட்டி வளர்த்த பாகன் அது இறந்தபோது கலங்கி அழுகிறான். அதனை,

பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த

பெருங்களிறு இழந்த லைதற்பாகன்

அதுசேர்ந்து அல்கிய அழுங்கல் ஆலை

வெளில்பாழ் ஆகக் கண்டு கலுழ்ந்தாங்கு (புறம்., 220)

எனப் புறநானூறு கூறுகிறது.

காடுகளில் வசித்த யானைகள் தம் நீர் வேட்கையைத் தணித்துக் கொள்ள அங்குமிங்கும் அலைந்தது, அதனால் அவற்றின் உடல் இளைக்கும் நிலைக்குள்ளாயின. வலிவுடைய யானையும் நீரின்மையால் உடல் இளைத்துப் போயின என்பது இரங்கற் குறிப்பு.

உரல்போல் அடிய உடம்புயங் கியானை

யூறுநீர் அடங்கலின் உண்கயங்க காணாது

சேறு சுவைத்துந்தம் செல்லுயிர் தாங்கும்

புயறுளி மாறிய போக்கரு வெஞ்சுரம் (கலி., 13:6–9)

என்பது கலித்தொகை. இதில் யானையின் வலியுடைய உடல்தன்மை கூறப்பட்டுள்ளது. அப்படி வடிவுடைய யானையும் நீர் கிடைக்காமல் அலைந்து திரிந்து சேறு கலந்த நீர்ப்பகுதியைச் சுவைக்கிறது என்பது இரங்கற்குறிப்பு.

விலங்கினங்கள் சென்று கலக்குவதால் நீரும் சேறாகிப் போகும் தன்மையைப் புறநானூறு,

தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்

உண்ணாராகுப நீர்வேட்டோரே

ஆவும் மாவும் சென்றுணக் கலங்கி
சேறோடு பட்ட சிறுமைத் தாயினும்
உண்ணீர் மருங்கின் அதர்பல ஆகும் (புறம்:204:5–9)

என்று குறிப்பிடுகிறது.

### 3.1.6. குரங்குகள்

குரங்குகள் கடுவன், மந்தி எனப் பலபெயர்கள் சுட்டப்படுகின்றன. குரங்குகளுக்குப் பெரும்பகுதியும் காய் கனிகளே உணவாகக் கிடைத்தன. சங்க இலக்கியங்களில் குரங்குகள் பற்றிய புனைவுகள் நிரம்ப இடம்பெற்றுள்ளன. இவற்றைக் கொண்டு உள்ளுறை இறைச்சிப் பொருள்களும் புலவர்களால் பாடப்பெற்றுள்ளன.

இவ்வாறு சொல்லப் பெறும் குரங்கினத்துள் ஒரு மந்தியின் பசித்துயரைப் புலவர்,

மரல்சாய மலைவெம்ப மந்தியுயங்க (கலி., 13:5)

என்ற வரியில் விவரிக்கிறார். உண்பதற்கு மரங்களையே நம்பியிருந்த மந்திகள் ஏதும் கிடைக்காமையால் உடல் வருந்தி மெலிந்தன என்று இப்பாடல் குறிப்பிடுகின்றது. இவ்விலங்குகள் உண்ண உணவின்மையால் உடல் இளைத்து மெலிந்தன என்பது குறிக்கத்தக்கது. யானையின் வலிமையைக் கலித்தொகை,

உறுபுலி உருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
குறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை
நீடிரு விடரகஞ் சிலம்பக கூய்த்தன்
கோடுபுய்க் கல்லா துழக்கும் நாடகேள் (கலி., 38:6–9)

எனக் கூறுகிறது. மதயானை காட்டில் ஒலியெழுப்பி வேங்கை மரத்தினைத் தம் கொம்புகளால் குத்திச் சாய்த்தமை கூறப்பட்டுள்ளது.

**3.2. பாதுகாத்தல்**

விலங்குகளைப் பாதுகாத்தல் தனி வாழ்க்கை முறையாகும். பழந்தமிழகத்தில் விலங்குகளுக்கு இடையூறு நேரா வண்ணம் பாதுகாப்பது பற்றித் தெரிந்து வைத்திருந்தனர். மக்களிடம் அன்பு செலுத்தியது போலவே அக்கால மக்கள் விலங்குகளிடத்தும் அன்பு செலுத்தினர். பல விலங்குகளைத் தம் குழந்தைகள் போலவே வீடுகளில் வளர்த்தும் உழவுத் தொழிலில் ஈடுபடுத்தியும் பாதுகாத்து வந்தனர். இவ்வாறு பாதுகாக்கப்பட்ட விலங்குகள் பல வகையாகக் காணப்படுகின்றன. ஆடு, பசு, கன்று, யானை, எருது, எருமை, குரங்கு, காளை போன்றவை மக்களால் பெரிதும் போற்றப்பட்டுப் பாதுகாக்கப்பட்டன.

**3.2.1. ஆடுகள்**

ஆடுகள் முல்லை நிலத்து மக்களால் பாதுகாக்கப்பட்ட விலங்கினங்களுள் ஒன்றாகும். முல்லை, காடும் காடும் சார்ந்த பகுதியாகும். இங்கு வாழ்ந்த மக்கள் ஆயர், ஆய்ச்சியர் மற்றும் கோவலர் என அழைக்கப்பட்டனர். முல்லை நிலத்திற்குத் திருமால் தெய்வம் எனக் கூறப்பட்டது. மாயோன் மேய காடுறை உலகமும் எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. முல்லை நிலத்து மக்கள் ஆடு மாடுகளை மேய்த்தலைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். பால்கறந்து விற்றலும் முல்லை நிலத்து மக்களால் செய்யப்பெற்ற தொழிலாக இருந்தது. ஆடுகளில் வரையாடு முதலான பலவகை கூறப்படுகின்றன.

ஆலும் புரவி அருக்கன் இக்கங்குல் அடல் கடமான்
பாலும் தசையும் உண்டு தங்குவீர் எங்கள் பாடியிலே

(தஞ்.வா.கோ.320)

என்ற தஞ்சைவாணன் கோவை பாடலில் வரும் பால் ஆட்டுப்பாலையும், தசை ஆட்டிறைச்சியையும் குறிப்பதாகச் சுட்டுவர். மாடுகளைப் போலவே ஆடுகளும் பண்டைத் தமிழரின் செல்வமாகப் போற்றப்பட்டது. கண்ணன் மாடுகள் மேய்த்துக் குழலூதி வருவதும் ஆழ்வார் பதிகங்களில் காணப்பெறுகின்றது.

மாடுகன்று மேய்த்திடுவேன்

மக்களைநான் காத்திடுவேன்

வீடுபெருக்கி விளக்கேற்றி வைத்திடுவேன்[10]

என்று கண்ணன் கூறுவதாகப் பாரதியார் கண்ணன் பாட்டில் பாடியிருப்பது எண்ணத்தக்கது.

> இங்கெல்லாம் ஆடு, மாடு மேய்த்தல் ஆயர் தொழில் என்பது பெறப்பட்டது. ஆடுகளைத் தனியே மேயவிட்டுப் பாதுகாப்புடன் வீடுகளுக்குக் கொண்டு வந்த செய்திகள் பழந்தமிழ்ப் பாடல்களில் காணக்கிடக்கின்றன. ஆடுகளை மேயக்கச் சென்றவர் மேயும் பகுதியில் விட்டுவிட்டுவர அவை மேய்ந்து முடிந்தபின் மாலையில் வீடு திரும்பின என்றும் இவை மணிகள் கட்டப்பட்டு அழகுடன் காட்சி தந்தன என்றும்

என்பது நற்றிணை. அவ்விலங்குகள் மதிப்புடன் போற்றப்பட்டமை இதில் விளக்கப்பட்டுள்ளது. ஆடுகளுக்குள் குறிப்பிட்ட வகையிலான பண்புகள் இருந்ததையும் அவை மனிதர்களைப் போல அன்புக்கொண்ட பண்பாக இருந்ததையும் புலவர்கள் தம் பாடல்களுள் குறித்துள்ளார்.

ஆண் ஆடுகளும் பெண் ஆடுகளும் ஒரே இடத்தில் சேர்ந்து கட்டப்பட்டிருந்தன. கட்டுத்தளைக்கு ஆண் ஆடு வரவில்லையெனில் பெண் ஆடு ஆண் ஆடு இருக்கும் இடத்திற்கு அதைக் தேடிச் சென்றது என்ற செய்திப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

ஆடுகளுக்குப் பொறுப்புடன் மக்கள் உணவிட்டு வளர்த்து வந்தனர். ஆடுகளின் விரும்பத்தக்க உணவாக மரத்தழைகள் கொடுக்கப்படுகின்றன. இன்று வீடுகளில் கட்டியிருக்கும் இடங்களில் அவை கடித்துத் தின்னுமாறு

தழைகளைக் கட்டிவைக்கும் பழக்கம் உள்ளது. இதே பழக்கம் பழங்காலத்திலும் இருந்தது என்பதைச் சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன. ஆடுகள் நின்று கொண்டு தழைகளை உண்ணுமாறு தழைக் கொத்துகளைக் கட்டி வைத்தனர்.

குளகு அரையாத்த குறுங்கால் குரம்பை
செற்றை வாயில் செறிகழிக் கதவின்
கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்
அதளோன் துஞ்சும் காப்பின் உதள (பெரும்., 147–149)

என்று பெரும்பாணாற்றுப்படையில் பாடப்பட்டுள்ளது.

மழையில் நனைந்து வருந்திய ஆடுமாடுகளைக் கோவலர்கள் மழையில்லாத பகுதிகளுக்கு ஓட்டிச் சென்று பாதுகாத்துள்ளனர். அதனை,

ஆர்கலி முனைஇய கொடுங்கேல் கோவலர்
ஏறுடை இனநிரை வேறுபுலம் பரப்பி (பெரும்., 3–4)

என்று கூறுகின்றார் புலவர். மழைக் குளிரிலிருந்து விலங்குகளைப் பாதுகாத்த நல்லுணர்ச்சியை இது காட்டுகிறது.

### 3.2.2. எருமை

விலங்கினங்களில் இது பால்தருதலும் உழவுக்குப் பயன்படுதலும் ஆகிய இருவகையில் பயன்படுவதாகும். இவ்விலங்கு மருதநிலத்து விலங்காகக் கூறப்படுகிறது. இவ்விலங்கு உள்ளுறைப் பொருள் குறித்த புனைவில் இடம்பெற்றுள்ளதாகக் குறிக்கப்பட்டுள்ளது. முரட்டுத்தன்மை கொண்ட விலங்காக இதனைச் செயலால் அறியுமுடிகிறது. இவ்விலங்கினத்தின் நல்ல செயல்களையும் அது பயன்பட்ட முறையையும் அடிப்படையாகக் கொண்டு சங்கப்புலவர்கள் இதனைப் போற்றிய இடங்களையும் காண முடிகிறது. இவ்விலங்கிற்கும் மக்கட்கும் உள்ள உறவினையும் சங்கப் பாடல்கள் விளக்குவனவாய் அமைந்துள்ளன.

மன்ற எருமை மலர்தலைக் காரான்
இன்தீம் பாற்பயம் கொண்மார் கன்றுவிட்டு
ஊர்க்குற் மாக்கள் மேற்கொண்டு கழியும்
பெரும்புர் விடியலின் விரும்பிப் போத்தந்து
தழையும் தரமும் தந்தனன் இவன்
இழையணி ஆயமொடு துகுநாண் தடைஇத்
தைத்திங்கள் தண்கயம் படியும் (நற்., 80:1–7)

என்பது எருமை பால் தந்ததையும் சிறுவர்கள் அதனை மேய்ச்சலுக்கு ஓட்டிச் சென்றதையும் வெளிப்படுத்தும் பகுதியாகும். இது தலைவன் தன் நெஞ்சிற்குச் கூறிய கூற்றாக அமைந்துள்ளது. வீட்டு விலங்காகவே இது போற்றி வளர்க்கப்பட்டது. மேலும், குளம், குட்டைகளில் தேங்கிக் கிடக்கும் நீர்நிலையில் அமிழ்ந்து நெடுநேரம் கிடக்கும் இயல்பு இதற்குள்ளதால் மருதநில விலங்கென இது அறிவுறுத்தப்பட்டது. குளம், குட்டைகளும் மலர் நிறைந்த பொய்கைகளும் மருத நிலத்தில் உள்ளவை. பால் கறந்தபின் கன்றுகளை வீட்டிலே விட்டு, மாடுகளை ஓட்டிச் செல்வது என்னும் பழக்கம் இது.

எருமைகளைக் கட்டுவதற்கென்று தனிக் கொட்டில்கள் அமைக்கப்பட்டிருந்தன. அவை பாதுகாப்பு நிறைந்திருந்தவை. வெளியிற் சென்ற மலர்களை அழித்திடா வண்ணம் கட்டப்பட்டிருந்த குறிப்பும் காணப்படுகிறது.

நகையா கின்றே தோழி நெடுநல்
மணிகண் டன்ன துணியகம் துளங்க
இரும்பியம் றன்ன கருங்கோட் டெருமை
ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் மாந்திக் கரைய
காஞ்சி நுண்தாது ஈர்ம்புறத் துறைப்ப
மெல்கிடு கவுள அல்குநிலை புகுதரும் (அகம்., 56:3–7)

என்று அகநானூற்றில் கூறப்பட்டுள்ளது. இவ்விலங்கினைப் பாதுகாத்துப் பயன்தரச் செய்து வாழ்ந்த மக்களையும் அவர்தம் வாழ்நிலைக்கும் இவ்விலங்கிற்குமிருந்த உறவினையும் அறிய முடிகிறது.

தடமருப் பெருமை மடைநடைக் குழவி
தூண்டொறும் யாத்த காண்டகு நல்லில்
கொடுங்குழை பெய்த செழுஞ்சேய் பேதை
சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப
வாளை யீர்ந்தடி வல்லிதின் வகைஇப்
புகையுண்ட யர்ந்த கண்ணள் தகைபெறப்
பிறைநுதற் பொறித்த சிறுவண் பல்வியர்
அந்துகில் தலையின் துடையினள் நுப்புலத்து
அட்டிலோளே அம்மா அரிவை
மெக்கே வருகதில் லம்ம விருந்தே சிவப்பான்று
சிறுமுன் ளெயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகங்காண் அம்மே (நற்., 120:1–12)

இது பழந்தமிழரின் செல்வ வளத்தைச் சுட்டுவதாகும். தமிழர் செல்வ வளத்துள் ஒன்றாக எருமைக் கன்றுகள் சுட்டப்பட்டுள்ளமை எண்ணத்தக்கது. தூண்கள் என்ற அடையாளம் பெரிய வீடு என்பதையும் வளமிக்க இல்லம் என்பதையும் காட்டுவன. இத்தூண்கள் ஒவ்வொன்றிலும் எருமைகள் கட்டப்பட்டிருந்தன என்பது அவ்வில்லத்திற்கு இவை பெரும்பயன் நல்கின என்பதைக் காட்டுகிறது. வீட்டின் முற்றத்தில் கட்டிப் பாதுகாக்கும் அளவிற்கு எருமைகள் சிறந்த விலங்குகளாகப் போற்றப்பட்டதை அறியலாம். அகநானூற்றில் இது தலைவர் கூற்று. எருமைகளின் செயல்பாடுகளை ஆராய்ந்தால் பல்வேறு தகவல்கள் கிடைக்கின்றன.

எருமைகள் தம் கன்றுக்குப் பாலூட்டிய செயலைப் போற்றும் பழம்பாடல்கள் உள்ளன. எருமைகளின் நற்செயல்களாகக் கூறப்படுவனவற்றுள் பாலூட்டலும் ஒன்று. இவ்விலங்குகளின் தாய்மைக் குணம் பின்வரும் பாடலில்,

கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றாக்
காதற் குழவிக் கூறுமுலை மடுக்கு
நுந்தை நும்முவர் வருவதும்
ஒண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே (ஐங்., 92)

என்று புனையப்பட்டுள்ளது.

இச்செய்யுளில் எருமை தன் கன்றுக்குப் பாலூட்டியதை அகப்பொருளுடன் இணைத்துப் பேசும் உரையாசிரியர், இதன்கண், எருமைப் புனிற்றா தன் அன்புடைய குழவிக்கு ஊறுமுலை மடுக்கும் என்றது 'என் அன்பிற்குரிய நின்னை நான் விரைந்து மணந்து நன்கு தலையளி செய்வேன்' என்னும் உள்ளுறை உடைத்து எனக் கூறுகிறார்.

எருமைக் கன்றுகளைப்போலவே பசுக்கன்றுகளும் கட்டப்பட்டுள்ளன. அவை ஆண்கன்று எனப்பட்டன. ஆண்கன்றுகள் அச்சமுற்று ஓடுவதைக் கண்ட இல்லத்து மகளிர் அக்கன்றுகளைப் பிடித்துப் பாதுகாத்தனர். பெண்கள் போற்றி வளர்ப்பவையாக ஆண்கன்றுகள் சுட்டப்பட்டுள்ளன. இச்செய்தி குறுந்தொகையில்,

அமர்க்கண் ஆமான் அம்செவிக் குழவி
கானவர் எடுப் வெரீ இனம்தீர்ந்து
கானம் நன்னிய சிறுகுடிப் பட்டென
இளையர் ஓம்ப மரீஇ அவண் நயந்து (குறு., 32:1–4)

எனக் கூறுப்பட்டுள்ளது. இதனை விளக்கும் உரையாசிரியர்.

காட்டில் வாழும் இயல்புடைய ஆமான் கன்ற

அக்காட்டில் வாழ்வாரானே அலைப்புண்டு

தன்இனத்திற் பிரிந்து சிறுகுடியிற்பட்டு ஆண்டுறையும்

மகளிரோடு பழகி அவ்வின்பத்தே பழகினாற் போன்று

எனக் கூறுகின்றார். கன்றுகள் மீது காட்டப்படும் அன்புணர்வையும் இரக்கத்தையும் இதன்வழி உணரலாம்.

### 3.2.3. எருதுகள் , காளைகள்

எருது, காளை, ஆனேறு என்றும் சொற்கள் சங்க இலக்கியப் பயிற்சியில் இடம்பெற்றவை. காளை மாடுகளைப் பகடு என்றும் எருத்து என்றும் அழைத்தனர். பண்டைத் தமிழர் போற்றிப் பாதுகாத்தனர். தம் உடைமையாக இவ்விலங்கு போற்றப்பட்டுள்ளது. காவிரிப்பூம்பட்டினத்தில் காளை மாடுகைளக் கட்டிப் பாதுகாக்கும் தெருக்கள் எனத் தனியாக அமைக்கப்பட்டிருந்தன. பல்வேறு தெருக்களைக் கூறும் பட்டினப்பாலை இதனையும் கூறுகிறது.

பகட்டெருத்தின் பலசாலை

தவப்பள்ளி தாழ்காவின் (பட்., 52)

என்பது காளைகளைக் கட்டி வைக்கும் தொழுவங்கள் இருந்ததைக் குறிப்பிடுகின்றது.

விட்ட குதிரை விசைப்பி னன்ன

விசும்தோய் பசுங்குழைக் குன்றநாடன்

யாம்தற் படர்ந்தமை அறியான் தானும்

வேனில் ஆனேறு போலச்

சாயினன் என்பரும் மாணலம் நயந்தே (குறு.,74)

என்று கட்டுத்தளையிலிருந்து அவிழ்த்து விடப்பட்ட ஆனேறு பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது. உழவுக்கும் பிற தொழிலுக்கும் பயன்படுத்தப்பட்ட காளைகள் இல்லங்களில் பாதுகாப்பாகக் கட்டப்பட்டிருந்த செய்தி இதன்கண் கூறப்பட்டுள்ளது.

பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக்

குடிபுறம் தருகுவையாயின் நின்

அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே (புறம் : 32–34)

என்பது பகடுகளைப் பாதுகாக்கும் உழவர் பற்றிக் குறிக்கிறது. புறந்தருநர் என்பது பாதுகாக்கும் மக்களைக் குறிக்கும். இவர்கள் உழவர்கள் அல்லது காளைகளைப் பாதுகாக்கும் பணியாட்களைக் குறிப்பதாக உரையாசிரியர்கள் கொள்வர்.

ஊரிலுள்ள பொது மன்றங்களில் இளங்கன்றுகளைக் கயிற்றால் கட்டியிருந்தமை நற்றிணைப் பாடலில் கூறப்பட்டுள்ளது.

கன்றுகால் யாத்த மன்றப் பலவின் (நற்., 213:2)

உழவர்கள் எருதுகளைப் பயன்படுத்தி ஏர் பூட்டி உழவு செய்தனர். பின்னர் அவற்றைப் பாதுகாப்புடன் இல்லத்தில் கொண்டு சேர்த்தனர்.

குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர

அரிகால் போழ்ந்த தெரிபகட் டுழவர்

ஓதைத் தெளிவிளி புலந்தொறும் பரப்ப (அகம்., 41:5–8)

என்பது அகநானூறு. நல்லானொடு பகடு ஓம்பியும் (பட்.201) என்பது பசுக்களையும் எருதுகளையும் பாதுகாத்த செய்தியாகும்.

### 3.2.4. பசுக்கள்

மக்களால் பாதுகாக்கப்பட்ட விலங்குகளுள் பசுக்கள் முக்கிய இடத்தைப் பெறுகின்றன. முல்லை நிலம் முதலாக அனைத்து நிலங்களிலும் இவ்விலங்குகளின் பயன்பாட்டை மக்கள் பெற்று வந்தனர். அவை பால், தயிர், வெண்ணெய் போன்றவையாகும். பசுக்களை இன்றும் போற்றும் வழக்கம் உள்ளது. உழவுத்தொழில் நவீன மயமான நிலையில் பகடுகளின் பயன்பாடு குறைந்து வருகிறது. பால் உற்பத்தி என்னும் அளவில் பசுவின் பயன் மிக அதிகமாகவே இருந்து வருகிறது. பசுக்களைப் பண்டைத் தமிழர் போற்றிப் பாதுகாத்த செய்திகள்

பல சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ளன. அவற்றை விளக்குவதாக இப்பகுதி அமைகிறது.

பால் தரும் பசுக்களை மக்கள் மிகவும் பாதுகாத்துள்ளனர். அதற்குத் தேவையான உணவுகளைத் தயாரித்துக் கொடுத்தனர். இத்தகைய விலங்குகளுக்கு அவ்வப்போது தேவையான உணவைத் தெரிந்து வைத்திருந்தனர். இப்பசுக்கள் நீரருந்தத் தனித் தொட்டிகளைப் பயன்படுத்தினர். பசுக்கள் உண்ணுதற்குரிய அளவு குறையாது எப்போதும் நீரினை நிறைத்து வைத்துள்ளனர்.

அறன்பொருந்து குன்றத்து உச்சிக் கவாஅன்
வேட்டச் சீறூர் அகன்கட் கேணிப்
பயநிரைக் கொடுத்த மணிநீர்ப் பத்தர்
புன்றலை மடப்பிடி கன்றோ டார
வில்கடிந் தூட்டின் பெயரும்
கொல்களிற் றொருத்தல அரன் இறந்தோரே (நற்., 92:4–9)

என்பது மேற்சுட்டிய கருத்தை விளக்குவதாகும். விலங்குகளுக்கு உணவளித்துப் பாதுகாக்கும் பண்பைப் பெற்றிருந்த தமிழர்களை இவ்வரிகள் அடையாளப்படுத்துகின்றன. பசுக்கள் வெளியிற் கொண்டு செல்லப்பட்டு, மீண்டும் திரும்பிக் கொண்டு வரப்பட்டுத் தொழுவத்தில் கட்டப்பட்டிருந்தன. அவை சேற்றுக்காலுடன் நின்றதையும் அதனால் அவை துன்பமடைந்ததாகவும் அத்துடன் பசுக்களின் தலையுச்சியையும் சேர்த்துக் கட்டியதாகவும் சொல்லப்பட்டிருப்பது கருதத்தக்கது.

இரைக்கும் வாடை இருள்கூர் பொழுதின்
துளியுடைத் தொழுவின் துணிவில் அற்றத்து
உச்சிக் கட்டிய கூழை ஆவின்

நிலையினின் ஒருவே னாகி

உலமரக் கழியும் பகன்மடி பொழுதே (நற்., 109:6–10)

என்று பசுக்கள் அடைத்த துயரம் புனையப்பட்டிருக்கிறது. ஆநிரைகளைத் தொழுவத்தில் கட்டிப் பாதுகாத்தலைக் குறுந்தொகை கூறுகிறது (குறு., 190).

ஆயர்கள் தம் இல்லத்துப் பின்புறமாகிய கொல்லைப்புறத்தில் பசுக்களை மேய வைத்திருந்தனர் என்பதை,

கார்செய் தென்னுழை யதுவே ஆயிடைக்

கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய

பெருமரவேரடிப் போல

அருளிலேன் அம்ம அளியென யானே (நற்., 289:9)

என்ற பகுதி குறிப்பிடுகின்றது. இது தலைவி கூற்றாக வருகிறது. பசுக்களை மேய்த்தல் அவர்தம் தொழிலுடன் உறவுடையதாயினும் அவர்களது அன்புணர்வையும் காட்டுவதாக பாடல் தொடர்கள் அமைந்துள்ளன.

உருமிசை அறியாச் சிறுசெந் நாவின்

ஈர்மணி இன்குரல் ஊர்வயின் இயம்பப்

பல்லான் தந்த கல்லாக் கோவலர்

கொன்றையந் தீங்குழல் மன்றுதோ றியம்ப

உயிர்செலத் துனைதரும் மாலை

செயிர்தீர் மாரியொ டொருங்குதலை வரினே (நற்., 3466–12)

ஆநிரைகளை மேய்ப்பது அவற்றிற்குரிய பாதுகாப்பென கூறப்பட்டிருத்தல் காணத்தக்கது. தனிப்பட்ட மக்கள் அல்லாது மன்னர்களே பசுக்களைப் பாதுகாப்பதில் தனிக்கவனம் செலுத்தினரென்பதைச் சங்கப் பனுவல்கள் அறிவிக்கின்றன. புறத்திணையிலுள்ள வெட்சி என்னும் திணை பசுக்களைக் கவர்ந்து வருவதாகவும் அவ்வாறு கவர்ந்து வரும் நிரைகளைப் பாதுகாப்புடன் கொண்டு வந்தனர் என்றும், கொணர்ந்த நிரைகளை அவர்கள் தம் தகுதிக்கேற்ப

வீரர்களுக்கும் புலவர்களுக்கும் வழங்கினர் எனவும் கூறுகிறது.[11] இவ்வாறு கொண்டு வந்ததையன்றிப் போரின் கண்ணும் ஆநிரைகட்குத் தீங்கு வராது போற்றினர் என்று குறுந்தொகை பேசுகிறது.

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி
முனையான் பெருநிரை போலக்
கிளையொடங் காக்க தன்கொழுநன் மார்பே (குறு., 80:4–7)

எழினி அதியமானஞ்சி. இவன் தன்நாட்டு மீது படையெடுத்துப் பசுக்களைப் பிற அரசர் வென்றபோது பசுக்களை விடாது காத்தான் என்பது வரலாறு. இக்கருத்தை விளக்கும் புறநானூற்றுப் பாடல் காணத்தக்கது.

ஆவும் ஆநிரை பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் நும்மரண் சேர்மின்
எம்அம்பு கடிவிடுதும் (புறம்: 1–3)

என்ற புறநானூறு பாடலடிகளில் பசுக்களை அக்கால மன்னர்கள் பாதுகாத்த செய்தி புலப்படுத்துகின்றது. போர்க்காலம் என்பது மிகுந்த நெருக்கடியை உடைய காலம். எவ்வாறேனும் வெற்றி பெற வேண்டும் என்பதுதான் மன்னர்களின் எண்ணமாக இருக்கும். அத்தகைய நேரத்திலும் அறநெறி காத்துப் பசுவைப் போற்றியது. ஆநிரைகளைச் சங்க காலத்து மக்கள் போற்றியதை விளக்குகிறது. மேலும் அவர்தம் உயிரிரக்க உணர்வையும் வெளிப்படுத்தும்.

தேம்பிழி நறுங்கள் மகிழின் முனை கடந்து
வீங்குமென் சுரைய ஏற்றினம் தரூஉம் (அகம்., 105:14–15)

பசும்பால் சமூகத்தில் உயர்ந்த பொருளாகக் கருதப்பட்டது. பசுக்கள் நிறையப் பால் தந்தன என்பது நாட்டு வளத்தையும் வீட்டு வளத்தையும் காட்டுவதாக கருதப்பட்டது. மன்னர்களைப் புலவர்கள் பலவாறு வாழ்த்திப் பாடுவது வழக்கம்.

உம் நிலம் நெல் விளையட்டும் என்றும் நீர் பெருகட்டும் என்றும் செல்வம் வளருதல், புகழ் வளர்தல் ஆகியவை நடக்கட்டும் என்றும் வாழ்த்துவது மரபாக இருந்தது. சில புலவர்கள் சில அரசர்களை இவ்வாறு வாழ்த்தாது, உம் நாட்டில் நிரம்பப் பால் பெருகட்டும் என வாழ்த்துதலும் நிகழ்ந்துள்ளது. தம் மனக்கருத்தை இவ்வாறு வெளியிடும் பண்பு நன்கு பின்பற்றப்பட்டு வந்தது. பால் நிறையப் பொழிதல் வேண்டும் என்று வாடும் புலவர் சில நேரங்களில் பாடுகின்றனர். பால் பல உறுக என்னும் தொடர் குறுந்தொகையில் இடம்பெற்றுள்ளது.

வாழி யாதன் வாழி யவனி
பால்பல ஆறுக பகடுபல சிறக்க
எனவேட் டோளேயாயே யாமே
வித்திய உழவர் நெல்லொடு பெயரும்
பூக்கஞு லூரன் றன்மனை
வாழ்க்கை பொலிக வெனவெட் டேமே (ஐங்., 3)

என்ற செய்யுளில் இத்தொடரைக் காணலாம். இதற்கு உரையாசிரியர் எழுதும் உரைகளும் எண்ணத் தக்கனவாம். பசுக்கள் குறித்த சமூகமதிப்பை இது காட்டுகிறது.

அன்னாய் வாழி வேண்டன்னை நின்மகள்
பாலும் உண்ணான் (அக., 48:2)

என்பதில் பசுப்பால் உணவாகக் குறிக்கப்பெற்றுள்ளது. இதன்வழிப் பசுவின் பயன்பாடு உணர்த்தப்பட்டது. பிற விலங்குகளைக் காட்டினும் பசு போற்றப்படுவதாகும்.

அஃறிணை உயிர்களாகவும் பால் தருவதாகவும் பயன்பட்ட பசுக்களைத் தனித்துக் கட்டியிருந்தனர். தாய்ப்பசுக்கள் அவ்வாறு கட்டப்பட்டிருந்த இடத்தில் நின்று தன் கன்றுகள் மீது பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தன. பசு தன் கன்றுகளைப் பார்த்து கொண்டே இருந்ததென்பது விளங்குமாறு அமைந்துள்ளது.

பசுக்களை மேய்க்கும் ஆயர்கள் குழலூதி மகிழ்ந்தனர் என்பது சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. இவர்கள் இசைக்கும் குழற்கருவியின் ஒசையைப் பசுக்கள் கேட்டு இன்புற்று இயல்பினும் மிகுதியாகப் பால் சொரிந்தன என்று புராணங்களிலும் பக்தி இலக்கியங்களிலும் உணர்த்தப்பட்டுள்ளன. அவர்கள் குழலோசையைக் கேட்டுக் கொண்டே பசுக்கள் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றன. பசுக்களை மனம் மகிழச் செய்வதில் ஆயர்கள் அக்கறை காட்டினர்.

கனயலம் குரல காற்பரி பயிற்றிப்
படுமணி மிடற்ற பயநிரை ஆயம்
கொடுமடி உடையர் கோற்கைக் கோவலர்
கொன்றையம் குழலர் பின்றைத் தூங்க (அக., 54:10–13)

என்ற அகப்பாடலுள் கூறப்படும் செய்தி பசுக்களை மகிழச்செய்த மக்களின் செயல்கள் கூறப்படுகின்றன. குழலோசை கேட்டு இல்லம் சேர்ந்த ஆவினங்களை அவை இருக்குமிடத்தில் இட்டுக் காத்தனர். இல்லத்தில் வைத்துக் காத்தனர் என்பது இங்குக் குறிக்கத்தக்க செய்தியாம். பசுக்களையும் கன்றுகளையும் இணைத்து ஒரே இடத்தில் அமர்த்தியிருந்ததும் இங்கு பெறப்படுகின்றது.

பசுக்கள் நீர்வேட்கையிலிருப்பதைக் கண்ட ஆயர்கள் அவற்றிற்கு நீரூட்டச் சிறு குழிகளைத் தோண்டினர். அவற்றிலிருந்து கிடைக்கும் நீரை அவை குடித்தன. ஆவிற்கு நீரூட்டல் ஓர் அறமாகவே தமிழில் சொல்லப்படுகின்றது. திருக்குறள் இதனை,

ஆவிற்கு நீரென றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்[13]

எனக் குறிப்பிடுகிறது. ஆவிற்கு நீரூட்ட வேண்டுமெனினும் பிறரைக் கேட்கக் கூடாதெனக் கண்டித்துக் கூறப்பட்டிருப்பதால் இவ்அறத்தின் சிறப்புப் புலனாகும். தமிழ் நீதி நூல்களில் பசு பற்றிய அறவழிச் சிந்தனைகள் சொல்லப்பட்டுள்ளன. புறநானூற்றில்,

ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாணிழை மகளிர்க் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர் தப்பிய கொடுமை யோர்க்கும்
வருவாய் மருங்கிலும் கழுவாய் உண்டனெ
ஒருவர் செய்தி தப்பியோர்க் குய்தி இன்றென
அறம்ப ாடிற்றே ஆயிழை கனவ (புறம்:1–6)

என்று பாடப்பட்டிருப்பது எண்ணத் தக்கது. இப்பாடலில் கூறப்பட்ட பல்வகைக் குற்றங்களில் ஆவிற்கிழைத்த கேடும் கூறப்பட்டுள்ளமையால் பசு பற்றிய தமிழ்ச் சமூகத்தின் அறவியற் கொள்கை புலனாகும். அகநானூற்றில் ஆவின் நீர் வேட்கையைக் கண்ட ஆயர்கள் விரைந்து செய்யும் செயல் அவர்களின் அறம்சார் உள்ளத்தை வெளிப்படுத்தும். பசுக்களை மேய்ந்த கோவலர்கள் பசுக்களுக்கு நீரூட்ட சிறு சிறு குழிகளைத் தோண்டினர் எனக் குறிக்கப்பட்டுள்ளது.

பயநிரை சேர்த்த பாண்நாட் டாங்கண்
நெடுவிளிக் கோவலர் கூவல் தோண்டிய
கொடுவாய்ப் பத்தல் வளர்ந்துரு சிறுகுழி (அகம்., 155:8–9)

என்பது அகம்.

புறப்பொருள் வெண்பா மாலையில் நோயின்றுய்த்தல் என்ற ஒருதுறை காணப்படுகிறது. இது வெட்சியைச் சேர்ந்தது. பகைவர் நாட்டிலிருந்து கவர்ந்து வரும் ஆநிரைகளை இடைவழியில் எவ்வித இன்னலுமின்றிப் பாதுகாப்பாகக் கொண்டு செல்லுதல் என்பது இதன் பொருள்.

அருஞ்சுரத்தும் அகன்கானத்தும்

வருந்தாமல் நிரையுய்த்தன்று[14]

எனக் கூறப்பட்டுள்ளது. இதற்கு எடுத்துக்காட்டாகத் தரப்பெற்றுள்ள வெண்பாப் பாடல்,

புன்மேய்க் தசைஇ புணர்ந்துடன் செல்க என்னும்

வின்மேல் அசைஇயகை வெல்கழலான் –தன்மேற்

கடுவரை நீறிற் கடுத்துவரக் கண்டும்

நெடுவரை நிழல் நிரை[15]

என அமைந்துள்ளது. இப்பாடலில் ஆநிரைகளைப் பாதுகாப்புடன் கொண்டு வந்த செய்தியுரைக்கப்பட்டுள்ளது. இதுபோலப் பசுக்களுக்குப் பிற உடலின்னல்கள் வரக்கூடாது என்பதில் பண்டைத் தமிழ் மக்கள் எச்சரிக்கையுடன் இருந்துள்ளனர். பொதுவாகப் பசுக்கள் பசுந்தழைகள் அனைத்தையும் உணவாக உட்கொள்ளும். நெற்கதிர்களையும் உட்கொள்ளும், நெற்கதிர்களை அதிகம் உட்கொண்டால் அவற்றிற்கு வயிற்றுத் தொல்லைகள் உண்டாகும். அதற்கு அஞ்சிய மக்கள் கரும்புச் சோலைகளை ஆநிரைகளுக்கு உண்ணக் கொடுத்தனர். பின்னர்ப் பாகற்கொடி, பகனிறைக் கொடி போன்றவற்றைக் கட்டித் தொங்க விட்டனர். இக்கொடிகளில் ஆநிரைகளுக்குரிய மருத்துவக்குணம் இருந்ததாகத் தெரிகிறது. இது,

செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புளிற்றுக்கதிர்

மூதா தின்றல் அஞ்சிக் காவலர்

பாகல் ஆய்க்கொடிப் பகன்றையொடு பரீஇக்

காஞ்சியின் அகத்துக் கரும்பருத்தி ஆக்கும்

தீம்புனல் ஊர (அக., 156:3–7)

எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்ற மன்னன் மீது பதிற்றுப்பத்துப் பாடப் பெற்றுள்ளது. அரசர்களின் தவறாத கடமைகளுள் ஒன்று அவர்தம் தேசத்திலுள்ள ஆடு, மா போன்ற விலங்கினங்களைப் பாதுகாப்பதாகும்.

அரண்மனை யானையைக் குறிப்பிட்ட பாகன் ஓட்டிச் சென்றதையும் அவ்வாறு யானை செல்கிறது என்பதை பறையறிவித்து மக்களிடம் கூற வேண்டும் என்பதையும் அரசக்கடனாக இலக்கியங்கள் பேசுகின்றன.

> நீயும் தவறிலை நின்னைப் புறங்கடைப் போதர
> விட்ட நுமரும் தவறிலர் நிறை அழீ கொல்
> யானை நீர்க்கு விட்டாங்கு பறை அறைந்தல்லலது
> செல்லற்க என்னா இறையே தவறுடையான் (கலி.56:30–33)

என்பது சங்க இலக்கியம். இதனால் விலங்குகளைப் போற்றுதலும் பாதுகாத்தலும் அரசற்குரிய கடனென இலக்கியங்களிலும் கூறப்பட்டது. தமிழ் இலக்கியத்தில் பதிற்றுப்பத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் புகழ எண்ணும் புலவர் பாலைக் கௌதமனார், அவனைப் பகைத்துக் கொண்ட மன்னர்கள் ஆநிரைகளைப் பாதுகாக்கும் அறத்தையும் செய்ய இயலாதெனப் பாடுகிறார்.

> இனந்தோடு அகல ஊருடன் எழுந்து
> நிலங்கண் வாட நாஞ்சில் டிந்துநீ
> வாழ்தல் ஈயர வளனறு பைதிரம்
> அன்ன வாயின பழனந் தோறும்
> ஆான்மலி தாமரை ஆம்பலொடு மலர்ந்து (பதிற்., 16–20)

என்பது அது. இதன்கண் விலங்குகளைப் பாதுகாத்தல் அறம் என்பதும் அதுவும் மன்னர்களும் தவறாது செய்தற்குரியதென்றும் கூறப்பட்டுள்ளது. பண்டைத் தமிழரின் விலங்குகள் மீதான அன்பும் இரக்கமும் இதன்கண்ணும் சுட்டப்பட்டன. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பற்றிச் சங்க நூல்கள் பலவற்றில் சிறப்பித்துக் கூறப்படுகின்றன. அவற்றுள் பெரும்பகுதியில் அவன் வெற்றிச் சிறப்புகளுள் ஆவினங்களைப் பாதுகாத்தல் முக்கியப் பணியெனவும் அதனைச்

செய்யாமல் பகை நாட்டினர் தப்பினர் எனவும் கூறுவது விலங்குகளைப் போற்றும் உன்னத குணமாகும். இனம் என்பது விலங்கினமாகும்.

பண்டைத் தமிழகத்தில் குறிப்பாகச் சங்க இலக்கியங்கள் தோன்றிய சற்றொப்ப அறுநூறு ஆண்டு கால எல்லையில் தமிழ் மக்களிடத்தில் உழவுத்தொழில் பற்றிய அறிவு வளர்ந்திருந்தது. நெல் மற்றும் மேலும் பல உணவுப் பொருள்கள் நன்கு விளைந்திருந்தன. தினை பரவலாகப் பேசப்பட்டது. கனிதரும் மரங்களும் பாதுகாக்கப்பட்ட சோலைகளும் நிறைந்திருந்தன. இவற்றை வளர்க்கத் தனித்தனியே பண்படுத்தப்பட்ட நிலங்கள் அமைக்கப்பட்டிருந்தன. நிலம் நன்செய் என்றும் புன்செய் என்றும் பிரிக்கப்பட்டிருந்தது. இவற்றில் விளையும் பயிரினங்கள் பேசப்பட்டுள்ளன.[16] நீர்ப்பாசன வசதிகளும் செய்யப்பட்டிருந்தன. மருந்துச் செடிகள் உயர்வகை மரங்கள் போல்வன வளர்க்கப்பட்டன. உழவுக்கு உதவும் எருதுகள் போற்றிப் பாதுகாக்கப்பட்டன. ‘ஏறுபோல் பீடுநடை’[18] எனக் கூறியிருப்பது உழைக்கும் எருதினை என்றுணர்தல் வேண்டும். உழவுத் தொழிலுக்குப் பயன்படும் எருதுகளும் பால்தரும் பசுக்களும் கன்றுகளும இல்லங்களில் வளர்க்கப்பட்டன. ஊர்ப்புறத்தில் இவை மேய்தற்கென்று தனியிடங்களை ஒதுக்கி அதன்கண் புல் வளரச் செய்திருந்தனர். இது பண்டைய மக்களின் பரிவுணர்ச்சியைக் காட்டுவதாகும்.

புலம்பா உறையுள் நீதொழில் ஆற்றலின்
விடுநிலைக் கரம்பை விடரனை நிறையக்
கோடை நீடக் குன்றம் புல்லென
அருவியற்ற பெருவற்ற காலை
நிவந்து கரை இழிதரு நனந்தலைப் பேரியாறு (பதிற்., 28:6–10)

என்று பதிற்றுப்பத்தில் கூறப்பட்டுள்ளது.

**3.2.5. குரங்கு**

குரங்குகள் மக்களுடன் நெருங்கி இருக்கும் இயல்புடையது. இன்றும் குரங்குகளை மக்கள் வேடிக்கை நிகழ்ச்சிகளைச் செய்துகாட்டப் பயன்படுத்துகின்றனர். வீடுகளில் நாய்களை வளர்க்கும் பழக்கம் கிராமங்களிலும் நகர்ப்புறங்களிலும் காணப்படுகிறது. பண்டை நாளில் குரங்குகளை மக்கள் அவ்வாறு வளர்த்தனர் என்பதை இலக்கியங்களின் வழி அறிய முடிகிறது. வீட்டுக் குழந்தைகளும் குரங்குக்குட்டிகளுடன் இணைந்து விளையாடினர் என்பதைப் பாடல்களில் காண முடிகிறது. மக்கள் செல்லுமிடங்களுக் கெல்லாம் அவர்களுடன் பின்தொடர்ந்து அவை சென்றன என்ற குறிப்புகள் விலங்குகளுக்கும் மக்களுக்கும் இருந்த உறவினை வெளிப்படுத்துகின்றது.

> நாடக மகளிர் ஆடு களத்து எடுத்த
> வீசி வீங்கு இன்னியம் கடுப்பக் கயிறு பிணித்து
> காடி வைத்த கலனுடை மூக்கின்
>
> கோட்டினர் வேம்பின் தட்டிலை மிடைந்த
> படலைக் கண்ணிப் பருவேர் ஏறூழ்த்திணிதோள்
> முடலை யாக்கை முழுவலி மாக்கள்
> சிறுதளைக் கொடுநுகம் நெறிபட (சிறுபா., 55–62)

என்று ஆற்றுப்படை நூல் கூறுகிறது. இதன்கண் வரும் உப்பு வணிகர்கள் உப்பு விற்பதற்காக ஊர்விட்டு ஊர் சென்றமையும் அவர்கள் ஓட்டிச் சென்ற வண்டிகளைப் பின் தொடர்ந்து குரங்குக் குட்டிகளும் சென்றன எனக் கூறப்பட்டமையும் குரங்கைப் போற்றும் மனிதர்களை அடையாளப்படுத்துவனவாகும். இதுபோலவே பல்வேறு செயல்கள் பழந்தமிழ் இலக்கியங்களில கூறப்பட்டுள்ளன. மலைகளில் குரங்குகள் விளையாடியமை பிற விலங்குகளுக்கு அஞ்சி ஓடினமை[19] பலாக்கனிகளை விரும்பியுண்டமை

போன்றவை குறிப்பிட்டுச் சொல்லத்தக்கனவாகும். உள்ளுறை இறைச்சிப் பொருளாகவும் பல இடங்களில் குரங்குகள் சுட்டப்பட்டுள்ளன.

### 3.2.6. குதிரை

குரங்குகளைப் போலக் குதிரைகள் போற்றப்பட்ட முறையும் சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. குதிரைகள் பெரும்பகுதியும் போருக்குப் பயன்படுத்தப்பட்டன. மன்னர்கள் ஏறிச் செல்லும் தேர்களை இவை இழுத்துச் சென்றன. இவற்றை அவர்கள் போற்றியதை,

> புள்ளுநிமிர்ந் தன்ன பொலம்படைக் கலிமா
> வலவன் கோலுறல் அறியா
> உரவுநீர்ச் சேர்ப்பன் தேர்மணிக்குரலே (நற்., 78:9–12)

என நற்றிணை கூறுகின்றது.

### 3.2.7. யானைகள்

யானைகளைப் பாதுகாத்தலில் அரசரும் அரசர் சார்ந்து வாழுவோரும் முதன்மையாகக் கருதப்பட்டனர். யானைகள் இருக்கும் இடமாக அரண்மனை கூறப்பட்டது. யானை வளர்ப்பு, யானைப் பயிற்சி போன்றவற்றைச் செய்யத் தனியே ஆட்கள் அமர்த்தப்பட்டிருந்தனர். போருக்குச் செலுத்தப்படும் யானைப் பிற யானைகளிடமிருந்து வேறுப்பட்டிருந்தது. யானையின் தந்தங்கள் பயன்படுத்தப்பட்டன. யானைப் பாதுகாப்புக் குறித்த தகவல்களைப் புறநானூறு மிகுதியாகப் பேசுகிறது. போர்க்கள நிகழ்ச்சிகளுக்குப் பயன்படுத்தப்பட்ட யானை களிறு என்றழைக்கப்பட்டது. பெண்யானை பிடி என் பெயரிடப்பெற்றது. பெண்யானையின் துதிக்கை பெண்களின் பின்னிய கூந்தலுக்கு உவமையாயிற்று பிடிக்கையன்ன பின்னகம் . 9: 22) என்பது அது. இவ்வாறு பல்வேறு சூழல்களில் குறிக்கப்பெறும் யானையின் பாதுகாப்பு, மன்னர் அரசியலில் முக்கியப் பங்கு வகித்தது. நாட்டின் வளத்தைச் சிறப்பிக்க புலவர் அதற்குரிய மன்னனைப் பாடுங்கால்,

ஒருபிடி படியும் சீறிடம்

எழுகளிறு புறக்கும் நாடுகிழ வோயே (புறம்., 40:10–12)

எனப் பாடுகின்றார். களிறும் பிடியும் இட அளவுக்கும் விளைச்சல் மிகுதிக்கும் யானைகளைப் புறத்திற்கும் கூறப்பட்டிருப்பது காணற்குரித்து. போர்க்களத்தில் போர் செய்யும் யானைகளைக் காப்பாற்றும்படி மன்னன் ஆணையிடுகிறான்.

முரசு முழங்கு தானைநும் அரசும் ஓம்புமின்

ஒளிறு ஏந்து மருப்பின் நும்களிறும் போற்றுமின் (புற., 301:6)

என்று புறப்பாட்டில் கூறப்பட்டுள்ளது. யானைக்குப் பாகன் உணவூட்டிப் பாதுகாத்ததைப் புறநானூறு,

பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த

பெருங்களிறு (புற., 220:1–2)

எனப் பேசுகின்றது.

ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்

நீர்த்துறை படியும் பெருங்களிறு (புறம்.,94:1–2)

என்பது யானைகளை ஓட்டிச் சென்று நீர்த்துறையில் தூய்மைப்படுத்தி வந்தனர் எனக் கூறுகின்றது. மற்ற விலங்குகளைத் தனியே செலுத்துதல் போலன்றி யானைகள் நீர்த்துறைப்படிதற்கும் தனிக்கவனம் செலுத்தப்பட்டுள்ளமை அறியத்தக்கது.

காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே

மாநிறைவு இல்லதும் பன்நாட்கு ஆகும் (புறம்., 184:1–2)

என்பத யானைக்கு நெல் அரிசிச் சோற்றை உணவாக அளித்தனர் எனக்கூறும் அரிசியைச் சோறாக்கி அதனைக் கவளமாக்கி அது உண்ணுமாறு கொடுத்தல் சிறப்புக்குரியதாகும்.

போருக்குப் பயன்படுத்தப்பட்ட யானைகள் தனிச்சிறப்பும் பாதுகாப்பும் கொண்டவை. அவற்றை வெய்யிலில் வாடாது காக்கும் சிந்தனைக் கொண்ட மக்கள் அதற்கெனத் தனி இடத்தையும் தேர்ந்தெடுத்தனர். மிகுந்த எண்ணிக்கையில் அவை இருந்ததால் அவற்றை நிழல்தரு மரங்களின் அடியில் கட்டி வைத்திருந்தனர். அவை அங்கும் இங்குமாக அசைந்தபடி நின்றன. இதனைப் புறநானூறு,

விளங்குறு பராரைய பாயினும் வேந்தர்
வினைநவில் யானை பிணிப்ப
வேர்துளங் கினநம் ஊருள் மரனே (புறம்., 347:11–12)

எனக் கூறுகின்றது.

தெருக்களிலுள்ள மரங்களில் கட்டியது போலவே பூங்காக்களில் உள்ள மரங்களிலும் இவ் யானைகளைக் கட்டி வைத்தனர் என்ற குறிப்பும் காணப்படுகிறது. அங்குக் கட்டப்பட்ட யானைகள் பூங்காவே அதிரும்படியாக ஒலி எழுப்பின.

களிறு அணைப்பக் கலங்கின காஅ (புற., 345:1)

எனக் கூறப்படுவது இதனை உணர்த்தும்.

பூஞ்சோலைகளில் தனித்தனி மரங்களில் கட்டப்பட்ட யானைகளுக்கு தனியே உணவு சமைத்து எடுத்துச் சென்று, அவற்றை யானைகளுக்குக் கொடுத்தனர். அவை உண்பதைக் கண்டு மன்னர்கள் மனம் களித்தனர். இது,

சாய்நெல் கவளம் தீற்றிக் காவுதொறும்
கடுங்ககண் யானை காப்பனர் அன்றி
வருத லானோர் வேந்தர் (புற., 337:14–16)

எனக் கூறப்படுகிறது.

<u>செயல்களைப் போற்றுதல்</u>

விலங்குகளின்பால் அன்பு கொண்ட மக்கள் அவற்றின் துயரங்களைக் கண்டு இரங்கியதுடனன்றி அவை செய்யும் நற்செயல்களையும் இயல்பாக அவற்றிடத்துக் காணப்படும் நற்குணங்களையும் போற்றினர். அக்காரணம் பற்றி அவைகளிடம் அன்பு காட்டினர். இன்னபிற ஏதுக்களால் பொதுவாக மக்கள் கொண்டிருந்த உயிரிரக்கம் தெளிவாகும். இத்தகைய பணபாட்டு உணர்வுகள் தமிழர்களிடத்துத் தொன்றுதொட்டு இருந்து வந்ததைக் தமிழர் மரபு எனக் கூறுகின்றனர். மனிதகுலம் பல்லாயிரம் ஆண்டுகளாகப் படிப்படியாக முன்னேறி வந்திருக்கிறதென்று அறிஞர்கள் கூறியுள்ளனர். இந்த ஆய்விற்கொப்பத் தமிழினமும் சிறந்து விளங்கியமையை உணரலாம். அதற்குச் சங்க இலக்கியங்களே சான்று பகர்வன. மனிதகுல முன்னேற்றம் பற்றி,

> மனிதகுலம் வளர்ந்து வந்திருக்கிறது. எமது முன்னோரின் அனுபவங்கள் எங்கள் அனுபவங்களாகவும் எங்கள் புதிய அறிவுக்கெல்லாம் அடித்தளங்களாகவும் புதிய அனுபவங்கள் புதியனவற்றைத் தடுப்பனவாகவோ அன்றேல் புதிய அனுபவங்கள் பிழையானவற்றையும் மறுப்பனவாகவோ இருக்க வேண்டும் என்பதில்லை[21]

என்று சமூக மாற்றத்தை உலகம் முழுமைக்கும் எடுத்துரைக்கிறார் சி.தில்லைநாதன். சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் விலங்குகளின் செயல்களைப் புலவர்கள் தனித்த மனநெகிழ்ச்சியுடன் பாடியுள்ளார். பொதுவாக அவற்றின் செயல்கள் அன்பு நிறைந்து காணப்பட்டன. ஒவ்வொரு விலங்கும் தம் இனஞ்சார்ந்த விலங்குகளைச் சார்ந்திருந்தன.

விலங்குகளின் இந்த ஒன்றுபட்ட தன்மையை ஐங்குறுநூறு சிறப்பித்துக் கூறுகிறது. இவை மனிதர்களைப் போல ஒழுக்கமும் பண்பும் உடையன எனப் போற்றப்படுதல் எண்ணத்தகக்து.

உயிர்கலந் தொன்றிய செயிர்தீர் கேண்மைப்

பிரிந்துற லறியா விருந்து கவ்வி

நம்போ னயவரப் புணர்ந்தன

கண்டிகு மடவரல் புறவின் மாவே (ஐங்., 419)

என்ற செய்யுள் அஃறிணை உயிரினங்களாகிய மானும் முயலும் பிறவுமாகிய விலங்குகளும் நம்மைப் போல் உடம்பால் மட்டுமின்றி, உள்ளமும் கலந்து ஒருமைப்பட்ட, குற்றமற்ற காதல் கேண்மைக் கொண்டு விளங்கின என்று தலைவன் கூற்றாக அமைகிறது.

விலங்குகள் பிரியாமல் தமக்குள்ளே ஒன்றுபட்டுக் கிடப்பதைத் தலைவன் தலைவியை உடன்போக்கில் கொண்டு சென்றதைக் காட்டுமிடத்து இப்பாடல் எடுத்துக்காட்டாகச் சுட்டப்பெற்றது. இது எல்லா விலங்குகளின் பொதுப்பண்பைக் குறிக்கிறது. குறிப்பிட்ட சில விலங்களின் செயற்பாடுகள் உயர்ந்த இலட்சியப் போக்குடன் கூறப்பட்டுள்ளன.

1. குரங்கு
2. குதிரை
3. பசு
4. பன்றி
5. மான்
6. யானை

போன்ற விலங்குகளில் பசுவின் நுணுக்கமான நடத்தைகளைப் புலவர்கள் உயர்வாகப் பாடுவது கருதத்தக்கது. ஆண்குரங்கு காட்டில் பலாக்கனியைப் பறித்தது. அது தன் பசிக்கு அக்கனியைப் பயன்படுத்தாது பெண் குரங்கிற்காகக் காத்திருந்தது என்ற கற்பனையைப் புலவர் பாடுகிறார். அஃறிணைகள் தாம் பெற்ற உணவினைத் தம் இனத்திற்கும் கொடுத்துண்ணும் பழக்கத்தை இயல்பூக்கமாகக் கொண்டிருப்பதை அறிவியல் நூல்கள் உணர்த்துகின்றன. இயல்பூக்கமாக அனிக்சைச் செயல் போல் அமைந்த இதனைக் கவிதையின் பாடுபொருளாக்கிப் புலவர் பாடியுள்ளார்.

குரங்கு

குரங்குகளின் பல்வேறு செயல்களைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக் கூறுவதன் மூலம் அவற்றின் மீது புலவர்கள் கொண்டுள்ள நல்லுணர்வு வெளிப்படுகின்றது.

முடிவுமுதிர்பலவின் குடமுள் பெரும்பழம்
பல்கினைத் தலைவன் கல்லாக் கடுவன் (அக., 352:1–2)

என்பது அகநானூறு. குரங்கின் செயல் பெண் குரங்கிற்காக உணவை வைத்துக் கொண்டு காத்திருத்தலாகும்.

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்ன நீரார்க்கே உள (குறள். 527)

என்கிறார் வள்ளுவர். இயல்பான நிகழ்வை மனிதப் பண்புகளுடன் இணைந்து பார்ப்பது இது.

சமுதாயத்தில் குடும்பம் என்ற நிறுவனத்தில் தந்தைக்கு முக்கியப் பங்குண்டு. குடும்பத்தின் தலைவர் தந்தையே, தற்காலத்தில் பொருள் தேடல், ஆண், பெண் என்னும் இருபாலர்க்கும் உரியதாக இருப்பினும் குடும்பத் தலைமை ஆணுக்கே கொடுக்கப்பட்டுள்ளது. பழந்தமிழ் இலக்கியம் இந்தச் சமூகப் பொறுப்புக்களையும் கடமைகளையும் அவரவர்க்குரியவாறு பாடுகிறது.

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தர்க்கக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லார்க்குக் கடனே
அருஞ்சமம் ஒள்வாள் முருக்கி
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே (புறம்.,312 )

என்பது புறநானூறு.

குடும்பக் கடமையை உணர்ந்த குரங்கொன்று குட்டிகளுக்கு இரை தேடிச் சென்றது என அகநானூறு கூறுகின்றது.

அருவரை இழிதரும் வெருவரு படாஅர்க்
கயந்தலை மந்தி உயங்குபசி களைஇயர்
பார்ப்பின் தந்தை பழச்சுளை தொடினும்
நனிநோய் ஏய்க்கும் பனிகூர் அடுக்கம் (அக., 288:11–14)

என்று குரங்கின் செயல் புனையப்பட்டிருக்கிறது.

குரங்குகள் தங்கள் குட்டிகளைத் தழுவிக் கிடக்கின்றன என்பதைக் குறுந்தொகை விவரிக்கிறது.

நல்லுரை இகந்து புல்லுரை தாஅய்ப்
பெயல்நீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளம் தாங்கள் வெள்ளம் நீந்தி
அரிதவா உற்றனை நெஞ்சே நன்றும்
பெரிதால் அம்மநின் பூசல் உயர்கோட்டு
மகவுடை மந்திபோல
அதனுறத் தழீஇக் அகட்டுநேர்ப் பெறினே (குறு., 29:6–7)

என்பது அப்பாடல். தலைவன் தன் நெஞ்சை நோக்கிக் கூறிய கூற்று இது.

குரங்கு தன் குட்டியைத் தாயன்புடன் தழுவிய செயல் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. தன் குட்டியைத் தழுவியவாறு பசுவின் பாலைக் குட்டிக்கு ஊட்டியதை நற்றிணை விளக்குகிறது.

தடங்கோட் டாமான் மடங்கால் மாநிரை
குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தெனத்
துஞ்சுபதம் பெற்ற துய்த்தலை மந்தி
கல்லென்சுற்றம் கைகவியாக் குறுகி
வீங்குஅரை ஞெமுங்கு வாங்கித தீம்பால்
கல்லா வன்பறழ் கைந்திரை பிழியும்மாமலை நாட (நற்., 57:1–7)

என்பது நற்றிணை. குரங்கு, குட்டிக்குப் பாலூட்டிய செயல் இதன்கண் புனையப்பட்டுள்ளது.

குரங்கு தன் குட்டியைக் காத்ததை ஓம்படை செய்ததெனக் குறுந்தொகை கூறுகிறது. ஆண் குரங்கு இறந்து விடவே இனி உயிர்வாழ்தல் ஆகாதெனக் கருதிப் பெண்குரங்கு தன் குட்டிகளை மற்றக் குரங்குகளிடம் விட்டு விட்டு மலை உச்சியிலிருந்து கீழே குதித்து உயிர்விட்டது என்பதை,

கருங்கண் தாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை உய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை ஆடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
சாரல் நாட நடுநாள்
வாரல் வாழியோ வருந்துதும் யாமே (குறு., 69)

என்ற பாடல் குறிப்பிடுகின்றது. அஃறிணைப் பொருள்களும் மேற்கொண்ட அன்புணர்வை விளக்குவதன் மூலம் அவற்றின் மேல் புலவர் கொண்ட அன்பும் இரக்கமும் விளங்குகிறது. தினைப்புனத்தில் தன் குட்டிகளுடன் பெண் குரங்கு வந்து நின்றது. தினைக் கதிர்களைக் குட்டிகள் உண்ண அவை மகிழ்ந்தன என்ற கருத்து,

சுனைபாய் சோர்விடை நோக்கிச் சினை இழிந்து
பைங்கண் மந்தி பார்ப்பொடு கவரும்
வெற்பிடை நண்ணியதுவே வாரிகோல்
வல்விற் கானவர் தங்கைப்
பெருந்தோட் கொடிச்சி இருந்த ஊரே (குறு., 336)

என்று தெரிவிக்கின்றது. பார்ப்பு, குரங்கினத்தின் இளமைப் பெயரைக் குறிக்கும். தினைப்புனத்திற்கு உணவு தேடச் செல்லும் தாய்க்குரங்குகள் குட்டிகளையும்

கொண்டு சென்றுள்ளமை அதன் தாய்மை உணர்வைக் காட்டுகிறது. மேலும் அங்குக் குட்டிகளுக்கும் அவை உணவைக் கொடுத்து மகிழ்ந்தன என்பதும் இப்பாடலால் அறிய முடிகின்றது.

<u>பசுக்கள், பன்றி, நாய்</u>

பசுக்களின் அறியத்தக்க செயல்களால் அவற்றின் பண்புகள் போற்றப்பட்டுள்ளன. இத்தகைய பண்புகளைக் கொண்ட விலங்கினங்களைப் போற்றியிருப்பது அவற்றின் மீது மக்கள் கொண்டிருந்த அன்புணர்வுகளையும் நன்மதிப்பையும் காட்டுவதாகப் புனையப்பட்டுள்ளன. காலையில் வீடுகளிலிருந்து ஆயர்களும் பிற சிறுவர்களும் பசுக்களை மேய்ப்பதற்காகக் காடுகளுக்கு ஒட்டிச் செல்கின்றனர். மாலையில் வீடு திரும்பும் நேரம் வந்தவுடன் அவை கன்றுகளை எண்ணுகின்றன. அதனால் மடி சுரந்து பால் தன்னாலே சொட்டுகிறது. அத்தகைய பசுக்கள் மற்றப் பசுக்களை விட்டுத் தனியே பிரிந்து நிற்கின்றன. மேலும் கன்றுகள் தாய்ப் பசுக்களின் வரவினை எதிர்நோக்கி இருந்ததாகப் பாடல்கள் தெரிவிக்கின்றன. இத்தகைய செய்தி ஒன்றை,

பல்லா நெடுநெறிக் கன்று வந்தெனப்
புன்றலை மன்றம் நோக்கி மாலை
மடக்கண் குழவி அணவந் தன்ன
நோயேம் ஆகுதல் அறிந்து
சேயர் தோழி சேய்நாட் டோரே (குறு., 64)

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

கடுஞ்சுரை நல்லான் நடுங்குதலைக் குழவி
தாய்காண் விருப்பின் அன்ன
சாஅய் நோக்கினளே மாஅ யோளே (குறு., 132:4–6)

என்ற பாடலிலும் தாய்ப் பசுவை எதிர்நோக்கியுள்ள கன்றைப் பற்றிய தகவல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

எருமைக் கன்றுகள் ஏரில் பூட்டி உழுதொழிலில் ஈடுபடுத்தப்பட்டன. அதைக் கண்டு வருந்திய எருமை அதனைப் பிரிய மனமில்லாமல் நின்றது என்று ஒரு பாடல் குறிப்பிடுகின்றது.

இருமருப்பு எரும ஈன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியின் அகலாது
பாஅல் பைம்பயிர் ஆடும் ஊரன் (குறு., 181:3–5)

என்ற பாடல் கன்றின் துக்கம் கண்டு பிரியாத எருமை குறித்து விவரிக்கிறது.

காட்டில் சென்ற புலி அங்குத் திரிந்த பன்றியை அடித்துக் கொன்றது. அது பெண் புலி. அது குட்டிகளை ஈன்றது. பெண் பன்றி இருந்தும் அவை தாயற்ற குழந்தைகள் எனத் திரிந்ததாகவும் அவற்றை ஆண் பன்றி காத்ததாகவும் புலவர் பாடுகிறார். மானிட வர்க்கத்தில் கணவன், மனைவி, குழந்தைகள் என்று அன்புடன் நடக்கும் குடும்ப வாழ்க்கை போலவே இது புனையப்பட்டுள்ளது. இப்பன்றிகளின் செயற்பாட்டை மனித உறவுக்குள் அடக்கிப் பேசுவது அவற்றின் மீதுக் கொண்டுள்ள நல் மனப்பான்மையைச் சுட்டுவதாகவும் உள்ளது.

புலிகொல் பெண்பாற் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பில் கேழல் புரக்குங்
குன்று கெழுநாடன் மறந்தனன்
பொன்போற் புதல்வனோ டேன்னீத் தானே (ஐங்., 265)

என்று புலியால் கொல்லப்பட்ட பன்றிக் குட்டியை அதன் தந்தையாகிய ஏற்றைப் பன்றி அருகிலிருந்து காத்தது என்பது அதன் மனம் கலங்கிய செயலாகும். இத்தகைய செயல்கள் மனித சமூகத்தில் காணப்படும் அன்புசார் செயல்களைப் போலவே இயம்பப்பட்டுள்ளன. விலங்குகள் இவ்வகையான செயல்களைச் செய்வது போலத் தற்குறிப்பேற்றமாகக் கூறினும், அவ்விலங்குகள்பால் அமைந்துள்ள அன்புணர்ச்சி இக்கவிதையின் அடிப்படையான உள்ளத்தை அறிய முடிகிறது. புலி கொல் பெண்பால் குருளையைக் கேழல் புரக்கும் நாடன் என்றது

தலைவனுக்குச் சிறப்பாகவும் பிறிதொரு கருத்தை உணர்த்துவதற்குக் கூறப்பட்டதாயினும் விலங்கினைப் போற்றும் பண்பும் இளம்பன்றி கொல்லப்பட்டதற்கிரங்கும் மனநிலையும் வெளிப்படுதல் காணலாம். இவ்வாறு சங்கப் புலவர்கள் தம் பரிவுணர்ச்சியைப் புலப்படுத்தியுள்ளனர்.

செந்நாய் ஒன்று குட்டியோடு செல்வதைக் கண்ட புலி அதனை இரையாக்காமல் ஒதுங்கிச் செல்கிறது. இதனை,

> குருளைப் பன்றி கொள்ளாது கழியும்
> சரனணி வாரா நின்றன னென்பது
> முன்னுற விரைந்தநீ ருரைமின்
> இன்னகை முறுவரலன் ஆய்த்தோர்க்கே (ஐங்., 397)

என்று பாடுகிறார் புலவர். ஏற்றை குருளைப் பன்றி கொள்ளாது கழியும் என்பத குறிப்பிடத்தக்கது. புலியின் தொழில் பிற விலங்குகளை அடுவதாம். அதனின்றும் அவ்விலங்கு விலகிச் சென்றதென்பது அதன் உயர்பண்பைக் காட்டுவதுடன் மனிதமனமும் அச்செயல்மீது மதிப்புக் கொண்டுள்ளதை அறிய முடிகிறது. செந்நாய் ஏற்றை குருளைப் பன்றியைக் கொல்லாது கழியும் சுரமென்றது ஏற்றைத் தனக்கு உரித்தாகும் குட்டிகளை உடையதாய்ப் பன்றியாதல் பற்றி இரக்கத்தால் அதனை வேட்டையாடிக் கொள்ளாமல் வாளாப் போயிற்று என்றெழுதுகிறார் உரையாசிரியர்.

<u>மான்கள்</u>

மான்களின் சிறந்த செயல்களைக் கூறிப் பாடியிருக்கும் பாடல்கள் சில காணப்படுகின்றன. இச்செய்யுட்களில் மான், பிணை, கலை என்ற மானும் தம் குட்டியைப் பாதுகாத்த செயல் அவற்றின் உயர்பண்பை உணர்த்தும். ஆண்மானும் பெண்மானும் தம் குட்டியைப் பாதுகாத்த செயல் அவற்றின் உயர்பண்பைக் காட்டுகின்றன. பொதுவாக மான்களுக்குப் பிற விலங்குகளாகிய கரடி, சிங்கம்,

புலி போன்றவற்றாலும் இயற்கைச் சீற்றங்களாலும் இன்னல்கள் வரும் வாய்ப்புண்டு. இளங்கன்றுக்கு அத்தகைய துன்பம் வரக்கூடாது என்ற உணர்ச்சியில் நடுவில் அக்கன்றைப் படுக்கவிட்டு இருபுறத்திலும் ஆண்மானும் பெண்மானும் படுத்துக் கிடந்தன என்று கூறப்படும் புனைவு மான்களிடத்திலே மக்கள் கொண்டிருந்த நல்லுணர்ச்சியைக் கொண்டதாக அமைந்துள்ளது. அவற்றின் மீது உயிரிரக்கம் கொள்ளவும் இது வாய்ப்பாக அமைந்திருந்தது.

> மறியிடைப் படுத்த மாண்பினை போலப்
> புதல்வ னடுவண னாக நன்று
> இனிது மன்ற அவர் கிடக்கை முனிவின்றி
> நீனிற வியலகம் கவைஇய
> வீனு மும்பரும் பெறலருங் குரைத்தே (ஐங்., 401)

என்பது இதைச் சுட்டும் பகுதியாகும்.

கலை ஆண் மானையும் பிணை பெண் மானையும் குறிக்கும். ஆண் மானும் பெண் மானும் காட்டிற்குள் செல்கின்றன. அங்கு மரங்கள் அரிதாகத் தோன்றுகின்றன. நிழல் பகுதி மிகவும் குறைவு. வெய்யில் கடுமையாக இருக்கின்றது. அத்தருணத்தில் வெய்யிலின் கொடுமை தாளாது பெண் மான் வருந்துகிறது. ஆண் மான் ஓரிடத்தில் நிற்க அதனருகில் பெண் மானைப் படுக்கச் செய்து தன்னுடைய நிழல் அதன்மீது படுமாறு செய்கிறது.

> இன்னிழல் இன்மையான் வருந்தியப் மடப்பிணைக்குத்
> தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலை (கலி., 16–17)

என்று இச்செய்தி கூறப்பட்டுள்ளது. அஃறிணை உயிர்களாகிய மான்களிடத்து இச்செயல்கள் இருப்பதாகப் புனையப்படுவது அவ்விலங்குகளின் தன்மையை உயர்த்திக் காட்டுகிறது. மான்குட்டிக்குத் தாய்மான் (பிணை) மரப்பட்டையை உரித்துக் கொடுக்கிறது.

<u>யானைகள்</u>

களிறு, யானை, பிடி போன்ற பெயர்களால் இவ்விலங்கு சுட்டப்படுகின்றது. ஆண் யானையும் பெண் யானையும் ஒன்றுடன் ஒன்று அன்புடன் இருக்கும் காட்சியையும் பிடியினது நீர்வேட்கையைக் களிறுகள் தணிக்கின்ற காட்சியையும் சங்கப் புலவர் தம் பாடல்களில் காணமுடிகின்றது. இவற்றை எடுத்தோதுவதன் வழி விலங்குகளின்பால் மக்கள் கொண்டிருந்த அன்பையும் இரக்க உணர்வையும் அறிய முடிகிறது. பெரும் பகுதி உணவு முதலானவற்றை ஆண் யானைகளே கொண்டு வந்து தந்தன என்பதைப் பாடல்களில் காணமுடிகிறது. பிடி பசி களைஇய பெருங்கை வேழம் (குறு., 37:4) போன்ற தொடர்கள் இக்கருத்தையே வலியுறுத்துகின்றன. யானைகள் ஆண், பெண் இருபால்களாய்க் காட்டப்பட்டுள்ளதும் அவற்றிற்குரிய பணிகளைப் பிரித்துக் கூறுவதும் எண்ணத்தக்கன.

நீர்நிறைந்த பெரிய அகன்ற குழி ஒன்றில் களிறு வீழ்ந்து விடுகிறது. அது ஏறி மேலே வருவதற்கு இயலாமல் தவிக்கிறது. பெண் யானை அருகிலிருந்த மரக்கிளைகளை ஒடித்துப் போட்டுப் படி அமைக்கிறது. அதன் மீது ஏறிக் களிறு வெளியே வருகிறது. அஃது,

> பகடும் களிற்றின் வருத்தம் சொலியப்
> பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல் (அக., 8:10–110

எனக் கூறப்பட்டுள்ளது.

பசியுடன் இருக்கும் பெண் யானைக்கு உணவு தேடிக் கொண்டு வந்து அதன் பசியை ஆண்யானை தவிர்த்ததாகக் குறுந்தொகை கூறுகிறது.

> நசைபெரிதுடையர் நல்கலும் நல்குவர்
> பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
> மென்சினை யாஅம் பொளிக்கும்
> அன்பின தோழி அவர்சென்ற வாறே (குறு., 37)

என்பது அப்பாடல். இப்பாடலில் பெண் யானைக்கும் ஆண் யானைக்கும் உள்ள அன்புறவு எடுத்துக் கூறப்பட்டுள்ளமை அறியத்தக்கது. இது தலைவியை நோக்கித் தோழி கூறுவதாக அமைந்தது. யா என்பது ஒரு மரம். இது யானைகளுக்கு உணவாகப் பயன்பட்டது.

நீரின்றித் தவித்த யானைகளுக்குச் சிறிய அளவில் ஒரு குட்டை போன்ற பகுதியில் நீர் தென்பட்டது. இரண்டும் அருந்தும் அளவிற்கு நீர்ப் போதாமை கருதிய ஆண் யானை, தான் குடிப்பது போல் பாவனை செய்துவிட்டுப் பெண் யானை குடித்தபின், தான் குடிக்க முயன்றது.

வருவார்கால் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி
அடிதாங்கு மலிவின்றி யழலன்ன வெம்மையால்
கடியவே கனங்குழய் காடென்றார் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்ப
பிடியூட்டிக் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனவே

(கலி., 11:5–9)

என்னும் கலிப்பாட்டுப் பகுதியில் முன் மூன்றுஅடிகள் காட்டின் வெம்மையையும் பின்னிரு அடிகள் பெண் யானைக்கு நீரூட்டிப் பின் தான் உண்ணும் களிற்றின் செயலும் கூறப்பட்டுள்ளமை அறியலாம்.

புறநானூற்றில் போருக்குச் செல்லும் யானைகள் மணி இழந்தன என்று சொல்லப்பட்டுள்ளது. களிற்றைப் புலி தாக்கிக் கொல்லும். அதனால் துணையிழந்த பிடி புலம்பியதாகப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏற்றை
பூநூல் இரும்பிடி புலம்பத் தாக்கித்

கல்லக வெற்பன் சொல்லில் தேறி
யாமே நலனிழந் தனமே (நற்., 36:1–5)

என்று தோழியின் கூற்றாக வருவது இப்பாடல். தலைவனுக்குச் சொல்லியதாக அமைந்துள்ளது. இரும்பிடி புலம்பத் தாக்கி என்பது புலியின் செயல். பெருங்களிறு

தாக்கப்பட்டதைக் கண்டு வருந்திய பிடியினை இரும்பிடி புலம்ப என்றார்.

களிறு கன்றையும் பிடியையும் நீருண்ணச் செய்து பார்த்துக் கொண்டிருந்ததை,

> புன்றலை மடப்பிடி கன்றோ டார
> வில்கடிந்து தூட்டின் பெயரும்
> கொலகளிற் றொருத்தல் சுரன்இறந்தோரே (நற்., 92:7–9)

என்று நற்றிணை கூறுகின்றது. புன்றலை என்பது இளங்கன்றைக் குறித்தது. கன்றும் பிடியும் சேர்ந்து நீர்ப் பருகியது என்பதை உணர்த்த ஒரு எனும் மூன்றாம் வேற்றுமை உருபு நின்றது. ஒருத்தல் தலைமை கொண்ட ஆண் விலங்கு. அஃறிணை ஆண்பாற் பெயர்களில் ஒன்றாகத் தொல்காப்பிய மரபியலில் கூறப்பட்டுள்ளது காணலாம். இங்கு அது ஆண்யானையைக் குறித்தது. பிடியினது வேட்கையைக் களிறு தணிக்கும் பண்பைச் சங்கப் பாடல்களில் பல இடங்களில் காணலாம்.

களிற்று யானைக்கு வந்த துயர்கண்டு பெண் யானை மயக்கம் கொண்டது. அதைக் கண்ட அக்களிறு அதனின் முதுகில் தடவி ஆறுதல் கூறியது.

> சோலை வாழைச் சுரிநுரும்பு இனைய
> அணங்குடை இருந்தலை நீவலின் மதனழிந்து
> மயங்குதுயர் உற்ற மையல் வேழம்
> உயங்குஉயர் மடப்பிடி உலைபுறம் தைவர

ஆம்இழி சிலம்பின் அரிதுகண் படுக்கும்

மாமலை நாடன் கேண்மை

காமம் தருவதோர் கைதாழ்ந்தன்றே (குறு., 308)

என வரும் பாடல் இதனை உணர்த்தும். தான் துன்புற்றிருந்த நேரத்திலும் அதற்கென வருந்தாது வருத்தமுற்றிருக்கும் பெண் யானையின் உடலைத் தடவிக் கொடுத்தென்பது அவ்யானைகளின் அன்புச் சிறப்பினைப் புலவர் எடுத்தோதுகின்றார். இதன்வழி அவ்விலங்கினத்தைப் பாராட்டுவதும் அவற்றின் மீது மாந்தர்க்கிருந்த பற்றுணர்வும் எண்ணத்தக்கன.

பெண்யானை பசிகண்டு ஆண் யானை மரத்தை உரித்து அதன் பட்டையை உண்ணக் கொடுக்க நினைக்கிறது. (குறு., 307) புலி தாக்காமல் பெண் யானையை ஆண் யானை பாதுகாத்தது. நீர் வறட்சிக்குதவுதல், பசி கண்டு உணவு தருதல் போலப் பிற விலங்குகளால் துன்பம் ஏற்படினும் அதற்காகவும் போரிடும் பண்பு ஆண் யானைகளுக்கிருந்ததைப் புலவர்கள் தம் செய்யுட்களில் பதிவு செய்துள்ளனர். புலியால் தாக்குதல் வருமெனக்கருதி ஆண்யானை பெண் யானையைப் பாதுகாத்த செய்தி,

படரும்பையப் பெயரும் சுடரும்

என்றூழ் மாமலை மறையும் இன்றவர்

வருவார்கொல் வாழிதோழி நீரில்

வருங்கயம் துழைஇய இயங்குமருப்பு யானை

குறும்பொறை மருங்கின் அமர்துணைதழீஇக்

கொடுவரி இரும்புலி தாக்கும்

நெடுவரை மருங்கின் சுரனிறந் தோரே (குறு., 215)

என்ற பாடல் வழி உணர்த்தப்படுகிறது. யானைகளின் இரக்கப் பண்பை உணர்த்தும் புலவர்கள் அவற்றின் மீது கொண்டிருந்த பற்றையும் இப்பாடல் விளக்குவர்.

வீரர்கள் களிற்றுக் கன்றுகளைப் போர் வீரர்கள் பிரித்தமைக்காகத் தாய்ப் பிடிகள் வருந்தின. இது,

> கறையடி மடப்பிடி கானத்து அலற
> களிற்றுக் கன்று ஒழித்த உவகையர் (அக., 83:4–5)

எனக் கூறப்பட்டது. ஆளி என்னும் விலங்கைக் கண்டு அஞ்சிய பிடி நடுங்கும்போது களிறு அதனைத் தழுவி ஆறுதல் கூறியதை அகநானூறு,

> பொறிநுதற் பொலிந்த வயக் களிற்றொருத்தல்
> இரும்பிணர்த் தடக்கையில் ஏமுறத் தழுவ
> கடுஞசூல் மடப்பிடி நடுங்குஞ் சாரல் (அக., 78:4–6)

எனக் கூறுகிறது. ஆண் நாய், கருவுற்ற தன் பெண் நாய்க்கு உணவு தேடிச் சென்றதாகக் கூறப்படுகிறது (ஐங்., 323:1–2).

<u>பயன்களைப் போற்றுதல்</u>

பண்டைத் தமிழர் விலங்குகளை நன்குப் பயன்படுத்தித் தம் வாழ்வை அமைத்துக் கொண்டனர். பயன் தந்த விலங்குகளை அன்பும் இரக்கமும் காட்டி வளர்த்து வந்ததைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. ஒவ்வொரு விலங்கும் பயன்பட்ட முறைகளையும் சங்கப்பாடல்கள் தெரிவிக்கின்றன.

பயனையும் பயன் தந்த விலங்குகளையும் போற்றுதல் மூலம் மக்கள் அவற்றின்பால் கொண்ட உயிரிரக்கத்தையும் அறிய முடிகிறது.

1. எருது
2. எருமை
3. பசு
4. பகடு
5. நாய்
6. யானை

என்னும் விலங்குகளின் பயனும் அவற்றின் தன்மையும் சிறப்பித்துக் கூறப்படுகின்றன.

<u>எருது</u>

எருதுகள் கடா விடுதலுக்குப் பயன்பட்டன. கடாவிடுதல் என்பது எருதுகளால் வைக்கோல் உருவாக்குதல். அறுவடை செய்த நெற்கதிர்களை அடித்தபின் தனியே இருக்கும் தாள்களைப் போரில் இடுவர். சில நாட்கள் கழித்து அவற்றை எடுத்துத் தரையில் பரப்பி அதன் மீது எருதுகளை நடக்கச் செய்வர். எருதுகள் கயிற்றால் புனையப்பட்டிருக்கும். இவ்வாறு செய்வதைப் போரடித்தல்[23] என்றும் கூறுவர். புறநானூற்றில் எருதுகளின் இப்பயன்பாடு சொல்லப்படுகிறது.

> எருது காலுறா அது இளைஞர் கொன்ற
> சில்விளை வரகின் புல்லென் குப்பை
> பெதாடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில் (புறம்., 327:1–3)

என்பது புறப்பாட்டு.

<u>எருமை</u>

எருமைகள் தற்காலத்தில் பால்தரும் விலங்காகவும் உழவுக்குப் பயன்படும் விலங்காகவும் உள்ளன. பழங்காலத்தில் இவை உழவுக்குப் பயன்பட்டன என்பது,

மலைகண் டன்ன நிலையுணர் நிவப்பின்
பெருநற் பல்கூட் டெருமை உழவ
கண்பெடை பெறாஅது தண்புலர் விடியல்
கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு
புகர்வை அரிசிம் பொம்மற் பெருஞ்சோறு
கவர்படு கையை கழும மாந்தி (நற்., 60:1–6)

என்ற நற்றிணைச் செய்யுளில் கூறப்பட்டுள்ளது. இது உழவன் ஒருவனைப் பார்த்துத் தோழி கூறியதாகப் பாடப்பட்டுள்ளது. உழவுக்குச் செல்கிற உழவன் எருமை மாட்டினை ஓட்டிச் செல்கிறான். உழவுத் தொழிலே அடிப்படையாக இருந்த அந்த நாட்களில் இவை உழவுக்குப் பயன்பட்டன என்பது கருதத்தக்கது.

<u>பசுக்கள்</u>

பசுக்கள் பால் தந்ததும் பாலிலிருந்து நெய் முதலான பொருள்களைத் தயார் செய்ததும் புகழ்ந்துரைக்கப்பட்டுள்ளன.

திண்தேர் நள்ளி கானத்து அண்டர்
பல்ஆ பயந்த நெய்யின் தொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு
எழுதலத்து ஏந்தினும் சிறிதுஎன்தோழி
பெருந்தோள் நெகிழ்த்த சொல்லற்கு
விருந்துவரக் கரைந்த காககை யத பலியே (குறு., 210)

என்பதில் வரும் பல்ஆ பயந்த நெய் என்பது பசுவின் பயனை உணர்த்திற்று.

நள்ளி என்பவன் கடையெழுவள்ளல்களுள் ஒருவன். அவனது நாட்டின் வளத்தைக் கூறுங்கால் பசுவின் பால் வளமும் சுட்டப்பட்டது. தொண்டி சிறந்த மூதூர். இம்மன்னனின் காலத்துச் சிறந்திருந்ததோர் ஊர். இம்மூதூர் முழுவதும் விளைந்த நெல் சோற்றை, அதிற்கலந்து உண்ணும் அளவிற்கு நெய் உருவானது என்னும் கருத்து பால் வளத்தைக் குறித்துப் பசுவின் நலத்தைப் போற்றும் பாடலாக அமைந்துள்ளது. பசுக்கள் மேய்தற்குச் சென்ற இடத்தில் நன்று புல்லுண்டு வந்து பால் தந்தன என்பதைக் குறுந்தொகை கூறுகின்றது.

கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட
கெட்டஇடத்து உவந்த உதவி கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன்போல
நன்றிமறந்து அமையாய் ஆயின் மென்சீர்க்
கலிமயிற் கலாவத்தன்ன இவள்
ஒலிமென் கூந்தல் உரியவால் நினக்கே (குறு., 225)

என்னும் குறுந்தொகைச் செய்யுளுள் பயமுலை என்பதற்கு உரையாசிரியர் தரும் விளக்கம் பசுவின் உயர்வினைச் சுட்டிற்று. அவர் 'பயமுலை என்றது பாலுடைய முலை என்னை' அதன் பயன் அஃதாகலான், கன்றும் பசியாலே வருந்தாதபடி ஊட்டிக் கொண்டே, தனக்கு வேண்டிய தினையைப் பிடி உண்ணும் எனக் குறிக்கிறார். பால் பயனைக் குறிப்பிடும் வழி அவ்விலங்கினத்தின் சிறப்பும் உணர்த்தப்பட்டுள்ளது.

<u>பகடு</u>

பகடுகள் உழவுத் தொழிலுக்குப் பயன்பட்டன. அதனை வினைப்பகடு எனப் புறநானூற்று கூறுகிறது. வினை என்பது இங்குப் பகட்டின் உழவுத் தொழிலைச் சுட்டும்.

வினைப்பகடு ஏற்ற மேழிக் கிணைத் தொடா (புறம்., 388:11)

என்பது அது. பகடுகள் உழவுத்தொழில் செய்தலால் நெல் விளைந்ததென்றும் அதனால் மக்கள் பெரும்பயன் எய்தினர் என்றும் கூறப்படுகிறது.

அகடுநனை வேங்கை வீகண் டன்ன
பகடுதரு செந்நெல் போரோடு நல்கிக்
கொண்டி பெறுக (புறம்., 390:22)

என்பது புறப்பாடல்.

எருதுகளின் பேருழைப்பால் உண்டான நெல் எனக் கூறப்படுவது நெல்லின் வளத்தைச் சுட்டியது. மிகுந்த நில வளத்தையும் அதனால் விளைந்த நெல்லையும் சுட்டும் பாடல் பின்வருமாறு முடிகிறது.

முகடுற வுயர்ந்த நெல்லின் மகிழ்வரப்
பகடுதரு பெருவளம் வாழ்த்திப் பெற்ற
திருந்தா மூரி பரந்துபடக் கெண்டி
அரியல் ஆர்கையர் உண்டு இனிது உவக்கும்
வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென (புறம்.391:3–7)

<u>நாய்</u>

நாய்களின் பயனைச் சுட்டும் பாடல் இரண்டு இடம்பெறுகின்றன. அவை குறுந்தொகையிலும் குறிஞ்சிப்பாட்டிலும் வருகின்றன. அவ்விரு நூல்களும் வேட்டைக்கு நாய்கள் பயன்பட்டதையே குறிப்பிடுகின்றன.

கல்லென கானத்துக் கடமா ஆட்டி
எல்லும் எல்லின்று ஞமலியும் இளைந்தன
செல்லல் ஐஇய உதுரவம் ஊரே
ஓங்குவரை அடுகத்துத் தீம்தேன் இழத்த
குவையுடைப் பசுங்கழை நின்ற கயவாய்ப்
பேதை யானை சுவைத்த
கூழை மூங்கிற் குவட்டிடை யதுவை (குறு., 179)

என்பது குறுந்தொகை. ஞமலியும் இளைந்தன என்று இரங்கற் குறிப்பில் தோழி கூறியதாக அமைகிறது. வேட்டைக்குச் சென்ற தலைவனுடன் சென்ற நாய் அலைதல் தொழிலால் இளைத்தன என்ற தோழி கூறுவது இது. தலைவன் காட்டுப் பகுதிக்கு வரும்போது நாயுடன் வருவது வழக்கமாகப்படுகிறது.[24]

குறிஞ்சிப்பாட்டில் வேட்டைக்குப் பயன்பட்ட நாய்,

முனைபாழ் படுக்கும் துள்ளருந்துப்பிற்
பகைபுறங் கண்ட பல்வே லிளைஞரின்
உரவுச் சினஞ் செருக்கித் துன்னுதொறும் வெகுறும்
முனைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி
திளையர் கண் வளைகுபு நெரிதா (குறிஞ்., 128:32)

என்று குறிஞ்சிப் பாட்டில் தலைவனோடு நாய்கள் வந்தமை குறிக்கப்பட்டுள்ளது.

யானை

யானைகள் போருக்குச் சென்று வந்ததைப் புறநானூற்றில் காண முடிகிறது.

மாண் வனை யானை (புறம்., 305:5)

என்பது யானையின் போர்ச் செயலைக் குறித்தது. பழங்காலத்தில் போர் புரிந்து புண்பட்ட யானைகளுக்காக மன்னர்களும் கூட வருந்தினர். யானைகள் அரச சின்னங்களாகவும் விளங்கின.

பொதுப் பண்புகளைப் பாராட்டல்

பொதுப் பண்புகள் என்பனவாகச் சில விலங்குகளின் சிறப்பை எடுத்துக் கூறுகின்றன. மேல் பகுதியில் விலங்குகளின் செயற்பண்பு உணர்த்தப்பட்டதைப் போல இங்கு அவற்றின் பிற தனிப்புண்புகளையும் தனிச்சிறப்புகளையும் ஆசிரியர்கள் எடுத்துக் கூறியுள்ளனர். இவ்வாறு தனிச்சிறப்புகளை எடுத்தியம்புதலின் வழிப் பண்டைத் தமிழர் விலங்குகள்பால் கொண்டிருந்த

அன்பையும் இரக்க உணர்வையும் அறிய முடிகிறது. அவை பின்வருமாறு சுட்டப்படுகின்றன.

ஆடு

ஆடுகளின் விரைந்த நடையைக் குறுந்தொகை,

சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன (குறு., 163:2)

எனச் சிறப்பிக்கிறது. விலங்குகளுடன் மக்கள் இணைந்து தங்கியிருந்தனர். மருதமர நிழலில் மக்கள் எருதுகளுடன் இணைந்து தங்கியிருந்தனர்.

மருத மரநிழலில் எருதொடு வதியும்

காமர் வேனில்மன் இது

மாண்நலம் நுகமும் துணையுடை யோர்க்கே (அக., 37:15–18)

என்று அகநானூறு கூறுகின்றது.

கன்று

கறவைகள் எனப்படும் பசுக்கள் மாலை வேளையில் கன்றை எண்ணிச் செல்லும் வேட்கையுடையனவாய் இருந்தன என்று அவற்றின் தாய்மை உள்ளம் பேசப்படுகின்றது.

மழைவிளையாடும் குன்றசேர் சிறுகுடிக்

கறவை கன்றுவயிற் படரப் புறவிற்

பாசிலை முல்லை ஆசில் வான்பூச்

செவ்வான் செவ்வி கொண்டன்று

உய்யேன் போல்வல் தோழி யானே (குறு., 108)

என்பது குறுந்தொகை. 'கறவை' என்பது பசுவைக் குறிக்கும். பண்டைப் புலவர்கள் காட்டு விலங்குகளிடம் மிகுந்த ஈடுபாடு காட்டினர்.[26]

காளைகள் நாட்டில் பல்கிப் பெருகியிருப்பது சிறப்பாகப் பேசப்படுகிறது.

வாழி யாதன் வாழி யவினி

பால்பல வூறுக பகடுபல சிறக்க

வெனவேட் டோளேயாயே யாமே

வித்திய உழவர் நெல்லோடு பெயரும்

பூக்க லூரன் தன்மனை

வாழ்க்கை பொலிக வெனவேட் டேமே (ஐங்., 3)

இப்பாடலில் பகு, எருது எனும் விலங்குகள் பற்றிய உயர் எண்ணம் வெளிப்படுகிறது. விலங்குகளின் அலவச் சுவை அக்காலப்பாடல்களில் வருணனையாக வெளிப்பட்டுள்ளது.[27]

<u>குதிரையும் குரங்கும்</u>

சங்க இலக்கியங்களில் பெரும்பாலான பாடல்களில் குதிரை இடம் பெற்றுள்ளது. மன்னரும் மதிக்கும் மாட்சியைக் கொண்ட குதிரை என அவ்விலங்குச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது.

மன்னர் மதிக்கும் மான்வினைப் புரவு

கொய்ம்மயிர் எழுத்தில் பெய்மணி ஆர்ப்ப (நற்., 81:3–4)

என்பது நற்றிணை. குதிரைகள், கட்டப்பட்ட மணி ஒலிகள் அசையும்படி சென்றன என்று கூறப்பட்டதும் அவற்றின் சிறப்பு எனலாம்.

படுமணிக் கலிமா கடைஇ

நெடுநீர்ச் சேர்ப்பன் உரூஉ மாறே (நற்., 235:9–10)

என்பது நற்றிணை. கடுவன் குரங்கின் தந்தை என அழைக்கப்பட்டுள்ளது. வன்பறழ்த் தந்தைத் கடுவனும் (குறு., 80:7) என்பது அச்செய்யுள் தொடர்.

இவ்விலக்கியங்களில் கூறப்பட்டது போலப் புறநானூற்றில் கவரிமான் பேசப்படுகிறது. கவரிமான் தகர மர நிழலில் பிணையொடு தங்கும் எனச் சிறப்பித்துக் கூறப்படுகிறது. இதனை,

தகரத் தண்ணிழல் பிணையொடு வதியும் (புற., 132:6)

எனும் அடியால் அறியலாம். வன்பரிப் புரவி பண்பு பாராட்டி (புற., 301:13) என்று புறநானூறு குதிரையைச் சிறப்பிக்கின்றது.

குரங்கு

குரங்கு சிறப்பைக் குறுந்தொகை புகழும், குரங்கு கைம்மைத் துயர் ஏற்றதாக இவ்விலக்கியம் பேசுகின்றது. ஐங்குறுநூற்றில் 'குரக்குப் பத்து' எனப் பாடியிருப்பது தனிச்சிறப்பாகும்.[28]

> கருங்கண் தாக்கலை பெரும்பிறி துற்றெனக்
> கைம்மை உய்யாக் காமர் மந்தி
> கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
> ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
> சாரல் நாட நடுநாள்
> வாரல் வாழியோ வருந்துதும் யாமே (குறு.69)

என்னும் செய்யுளின் கருத்து இதனை உணர்த்தும்.

பசுவும் பிணையும்

பசுவின் பொதுப்பண்புகள் சில எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

> பசும்போல் பெண்டிர் (ஐங்., 271:3)
> கன்றமா கறவை (புறம்., 275:8)

என்பன பசுவின் தனிச்சிறப்புகளை எடுத்துக் கூறுகின்றன. பிணையும் அதன் குட்டியும் காட்டு வெய்யிலில் வாடுகின்றன என்று ஐங்குறுநூறு பேசுகின்றது.

> அழலவில் நனந்தலை நிழலிடம் பெறாது
> மடமான் அம்பினை மறியொடு திறங்க (ஐங்., 326:1–2)

என்பது அது. பிடி என்னும் பெண் யானை குறித்த பண்புகள் காணப்படுகின்றன. தனக்கு எத்துணைப் பசி நேரினும் தன் சிறப்புப் பிடியை விட்டு அகலாது களிறு நிற்பதாகவும் ஐங்குறுநூறு பேசுகிறது. அதன் அரவணைப்பில் பிடி நிற்பதாகவும் கூறப்படுகின்றது.

களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது

பசிதின வருத்தும் பைதறு குற்றத்துச்

சுடர்தொடிக் குறமக ளிளைய

எனைப் பயந் செய்யுமோ இடைநிலைநின் செலவே (ஐங்., 305)

என்பது அப்பாடலில் மடம்பிடி பரிசில் மான் (குறு., 295:7) என்று குறுந்தொகை பேசுகின்றது. பெண் யானைகள் பரிசிலாகத் தரப்பட்ட செய்தி இதன்கண் கூறுப்படுகிறது. இப்பரிசில் வழங்கப்பட்ட யானைகள் நன்னன் என்ற மன்னனின் மாமரத்தைப் பிடுங்கி எறிந்தனவாம். இது கோசலர் சூழ்ச்சி என்பர். போரில் இறந்த களிறுகளை எண்ணிப் பிடிகள் வருந்தின என்பதை,

கயந்தலை மடப்பிடி புலம்ப

இலங்குமருப்பு யானை எறிந்த எற்கே (புறம்., 303:8–9)

என்ற புறப்பாடல் பேசுகிறது. பசியுடன் இருந்த பெண் யானைக்கு யா மரக்கிளைகளை ஒடித்துப் போட்டது. களிறு என்பது யானைகளின் அன்பை விளக்குவனவாகும்.

<u>மான்கள்</u>

மான்களைப் பற்றி இரு முக்கியப் பண்புகள் பேசப்படுகின்றன. பெண் மானைப் பிரிந்த ஆண் மான் மிகவும் மனம் வருந்துகிறது. இச்செய்தி,

சென்ற நாட்ட கொன்றையம் பசுவீ

நம்போல பசக்கும் காலை தம்போல்

சிறுதலைப் பிணையின் தீர்ந்த நெறிகோட்டு

இரலை மானையும் காண்பர்கொல் நமயே

புல்லென காயாப் பூக்கெழு பெருஞ்சினை

மென்மயில் எருத்தின் தோன்றும்

கான வைப்பின் புன்புலத் தானே (குறு., 183)

என்று குறுந்தொகையில் பேசப்படுகின்றது. மான்குட்டிகள் தாயின் மடியில் பாலருந்தி மகிழ்வதையும் இவ்விலக்கியம் பின்வருமாறு எடுத்துரைக்கிறது.

செவ்வரைச் சேக்கை வருடை மான்மறி
சுரை பொழி தீம்பால் ஆரமாந்திப்
பெருவரை நீழல் உகளும் நாடன்
கல்லினும் வலியன் தோழி
வலியன் என்னாது மெலியுமென் நெஞ்சே (குறு., 187)

மானினம் மையில் மானினம் (அக., 71:5) என அகநானூறு பேசுகின்றது. நாயின் நாக்குப் பெண்களின் மெல்லிய காலடிக்கு எடுத்துக்காட்டாகச் சொல்லப்படுகின்றது (நற்., 252).

<u>யானைகள்</u>

பெண் யானையின் பசியைக் காணாது ஆண் யானைகள் துடித்ததாகக் குறுந்தொகை பேசுகின்றது. அது பெண் யானையின் பசியைப் போக்கச் செய்த செயலைக் குறுந்தொகை,

வளையுடைத் தனையது ஆகிப் பலர்தொழச்
செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி
இன்னம் பிறந்தன்று பிறையே அன்னோ
மறந்தனர் கொல்லோ தாமே களிறுதன்
உயங்குநடை மய்பிடி வருத்தம் நோனாது
நிலையுயர் யாஅம் தொலையக் குத்தி
வெண்நார் கொண்ட கை சுவைத்து அண்ணாந்து
அழுங்களல் நெஞ்சமொடு முழங்கும்
அந்த நீரிடை அழப்பரிந்தோலே (குறு., 307)

என்ற பாடலில் புலப்படுத்துகிறது. பெண் யானையை ஆண் யானை தழுவி நிற்றலை,

குறும்படைப் பகழிக் கொடுவிற் கானவன்

புனம்உண்டு கடிந்த பைங்கண் யானை

நறுந்தழை மகளிர் ஒப்பும் கிள்ளையொடு

குறும்பொறைக்கு அணவும் குன்ற நாடன்

பணிக்குறை வருத்தம் வீடத்

துணியின் எவனோதோழி நம் மறையே (குறு., 333)

என்று குறுந்தொகை அடிகளில் காணலாம்.

மேலும் நீரில்லாத வறிய குளத்தைத் துழாவிய தன் பெண் யானையைத் தழுவி நின்றது ஆண் யானை. இதனை,

படரும் பைப்பயப் பெயரும் சுடரும்

என்றூழ் மாமலை மறையும் இன்றவர்

வருவார்கொல் வாழி தோழி நீரில்

வறுங்கயம் துழைஇய இலங்கு மருப்பு யானை

குறும்பொறை மருங்கின் அமர்துணை தழீஇக்

கொடுவரி இரும்புலி காக்கும்

நெடுவரை மருங்கின் சுரனிறத் தோரே (குறு., 215)

என்ற செய்யுளில் காணலாம். இவ்வாறு விலங்குகளின் நற்செயல்கள் பலவாறாகக் குறிக்கப்படுவதால் அவற்றின் மீது மக்கள் கொண்டிருந்த அன்புணர்ச்சியை அறியலாம்.

<u>தொகுப்புரை</u>

- விலங்கினங்கள் வீட்டு விலங்கு , காட்டு விலங்கு என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன.
- மேற்குறித்த விலங்கினங்களின் உடல்துயர் மற்றும் பசித்துயர் சங்ககாலத் மக்களாலும், மன்னர்களாலும், புலவர்களாலும் எவ்வாறெல்லாம் களையப்பட்டன என்பது சங்க இலக்கியத்தின் வழி நின்று விரிவாக ஆராய்பபெற்றுள்ளன.

## சான்றெண் குறிப்புகள்

1. மு.வ., பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.26.
2. பொ.ஐங்கரன், ஏழாவது அறிவு, ப.9.
3. நா.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வில், ப.277.
4. மேலது., ப.309.
5. பொ.ஐங்கரன், ஏழாவது அறிவு, ப.276.
6. புலியூர்கேசிசன், உரைவிளக்கம், நற்.315.
7. தி.வே.கோபாலையர், தமிழ்ப் பேரகராதி, தொகு.4.
8. பொ.வே.சோமசுந்தரனார், உரை விளக்கம், குறு.224.
9. தொல்.அகம்., நூ.5.
10. பாரதியார், கண்ணன்பாட்டு, கண்ணன் என் சேவகன், அடிகள்.15–16.
11. புறப்பொருள் வெண்பாமாலை, பாதீடு,12
12. ஆண்டாள், திருப்பாவை, பா. 3
13. குறள்., 1066.
14. புறப்பொருள் வெண்பாமாலை, சுரத்துய்த்தல், 9
15. மேலது. (எ.டு.), 11
16. மு.வ.பழந்தமிழ், இலக்கியத்தில் இயற்கை, ப.283.
17. குறள்.59.
18. மு.வ.பழந்தமிழ், இலக்கியத்தில் இயற்கை, ப.227.
19. மேலது., ப.328.
20. மேலது., ப.386.
21. சி.தில்லைநாதன், பண்பாட்டுச் சிந்தனைகள், ப.98.
22. பொ.வே.சோமசுந்தரனார், உரை விளக்கம், ஐங்.397.
23. க்ரியாவின் தமிழ்–ஆங்கில அகராதி, ப.
24. நா.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.67.
25. மேலது., ப.85.
26. மு.வ.பழந்தமிழ், இலக்கியத்தில் இயற்கை, ப.336.
27. மேலது., ப.335.
28. மேலது., ப.47.

# முடிவுரை

இயல்களில் பதிவு செய்யப்பட்ட மெய்ம்மைகளின் அடிப்படையில் கிடைத்த முடிவுகள் கீழே தரப்படுகின்றன.

சங்க இலக்கியங்கள் பழந்தமிழ்ச் சமூகத்தில் அகப்புற வாழ்க்கை தன்மையையும் உலக மக்களின் ஒற்றுமையையும் வலியுறுத்தும் கொள்கையுடையனவாக அமைந்திருக்கின்றன.

அக இலக்கியங்கள் அன்புணர்வை அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்டிருக்கின்றன. அன்பில் தலைவிக்கும் தோழிக்கும் இடையில் அமைந்த உறவு பொறுப்புணர்ச்சியுடன் அமைந்து இருக்கின்றது.

நற்றாய், தலைவி ஆகியோர்க்கு இடையிலான அன்பு சில பாடல்களில் கூறப்பட்டுள்ளன. தலைவன், தலைவி ஆகியோர்க்கு இடையில் ஏற்படும் அன்புணர்ச்சியையும் மனிதநேய அடிப்படையில் அமைந்து இருக்கின்றது.

மனிதர்களிடம் காட்டும் இரக்க உணர்ச்சியும் மனிதநேயத்தை காட்டுவதாக அமைந்துள்ளது. தலைவன் மீது தலைவி இரங்குதல், தலைவியின் நிலைக்கு தலைவனும் தோழியும் இரங்குதல் போன்றவை மனிதநேயம் மிக்கவையாக அமைந்துள்ளன.

பழந்தமிழ்ப் பாடல்களில் பசிக்கு இரங்கும் இரக்க உணர்ச்சி மிகுதியும் புறப்பாடல்களில் காணப்படுகிறது. போரில் சாதல் கண்டோர் இடையை இரக்க உணர்ச்சியை உண்டாக்குகிறது.

பெரும் துயர் நோய் கடும் உழைப்பு, மனத்துயரம் வறுமை ஆகியவற்றால் ஏற்படும் இரக்க உணர்ச்சி பழந்தமிழ் மக்களின் மனிதநேயத்தை காட்டுவதாக அமைகின்றன.

புலவர், இரவலர் ஆகியோரின் பசி போக்குவதற்கு மன்னர்கள் பெரிதும் முயன்றுள்ளனர். வறியவர்களுக்கு ஈகை செய்வது மன்னர்கள் கொடை திறம் கூறுவது ஆகியன மனிதநேயப் பண்புகளாகக் கூறப்பட்டுள்ளன.

நட்பாதலில் சிறந்த பண்பு அமைந்திருந்தது. தோழிக்கும் தலைவிக்கும் புலவர்களுக்கும் அரசர்களுக்கும் சிறந்த நட்பு இருந்தது. அரசர்கள் புலவர்களிடம் காட்டிய நட்பு மனிதநேய பண்பாக வெளிப்படுகிறது.

பண்டைய தமிழ் மக்கள் தாவரங்களை தம் உயிர்போல் கருதி வந்தனர். பிற விலங்குகளால் இயற்கைச் சீற்றம் போன்றவற்றால் தாவரங்களுக்கு அழிவு ஏற்படும்போது மக்கள் அவற்றின் மீது இரக்கம் கொண்டனர்.

மலர்களுக்கு அழிவு ஏற்படும் போது அதற்காக மனம் இரங்கியதை புலவர்கள் பாடியுள்ளனர். மலர்களை அழிவுபடாமல் பாதுகாத்ததைப் பழம் பாடல்களில் காணமுடிகிறது.

வெய்யிலில் மலர்கள் வாடியதற்கு புலவர்கள் வருந்திப் பாடியுள்ளனர். மழையால் சிதைவுற்ற மலர்கள் விலங்கு, வண்டுகள் ஆகியவற்றால் இன்னல் உற்ற மலர்கள் என மலர்கள் பலவாறு சுட்டப்பட்டுள்ளன.

பண்டைய தமிழர்கள் மரத்தைப் போற்றி பாதுகாத்து உள்ளனர். தெய்வமாக வழிபட்டனர். காவல் மரமாக அமைத்தனர். விலங்குகளால் மரங்கள் சிதைவுற்றதையும் வெயிலில் காய்ந்ததையும் புலவர்கள் இரங்கி பாடியுள்ளனர்.

பிற உயிர்களால் மரங்களும் தாவரங்களும் அழிவுறுவதைத் தடுப்பதற்குப் பாதுகாப்பு முயற்சிகள் செய்யப்பட்டன. நெற்பயிரை உயிர் என்று போற்றி உள்ளனர்.

கனிகள் மருந்து வகை தாவரங்கள் ஆகியவற்றின் பயன்கள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

விலங்குகள் பண்டைத் தமிழரின் வாழ்வில் முக்கிய இடம் பெற்றிருந்தன. விலங்குகள் மீது இரக்க உணர்ச்சி விலங்குகளைப் பாதுகாத்தல், அவற்றின் செயல்களைப் போற்றுதல், பயன்களை உணர்தல் ஆகியவை விலங்குகள்பால் மக்கள் கொண்டிருந்த நல்மனப்பான்மையைக் காட்டுகிறது.

எருது, பசு போன்ற விலங்குகள் உயர்த்திக் கூறப்பட்டன. இவற்றைப் பாதுகாப்பதற்கென்று தனி இடங்கள் அமைக்கப்பட்டு இருந்தன.

பண்டைய தமிழர்கள் யானைகளை (களிறு) போருக்குப் பயன்படுத்தினர். எருமை போன்ற விலங்குகள் இயல்பாக வளர்க்கப்பட்டன. எருமை கன்றுகளை பாதுகாப்புடன் மக்கள் வளர்த்தனர். வயது முதிர்ந்த காளைகளை உழவுக்கு பயன்படுத்தாமல் தனி இடத்தில் பாதுகாத்தனர்.

பசுவுக்கு இன்னல் செய்வது தவறு என்று கருதப்பட்டது. குரங்குகளை குழந்தைகளிடம் விளையாட விட்டு வளர்த்தனர். யானைகள் பரிசுப் பொருள்களாகத் தரப்பட்டன.

வேட்டையாடுவதற்கு நாய் பயன்பட்டன. விலங்குகள் வீட்டு விலங்கு, காட்டு விலங்கு எனப்பிரித்தனர். பெரும் பகுதி விலங்குகள் பயன்படுத்தப் பட்டன.

பசு கன்றுகளை விலங்குகளைப் பாதுகாத்தலில் பெண்களுக்கு முக்கியப் பங்கு உண்டு.

பண்டைய தமிழர்களின் பொது ஒழுக்கத்தையும் நடத்தை முறைகளையும் சமூக மதிப்புகளைப் பின்பற்றிய முறைகளையும் பெண்களை மதித்துப் போற்றியதையும் கற்றோரை மதித்ததையும் மனிதநேயத்தில் அடக்கி தனித்து ஆராய வாய்ப்புகள் நிரம்ப உள்ளன.

# துணைநூற் பட்டியல்


முதன்மை ஆதாரங்கள்

1 வையாபுரிப்பிள்ளை, எஸ்., சங்க இலக்கியம் தொகுதி–1, முல்லை நிலையம், சென்னை, ம.ப., 2010.

2 வையாபுரிப்பிள்ளை, எஸ்., சங்க இலக்கியம் தொகுதி–2, முல்லை நிலையம், சென்னை, ம.ப., 2010.

துணைமை ஆதாரங்கள்

3 அகத்தியலிங்கம் ச. சங்கத் தமிழ் –3 (ம.ப.) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை,

4 அகத்தியலிங்கம் ச. சங்கத் தமிழ் –4 (ம.ப.) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை,

5 இளம்பூரணர் (உ.ஆ.) தொல்காப்பியம், எழுத்து, சொல், பொருள் மூலமும் உரையும், சாரதா பதிப்பகம், சென்னை, ஏ.ப., 2010.

6 ஐங்கரன், பொ., ஏழாவது அறிவு, பாரி நிலையம், சென்னை, மு.ப., 2010.

7 கமலகண்ணன் (உ.ஆ.) நாலாயிரத்வ்விய பிரபந்தம், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மு.ப., 2010.

| | | |
|---|---|---|
| 8 | கிரு ˙ணமூர்த்தி, கு.வி., | தமிழரும் தாவரமும்,<br>பாரதிதாசன் பல்கலைக்கழகம்,<br>திருச்சிராப்பள்ளி,<br>மு.ப., 2007. |
| 9 | கிரு ˙ணமூர்த்தி, ச.<br>(முதலியோர்) | தமிழ் இலக்கியத்தில்<br>மனிதநேயம்,<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,<br>மு.ப., 2009. |
| 10 | கைலாசபதி க. | பண்டைத் தமிழர் வாழ்வும்<br>வழிபாடும்,<br>குமரன் பதிப்பகம்,<br>சென்னை,<br>மூன்றாம் பதிப்பு 2010 |
| 11 | கோபாலையர், தி.வே., | தமிழ் இலக்கணப் பேரகராதி,<br>தமிழ்மண் பதிப்பகம்,<br>சென்னை,<br>மு.ப., 2005. |
| 12 | | வனஉயிரினங்களின்<br>வாழ்க்கைமுறை,<br>பாரதிதாசன் பல்கலைக்கழகம்,<br>திருச்சிராப்பள்ளி,<br>மு.ப., 2007. |
| 13 | சசிவல்லி வி.சி., | தமிழர் திருமணம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை |
| 14 | சடகோபன், கோ., | சுற்றுச்சூழல் பொருளியல்,<br>நே னல் புக்டிரஸ்ட்,<br>புதுடெல்லி,<br>மு.ப., 1997. |
| 15 | சண்முகம் பிள்ளை மு. | சங்கத் தமிழர் வாழ்வியல்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>சென்னை<br>இ.ப.2004 |

| | | |
|---|---|---|
| 16 | சாமிநாதையர், உ.வே. (ப.ஆ.) | புறநானூறு மூலமும் உரையும், உ.வே.சா. நூல் நிலையம், சென்னை, இப., 1990. |
| 17 | சாமிநாதையர், உ.வே., | சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும், உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, ப.ப., 2010. |
| 18 | சாலினி இளந்திரையன் | சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிக்ள (அ.சொ.ம.ப.) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை இ.ப. 2004 |
| 19 | சிவத்தம்பி, கா., | தமிழ் இலக்கிய வரலாறு, பிரைவேட் லிமிடெட், சென்னை, இ.ப., 2008. |
| 20 | சிவத்தம்பி, கா., | சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை, |
| 21 | சுடலி தியாகராாசன் | பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை |
| 22 | சுப்பிரமணியன், ந., | சங்ககால வாழ்வியல், சென்னை, மு.ப., 1986. |

23 சோமசுந்தரனார், பொ.வே., குறுந்தொகை, கழகப்பதிப்பு, சென்னை, 1976.

24 சோமசுந்தரனார், பொ.வே., ஐங்குறுநூறு, கழக வெளியீடு, சென்னை, மு.ப., 1984.

25 சோமசுந்தரனார், பொ.வே., புறப்பொருள் வெண்பாமாலை, கழக வெளியீடு, சென்னை, மு.ப., 2000.

26 சோமசுந்தரனார், பொ.வே., (உ.ஆ.) பரிபாடல், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை, மு.ப., 2007.

27 சோமசுந்தரனார், பொ.வே., பத்துப்பாட்டு, கழக வெளியீடு, சென்னை, மு.ப., 2008.

28 சோமசுந்தரனார், பொ.வே., பத்துப்பாட்டு பகுதி–2, கழக வெளியீடு, சென்னை, மு.ப., 2008.

29 சௌந்திரபாண்டியன் தமிழர் தத்துவம் அரிய சிந்தனைகள், மயன் பதிப்பகம். சென்னை மு.ப.2001

30 (மொ.பெ.) குடும்பம் அரசு தனிச்சொத்து, நியூசெஞ்சுரி பு சென்னை, இ.ப., 1986.

| | | |
|---|---|---|
| 31 | தாயம்மாள் அறவாணன் | தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை மு.ப., 2002 |
| 32 | திருநாவுக்கரசு க.த. | தமிழ்ப் பண்பாடு (ம.ப.) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை |
| 33 | திருநாவுக்கரசு க.த. | தென்கிழக்கு ஆசியா நாடுகளில் தமிழ்ப் பண்பாடு (ம.ப.) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை |
| 34 | தில்லைநாதன், சி., | பண்பாட்டுச் சிந்தனைகள், பாரி நிலையம், சென்னை, இ.ப., 2009. |
| 35 | துரைசாமிப்பிள்ளை, ஔவை.சு. (உ.ஆ.) | திருவட்பா, சுத்தசன்மார்க்க நிலையம், வடலூர், ம.ப., 2006. |
| 36 | பக்கிரிசாமி, | சங்க இலக்கியத்தில் மனிதநேயம், பாரி நிலையம், சென்னை, மு.ப., 2007. |
| 37 | பதிப்புக்குழு, | தொல்காப்பியம் (நச்சினார்க்கினியம்), தஞ்சாவூம், இ.ப., 1975. |
| 38 | பதிப்புக்குழு, | திருக்குறள் பரிமேலழகர் உரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை, இ.ப., 1976. |

39 பதிப்புக்குழு, பெரியாரும் இராமலிங்கமும், சுத்தசன்மார்க்க நிலையம், வடலூர், மு.ப., 1998.

43 பதிப்புக்குழு, கழகத்தமிழகராதி, கழக வெளியீடு, சென்னை, மு.ப., 1999.

44 பாரதியார், பாரதியார் கவிதைகள், கவிதா பப்ளிகே ன், சென்னை, இ.ப., 2010.

45 பாரதிதாசன், பாரதிதாசன் கவிதைகள், உமா பதிப்பகம், சென்னை, ஐ.ப., 2009.

46 பாலசுப்பிரமணியன், கு.வெ., சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், தமிழ்ப் பல்கலைக்கழம், தஞ்சாவூர், மு.ப., 1994.

47 பாலுச்சாமி மருதத்தில் மக்கள் வாழ்வியல் (அ.சொ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை,

48 பாலசுப்பிரமணியன், சி., மலர்காட்டும் வாழ்க்கை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், மு.ப., 2003.

49 புலியூர் கேசிகன் (தெ.உ.) நற்றிணை, கங்கை புத்தக நிலையம், சென்னை, மு.ப., 2010.

50 மாணிக்கம், வ.சுப., — தமிழ்க் காதல், பாரி நிலையம், சென்னை, மு.ப., 1962.

51 மாணிக்கனார், அ. (உ.ஆ.) — அகநானூறு, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, மு.ப., 1999.

52 — தொல்லியல் நோக்கில் சங்ககாலம் (அ.சொ. ம.ப.) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை

53 வரதராசன், மு., — பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரி நிலையம், சென்னை, இ.ப., 2006.

54 வேங்கடசாமி நாட்டார், நா.மு., — நல்வழி, கழக வெளியீடு, சென்னை, மு.ப., 1997.

55 — சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் (அ.சொ.) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை

அகராதிகள்

56 சுப்பிரமணியன், ப.ஏ. (ப.ஆ.) — க்ரியாவின் தற்காலத் தமிழ் ஆங்கில அகராதி, ????? சென்னை, ம.ப., 1997.

57 வையாபுரிப்பிள்ளை, எஸ்., — தமிழ் லெக்சிகன், சென்னைப் பல்கலைக்கழகம், ம.ப., 1982.

ஆங்கில நூல்கள்

58 Panduranga A. — Sangam Classics:New Perspectives
International Institute of Tamil studies,
Chennai

59 Singaravelu S, — Social Life of the Tamils
International Institute of Tamil Studies
Chennai

# சங்க இலக்கியத்தில் உயிர்நேயம்

முனைவர் (பிஎச்.டி.) பட்டப் பேற்றிற்காக
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

**ஆய்வாளர்**

**வே. கீதப்ரியா** , எம்.ஏ., எம்.ஃபில்.,

**நெறியாளர்**
முனைவர் **ஒப்பிலா மதிவாணன்**
உதவிப்பேராசிரியர்

**தமிழ்த்துறை**

**தொலைதூரக் கல்வி நிறுவனம்**

**சென்னைப் பல்கலைக்கழகம்**
சென்னை-600 005

**ஏப்ரல் - 2012**

# முடிவுரை

இயல்களில் பதிவு செய்யப்பட்ட மெய்ம்மைகளின் அடிப்படையில் கிடைத்த முடிவுகள் கீழே தரப்படுகின்றன.

சங்க இலக்கியங்கள் பழந்தமிழ்ச் சமூகத்தில் அகப்புற வாழ்க்கை தன்மையையும் உலக மக்களின் ஒற்றுமையையும் வலியுறுத்தும் கொள்கையுடையனவாக அமைந்திருக்கின்றன.

அக இலக்கியங்கள் அன்புணர்வை அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்டிருக்கின்றன. அன்பில் தலைவிக்கும் தோழிக்கும் இடையில் அமைந்த உறவு பொறுப்புணர்ச்சியுடன் அமைந்து இருக்கின்றது.

நற்றாய், தலைவி ஆகியோர்க்கு இடையிலான அன்பு சில பாடல்களில் கூறப்பட்டுள்ளன. தலைவன், தலைவி ஆகியோர்க்கு இடையில் ஏற்படும் அன்புணர்ச்சியையும் மனிதநேய அடிப்படையில் அமைந்து இருக்கின்றது.

மனிதர்களிடம் காட்டும் இரக்க உணர்ச்சியும் மனிதநேயத்தை காட்டுவதாக அமைந்துள்ளது. தலைவன் மீது தலைவி இரங்குதல், தலைவியின் நிலைக்கு தலைவனும் தோழியும் இரங்குதல் போன்றவை மனிதநேயம் மிக்கவையாக அமைந்துள்ளன.

பழந்தமிழ்ப் பாடல்களில் பசிக்கு இரங்கும் இரக்க உணர்ச்சி மிகுதியும் புறப்பாடல்களில் காணப்படுகிறது. போரில் சாதல் கண்டோர் இடையை இரக்க உணர்ச்சியை உண்டாக்குகிறது.

பெரும் துயர் நோய் கடும் உழைப்பு, மனத்துயரம் வறுமை ஆகியவற்றால் ஏற்படும் இரக்க உணர்ச்சி பழந்தமிழ் மக்களின் மனிதநேயத்தை காட்டுவதாக அமைகின்றன.

புலவர், இரவலர் ஆகியோரின் பசி போக்குவதற்கு மன்னர்கள் பெரிதும் முயன்றுள்ளனர். வறியவர்களுக்கு ஈகை செய்வது மன்னர்கள் கொடை திறம் கூறுவது ஆகியன மனிதநேயப் பண்புகளாகக் கூறப்பட்டுள்ளன.

நட்பாதலில் சிறந்த பண்பு அமைந்திருந்தது. தோழிக்கும் தலைவிக்கும் புலவர்களுக்கும் அரசர்களுக்கும் சிறந்த நட்பு இருந்தது. அரசர்கள் புலவர்களிடம் காட்டிய நட்பு மனிதநேய பண்பாக வெளிப்படுகிறது.

பண்டைய தமிழ் மக்கள் தாவரங்களை தம் உயிர்போல் கருதி வந்தனர். பிற விலங்குகளால் இயற்கைச் சீற்றம் போன்றவற்றால் தாவரங்களுக்கு அழிவு ஏற்படும்போது மக்கள் அவற்றின் மீது இரக்கம் கொண்டனர்.

மலர்களுக்கு அழிவு ஏற்படும் போது அதற்காக மனம் இரங்கியதை புலவர்கள் பாடியுள்ளனர். மலர்களை அழிவுபடாமல் பாதுகாத்ததைப் பழம் பாடல்களில் காணமுடிகிறது.

வெய்யிலில் மலர்கள் வாடியதற்கு புலவர்கள் வருந்திப் பாடியுள்ளனர். மழையால் சிதைவுற்ற மலர்கள் விலங்கு, வண்டுகள் ஆகியவற்றால் இன்னல் உற்ற மலர்கள் என மலர்கள் பலவாறு சுட்டப்பட்டுள்ளன.

பண்டைய தமிழர்கள் மரத்தைப் போற்றி பாதுகாத்து உள்ளனர். தெய்வமாக வழிபட்டனர். காவல் மரமாக அமைத்தனர். விலங்குகளால் மரங்கள் சிதைவுற்றதையும் வெயிலில் காய்ந்ததையும் புலவர்கள் இரங்கி பாடியுள்ளனர்.

பிற உயிர்களால் மரங்களும் தாவரங்களும் அழிவுறுவதைத் தடுப்பதற்குப் பாதுகாப்பு முயற்சிகள் செய்யப்பட்டன. நெற்பயிரை உயிர் என்று போற்றி உள்ளனர்.

கனிகள் மருந்து வகை தாவரங்கள் ஆகியவற்றின் பயன்கள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

விலங்குகள் பண்டைத் தமிழரின் வாழ்வில் முக்கிய இடம் பெற்றிருந்தன. விலங்குகள் மீது இரக்க உணர்ச்சி விலங்குகளைப் பாதுகாத்தல், அவற்றின் செயல்களைப் போற்றுதல், பயன்களை உணர்தல் ஆகியவை விலங்குகள்பால் மக்கள் கொண்டிருந்த நல்மனப்பான்மையைக் காட்டுகிறது.

எருது, பசு போன்ற விலங்குகள் உயர்த்திக் கூறப்பட்டன. இவற்றைப் பாதுகாப்பதற்கென்று தனி இடங்கள் அமைக்கப்பட்டு இருந்தன.

பண்டைய தமிழர்கள் யானைகளை (களிறு) போருக்குப் பயன்படுத்தினர். எருமை போன்ற விலங்குகள் இயல்பாக வளர்க்கப்பட்டன. எருமை கன்றுகளை பாதுகாப்புடன் மக்கள் வளர்த்தனர். வயது முதிர்ந்த காளைகளை உழவுக்கு பயன்படுத்தாமல் தனி இடத்தில் பாதுகாத்தனர்.

பசுவுக்கு இன்னல் செய்வது தவறு என்று கருதப்பட்டது. குரங்குகளை குழந்தைகளிடம் விளையாட விட்டு வளர்த்தனர். யானைகள் பரிசுப் பொருள்களாகத் தரப்பட்டன.

வேட்டையாடுவதற்கு நாய் பயன்பட்டன. விலங்குகள் வீட்டு விலங்கு, காட்டு விலங்கு எனப்பிரித்தனர். பெரும் பகுதி விலங்குகள் பயன்படுத்தப் பட்டன.

பசு கன்றுகளை விலங்குகளைப் பாதுகாத்தலில் பெண்களுக்கு முக்கியப் பங்கு உண்டு.

பண்டைய தமிழர்களின் பொது ஒழுக்கத்தையும் நடத்தை முறைகளையும் சமூக மதிப்புகளைப் பின்பற்றிய முறைகளையும் பெண்களை மதித்துப் போற்றியதையும் கற்றோரை மதித்ததையும் மனிதநேயத்தில் அடக்கி தனித்து ஆராய வாய்ப்புகள் நிரம்ப உள்ளன.